ஞூவ, காலமே போலக்கொண்ணீ யச்செயல் கடவுட்க ணேணே. (௯0)

| | |
|---|---|
| (இ-ள) சேமோ வுலகம்போ லத தெரிப் பரிது | அநகக் கர்த்தாவினுடைய சுபாவததை விசாரிககுமிடதது மூாதக மாகையாலுஞ செயல் காணபபடாதபடியாலு மினனபடி யெஎ றாவிட்டுச சொல்லுதறகரிது, |
| அதனுநிர்குங் கோலமு மறிவா ரில்லை | அதலா லவனது சொரூபததையு மவனிற கு நிலைமையினையு மொருவராலு மறாவிட்டுச சொல்லுகற கரிது; |
| ஆயினுங் கூற க்கேணீ | ஆனாலு மவனது நிலைமையை யாஞசொ ல்வாம, அதனைக் கேடபாயாக |
| ஞாலமே மூ னையுந்தநது நிறு ததிப்பின ஞசம பணணுங் கால மே போலககொ ணணீ யச்செய ல் கடவுட் கண ணே | பூலோகம புவலோகம சுவலோகம மகா லோகம சனலோகம் தபோலோகம் சததி யலோகமெனக கூறிய வேழுலோகஙகளையு ஞ சிருட்டிததுத திதிததுச சஙகரிததுஞ் செய்கை கூடிநிற்கிற காலமெபபடி வடிவற றிருநதும எபபடி பலததைககொடுககுது, அதுபோலச சிவனு மமூாததனாயினு மனனி ச்சாசததியாலே சகததைப பணணுநிற்பன |

ஞால மேழினையும் எனற உம்மையால் அகலவிநல முச்சி ய வேழினையு மெனவறிக.

ஓகார மெதிர்மறை.

உம்மை எதிரது தழீஇய வெச்சவும்மை.

ஏகாரம் ஏற்றசை.

இதற்குக் கிரணகம மெனவறிக. (௧௨)

# சிவாக்ரயோகியருரை வருமாறு.

——0——

மேல் கர்த்தாவினுடைய நிலைக்குஞ் செயற்கு முதாரண முரைத்தல்.

நிலமோவுலகம்போலத் தெரிப்பரிதாகனிற்குங் கோலமுமறிவாரில்லை - பரமேஸ்வரனுடைய சரித்திர முலோகத்திலுண்டாகிய பிரமாதிதேவர்களைப்போலத் தெரிப்பரிது, அதனாலப் பரமேஸ்வரனுடைய நிலைபெற்றஸ்வரூபத்தையும் நிற்குநிலைமையும் ஒருவராலு மறியப்போகாது,—ஆயினுமக்கூறக்கேணீ - அப்படி பிரத்தியக்ஷமாகக் காணப்படாதாயினுந் திட்டாந்தத்தினாற் சொல்லுகிறோம் நீ கேள்,—ஞாலமேழினையுந்தந்து நிறுத்திப் பின்றுசம் பண்ணுங் காலமே போலக் கொண்ணீ - எழுவகைப் பிறப்பினுகிய ஜந்துக்களை நிறைந்த பூலோகமுதலிய ஏழு பிரபஞ்சத்தை யுண்டாக்கி நிலைபெறுவித்து அழிக்குங் காலமே போல, சிவனு மருபமுமாய் வியாபியுமாய்நின்று பண்ணுவனென்று நீயறிந்துகொள்,—நிலைசெயல் கடவுட்கண்ணேயே - சிவனே சர்வாதாரமுமாயிருக்கச் சர்வமுஞ் சிவனிடத்திலேயே நிலைபெறுமென்றிதன்பொருள்.

கடவுட்கண்ணே யென்னும்ஏகாரத்தினாற் சிவனிடத்திலெல்லா மிருப்பதனறிச் சிவனுக்கோ ராதாரமில்லை யென்றது

[illegible]

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

---o---

கர்த்தா நிற்கும் நிலைமையை நிர்வசனிக்கின்றார்.

சிலமோ வுலகமபோலத் தெரிப்பரிது - பரமேசுவரனுடை யசரித்திரம உலகத்திலுண்டாகிய பிரமாதி தேவர்களுக்குப் போலச் சொல்லுவது தல்லபம, அமூர்த்தமாகையால்,—அத னு னிற்குங் கோலமுமறிவாரில்லை -ஆகையால், இந்தப்பரமேச் வரனுடைய சகளவிக்கிரக தடதலக்ஷணத்தையுங் காண்பாரி ல்லை,ஸ்வரூபலக்ஷணந்தானெனபது சொல்லவேணடுமோ!—ஆ யினுங் கூறக்கேணி-அப்படியிருந்தாலுஞ் சொல்லுகிறோம் நீங்க ள,—ஞாலமேழினையுந் தநது நிறுத்திய பிரபஞ்சம் பண்ணுங் காலமேபோல - தாத்துவிக சகலபிரபஞ்சத்தையுந் தோற்று வித்து நிறபித்துட்போக்கும், அமூர்த்தமாய், அபபிரத்தியட்ச மாய, நிராதாரமா யிருக்கும் காலமேபோல,—கடவுட்கண் ணே - காரியம்பண்ணும் சிவனிடத்திலே,—நிலைசெயல் கொ ளணீ - நிராகரமாய்நிற்கு முறைமையுஞ் சங்கறபமாத்திர ச னனிதானத்தாற் கிர்த்தியம நிசழுதன முறைமையுங் காண் பாயாக.

அபபோ காலத்துக்குப்போற் புக்கிமற் கர்த்திருத்துவம பொருநதுவ தினறெனனின ? அப்படிச்சொல்லவேண்டாம. காலமெனபது அமூர்த்தமாய் ஸ்வதேகத் தசைவுபண்ணும் ஆன்மாவைப்போலவென்று போததிப்பது.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

---o---

அவன் உலகம்போலனறி வாக்குமனாதீத கோசரப்பொ ருளாகலான, அவனிற்கு நிலையும் அயவியல்பிற்றேயாம்; அங்

ணமாயினும், ஒருவாற்று னுவமையில் வைத்து உனக்குக் காட்டுதும். உலகமெல்லாங் காலத்தாற் காரியப்படுமென்பது எல்லார்க்கு மொக்குமன்றே, அக்காலம் அவற்றைக் காரியப்படுத்துங்கால் எல்லாபொருட்குந் தா னாதாரமாய்த் தனக்கோராதாரமின்றி நிற்றல்போல, சிவசத்தியும் நிராதாரமாய் நின்றே காரியப்படுத்துமுறைமை உணர்ந்துகொள்க வென்பதாம்.

சீலம் தன்மை.

ஓகாரம சிறப்பின்கண் வந்தது.

சோலமுமென்ற உம்மைஇறந்தது தழீஇயற்று.

ஞாலமொழியென்றது உபலக்கணம்.

கண் அறிவு

ஒற்றுமைபற்றிச் சிவசத்திமேல் வைத்துக் கூறினார்.

உயர்திணைக்கட் சிறுபான்மை ளகாரந் திரிதல், மக்கட்பண்பு முதலியனபோல இலேசாற் கொள்க.

நிலைசெயலென்பது நிற்றலெனனும் பொருட்டாய் இரண்டாவது தொக்குநின்றது அற்றேல் ஞாலமொழியுந் தந்து நிறுத்திப்பின் ஞசம்பண்ணுங் காலம், அததொழில் வேறுபாடுபற்றிச் செல்காலம் நிகழ்காலம் எதிர்காலங் கணம் இலவங்குடியென்றற் றொடக்கத்தனவாயப் பலவகை யவத்தைப்படுமென்பது சித்தாந்த நூற றுணிபாகலின், அதுபோல உலகத்திற்காதாரமாய் நின்றுசெய்யு முதல்வனும் அவ்வத்தொழில்பற்றிப் பலவகையவைத்தப்பட்டுந் தடக்குறுவனபொலு மெனின? அதற்கன்றே வருஞ் செய்யு ளெழுந்ததென்பது.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

—o—

கர்த்தாவினுடைய வுண்மை பிரவஞ்சத்தின முறைமைபோலச் சொல்லுதற் கரியதெனகிரமுறைமையை மேலருளிச்செய்கிறார்.

சிலமேயுலகம்போலத் தெரிப்பரிது - அந்தக் கர்த்தாவினு டைய சுபாவம் பிரபஞ்சத்தை யிதுவென றறுதியிட்டுச் சொல் லுதற் கெளிதல்ல,—அதனால் நிற்கும் கோலமு மறிவாரில்லை - அப்படியிருக்கையினாலே அவனுடைய நிலைபெற்ற சொரூபமும் ஒருவ ராலறியப்படாது,—ஆயினுங் கூறக்கேளினி - ஆனாலுஞ் சொல்ல நீ கேட்பாயாக,— ஞாலமேழினையுந் தந்து நிறுத்திப் பின்னுஞ்சமய மனுங் காலமேபோலக்கொள்நீ நிலைசெயல் கடவு டகணினை - ஏழுமண்ட லென்னப்பட்ட உலகங்களை சிருட டித்தும் திதித்தும் சங்கரித்துஞ் செய்கைக்குங் கூடிநிற்கிற காலங்களி னுண்மைபோல, கர்த்தாவினுடைய வாசகினையினது நிலையும் அவனுடைய நிரதிசயங்களையும் புத்தி பண்ணுவா யாக

இதற்குப் பிரமாணம் பரபக்ஷம, அவனை மறுப்பு "கா ரியமா யுலகமெலா மிருத்தலாலே கடாதிகளேபோற் காரிய கர்த் தாவொருவனவேண்டு, மாரியமா யறுபொருளோ டின்பமினி டெல்லா மறைந்துயிர்கட் கறிவுசெயலளிப்பதுநூ லந்நூல், கூ ரியராயுள்ளோர்க ளோதவோதிக் கொண்டுவரலான முனனே குற்றமிலாறிச், சீரியபே றறிவுடையோனா செப்பவேண்டுஞ் செ யலிறுசருங் கரிவேண்டுஞ் சிவனானெனறறியே". என்னுமதுங் கண்டுகொள்க

சித-பர-சௌ-மறு, நசு-செ

இசனுற சொல்லியது கர்த்தாவினுண்மை பிரபஞ்சத்தினு ளள முறைமைபோல அறிதற் கெளிதல்லவெனறும, ஆயினுஞ் சொல்லுமிடத்தில் உலகங்களெல்லாந் தோனறுகைக்கும நிற் கைக்கும் ஒடுங்குகைக்குங் கூடிநிற்கிற காலங்களின முறைமை போலத் தனனுடைய வாசகினையாலே எல்லாக் கிருத்தியங்களை யுஞ் செய்வன எனகிற முறைமையு மறிவித்தது.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

—೧—

சீலமோவுலகம்போலத் தெரிப்பரித்தனுல்- அவனறனமை யுலகம்போலனறி வாக்குமனதீதகோசரப்பொருளாகலான,— நிற்குங்கோலமு மறிவாறில்லை - அவனிற்குநிலையு மவவியல்பிற் றேயாம்,—ஆயினுங்கூறக்கேணி - அங்ஙனமாயினு மொருவாற்ரு னுவமையில் வைத்து உனக்குக்காட்டுதும,—ஞாலமேழினையுந்த ந்து நிறுத்திப்பினருஞ்சம்பணணும காலமேபோல - உலகமெல் லாங் காலத்தாற் றேனறி நினறு மழிந்துங் காரியப்படுமென டெல்லோர்க்கு மொசக்குமனறே! அக்காலமவற்றைக் காரியப் படுத்துங்கா லெல்லாப்பொருட்குந் தான ஆதாரமாய்த் தனக் கோராதாரமினறி நிற்றல்போல,—கடவுட்கண் - சிவசத்தி,— நிலைசெயல்கொணணீ - நிராதாரமாய நினறே காரியப்படுத்து முறைமை யுணாந்துகொள்க வென்பதாம்

---

## மறைஞானதேசிகர் உரை.



அசரீரியுமாய் நிர்விகாரியுமுமா யிருக்கிற சிவன சி
ருட்டியாதிகளைச செய்யுமதற்குத திட்டாநத
பூர்வமா யவனைமறுத துணாத்துகிறூர்

கற்றநூற் பொருளுஞ்சொல்லுங் கருத்தினி லட
ங்கித்தோன்றும், பெற்றியுஞ் சாகிராதி யுயிரினிற
பிறங்கொடுக்க, முற்றதும் போலவெல்லா வுலகமு மு
தித்தொடுங்கப், பற்றொடு பற்றின்றி நின்றனன் பர
னமன்றே. (ருக)

(இ-ள்.) கற்றநூற் பொருளுஞ்சொல்லுங் கருத்தினிலடங்கித்தோன்றும பெற்றியும — யாதாமொருவன் கற்கப்பட்ட வேதாகமங்களின சததமதத்தமாகிய விரண்டினையுங் கற்றவனறிவிலே யிருந்து வருத்தமற வவனிடத்திற்றோன்றி யொடுங்குமுறைமை போலவும,

சாக்கிராதி யுயிரினிற பிறந்தொடுக்க முற்றதுமபோல — சாக்கிரமுதலிய வவத்தைகளைந்து மான்மாவினிடத்தே ப்ரயாசமற வொடுங்கித் தோனறுகிற முறைமைபோலவும,

எல்லா வுலகமு முதித்தொடுங்கப் பற்றிருடபரற்றினறி நின்றனன் பரனுமன்றே — நிர்விகாரியான சிவனறன சன்னிதிமாத்திரத்திலே யெல்லாப் பிரபஞ்சங்களையுந தோற்றி யொடுக்கினுனேயாயினுந் தானொரு செயலுஞ் செய்யாது பணியறநிற்பன. எ-று.

"அனறெனகிளவியு மின்றெனகிளவியு மாருமென்ப."
இதறகு விசுவாசோத்தர மெனவறிக. (நடக)

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

———()———

எல்லாஞ் சிவனிடத்தில்நிறப தெவ்வாறெனின்.

கற்றனூற் பொருளுஞ்சொல்லுங் கருத்தினிலடங்கித்தோனறும் பெற்றியும் - படிக்கப்பட்ட சாத்திரங்களிற் சத்தமுமர்த்தமும, நினைக்கும்போது தோன்றி யல்லாதநேரந் தோனறாத முறைமைபோலவும்,—சாக்கிராதி யுயிரினிற்பிறந்தொடுக்க மு

ற்றதும்போல - சாக்கிராதியவத்தைகளிற் கருவிக ளான்மா வினிடத்திற் கூடிப் பிரிந்தொடுக்க முற்றதுபோலவும். [சாக்கி ராதியென்றது ஆகுபெயர்]—எல்லாவுலகமு முதித்தொடுங்கப் பற்றும்பற்றதின்றி நின்றனன பரனுமன்றே - பிரபஞ்சமெல் லாந் தோன்றிநின்றொடுங்கப் பிரபஞ்சத்திற் றன்பற்றுதலின் றி, அதிற்பற்றிய வான்மாவினோடே தானைந்நியமாகப் பர னொருவனே நின்றனன் என்றிதன் பொருள்

கற்றனூற்பொருளுஞ் சொல்லுங் கருத்தினிலடங்கித்தோ ன்றல்போல வென்றது சிவன் பிரபஞ்சத்தையின்னபடி யுண் டாக்கவேண்டுமென்று நினைத்தபொழுதுண்டா யல்லாதபொ ழு தில்லையாதலுக்குத்திட்டாந்தம்.

சாக்கிராதி யுயிரினிற் பிறந்தொடுக்க முற்றதுபோலவென் றது சத்தா உதயுத்தா பிரவிருத்த ரவசரங்களிற் சத்திக ளபிவ்யத்தியானதற்கு மந்தர்க்கதமானதற்குந் திட்டாந்தம்

ததுக்தம் தத்வப்ரகாசே — ஸ்ருஷ்டிஸ்திதி ஸம் ஹாரதி.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

———0———

சிவசங்கற்பத்தான மாயையில் விகாரமாய்ச் சிவனுக்கு விகாரமின்றிப் பிரபஞ்சந்தோற்று முறைமையை விரிக்கின்றார்.

கற்றனூர்பொருளுஞ் சொல்லுங் கருத்தினிலடங்கித்தோ ன்றும் பெற்றியும்-முன்படித்துப் பழகிய சாத்திரச் சொல்லனு பூதி பொருளனுபூதிகள் புத்தியிற் கூட்டிய வாசனையொடுங்கிக்

கண்ணெழுத்திலையபு முதலிய காரணத்தில், திரும்ப அந்தவாச னை கிளம்பி மதியினினைவு வருவிக்க, நினைத்தவரு வுயிர்த்தனை வி மனத்தி லிச்சிக்க, சூக்குமைவாக்கிற் சொல் முனைதோற்ற, மதிமணிவிளக்கினமலர்ந்த சிற்சத்தியிற் சொல்லனுபூதி பொருளனுபூதிகள் பின்றோற்றுமுறைமையுற போல,—சாக்கிருதி - சாக்கிரமுதலிய அவத்தைகளைந்தும்,—உயிரினிற்பிறந்தொடுக்க முற்றதும்போல-அருவாகி நிமித்தனாகிய வானமாவிற் பொருந்திய கருவிகளிற் றமோகுணங் கிளம்பிக்கிளம்பி மெள்ளமெள்ள மேலிடமேலிடச் சத்துவகுணஞ் சற்றே சிறசத்தி மனச்சலசற்பதத்தோடு குன்றிக்குன்றி மூவர் முறைமையிற் றோற்றி, திரும்பத் தமோகுண சத்துவகுணங்களின் தோற்றுதல் குறைதல் மாறிவர மறைந்ததும் போல,—பரனார்-சிவனும்,—எல்லாவுலகமு முதித்தொடுங்க - சகல காரிய பிரபஞ்சமுற்றும மாயையிற் றோற்றியழிய, அந்தப் பிரபஞ்சத்தோடு,—அன்றே - அநாதியே,—பற்றொடு பற்றின்றி - தனது சத்தியாகிய சொரூப காரணத்தினது சத்திய சங்கற்பத் தொழிலாகிய சன்னிதிச் சொரூப சமட்டியாய் நின்று, கடத்தொடுகொட்டு கணைகொடுபிடித்த தண்டசக்கிராதி கடத்தினைசெய்தொழிற் சம்பந்திபோற் சம்பந்தியன்றி,— நின்றனன - வியாபித்திருப்பன

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

——0——

கரணங்களாலாகிய சாக்கிரமுதலிய வவத்தைகள் ஆன்மாவிலொடுங்கித் தோன்றும்வழி ஆன்மாவும் அவத்தைப்படத் தடக்குறுதல்போல,முதல்வன எல்லாவுலகமுந் தனபாலொடுங்

ஐயுதிப்பத் தானுமதுபற்றி இலயம் போகம் அதிகாரமெனனும் அவத்தைப்படுத்த தடக்குறுவோனுசியும், கற்றநூற்பொருளுஞசொல்லும் வாதனுரூபமாய்ப் புத்தித்த்துவத்தை பொடடிநின்று ஆனமபோதத்தினகண் ஒடுங்கித தோனறும்வழி அவவானமபோதம் அதுபற்றித் தடக்குருகவாறுபோல, ஆணடுத் தடக்குறுதலின்றியே நின்றனனெனபதாம்.

எதிராகிரணிலறையாககொளக

எண்டுக கருத்தெனறது உயிருணர்வை

பற்று முதனிலைதகொழிறபெயர்

இவைமூனறு செய்யுராணும மண்ணினினமேமருவிடு மென்றது தடைவிடைகளாற் றெறிததுணாதத்தப்பட்டது

இவைபுபற்றி இதனைமுலைவைததார்.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

—0—

நிருவிகாரியா யிருககிற கத்தா சிருட்டி திதி சங்காரமென்கிற மூனறு தொழிலையுஞ செய்யுமிடத்து அவனுககுப் பாரமாசாதோவென்ற ஆசீவசன சொல்ல, அதனை மறுதது மேலருளிச செய்கிறா

கற்றநூற் பொருளுஞ சொல்லுங் கருத்தினி லடங்கித தோன்றும் பெற்றியும்- கற்கப்பட்ட சாதகிரங்களிற் சத்தமுமத்தமுமிரண்டும ஆனமாவினுடைய வறிவிலேயொடுங்கி யுண்டாகிற முறைமையும்,—சாககிராதி யுயிரினிற பிறங் தொடுககமுற்றதும்போல - சாக்கிரமுதலான அஞ்சவத்தைகளும் ஆன்மாவினிடத்திலே தோனறியொடுங்குகிற முறைமைபோல,—எல்லாவுல

கழு முதித்தொடுங்கப் பற்றொடுபற்றின்றி நின்றனன் பரனும்
னன்றே - அந்தக் கர்த்தாவுந் தன்னாலே எல்லாப் பிரபஞ்சமுந்
தோன்றி யொடுங்கும்படி தான் கூடிநிற்கையிலேயுந் தனக்கொரு
பணியாநின்ற முறைமை; ஆன்மாவினறிவிலே சத்தார்த்தங்க
ளொடுங்கித் தோன்றுகையிலும் நினைவுமாத்திர மொழிந்து அந்
தறிவுக்கொரு பாரமற்று நின்றாற்போலவும், ஆன்மா அஞ்சவத்
தைப்பட்டு அவத்தை நீங்கி விழித்தவிடத்து அந்த வவத்தையி
னுக்கு நினைவுமாத்திரம் மெய்யாயப் பயனில்லையானாற் போலவு
ம், கர்த்தாவும் சிருட்டி திதி சங்காரமென்கிற மூன்று தொ
ழிலையுஞ் செய்கச் செய்தேயும் அவனுக்குப் பாரமற்றுநின்ற முறை
மையும் இத்தன்மையது

இதற்குப் பிரமாணம் சிவஞானபோதம் "நோக்காது
நோக்கி னொடித்ததன்றே காலத்திற், றாக்காது நின்றுளத்திற்
கண்டிறைவ-னாக்காதே, கண்டநனவுணவிற் கண்டகனவுணர
க், கண்டவனி லிற்றினருங் கட்டு" என்னுமது கண்டுகொள்க.

சிவ-போ, க - கூ, ச-செ

இதனாற் சொல்லியது, கர்த்தா சிருட்டி திதி சங்காரமெ
ன்கிற மூன்று தொழிலையும் செய்யுமிடத்துந் தனக்கு பாரமற
நின்று செய்வனென்னு முறைமை அறிவித்தது

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

——0——

சாக்கிராதி - கரணங்களானாகிய சாக்கிரமுதலிய அவத்
தைகள்,—உயிரினி லொடுக்கமுற்றும் பிறந்ததும்போல - ஆன்
மாவினொடுங்கித் தோன்றும்வழி யான்மாவுமவத்தைப்பட்டுத்
தொடக்குறுதல்போல.—பரனும் - முதல்வனும்,— எல்லாவுலக

முதித்தொடங்க - எல்லாவுலகுந் தன்பாலொடுங்கியுதிப்ப,— பற்றொடுநின்றானை - தானுமதுபற்றி யிலயமபோக மதிகாரமென்று மவத்தைப்படுத்த தொடக்குறுவோனாகியும்,— கற்றநூற் றாருளுஞ்சொல்லுங் கருத்தினிலடங்கி - கற்றகற்றநூற் பொருளுஞ்சொல்லும் வாதனாரூபமாய்ப் புத்தித்தத்துவத்தை பொட்டிநின்றனம போகத்தினகண் ஒடுங்கி,— தோன்றும்பெற்றியும்போல - தோன்றும்வழி யவ்வான்ம போக மதுபற்றித்தொடக்குறுத வாறுபோல — பற்றின்றி நின்றானை - ஆண்டுத்தொடக்குறுதலின்றியே நின்றானை யென்பதாம்.

இவைமூன்று செய்யுளானு மனிநின்றே மருவிடுமென்ப தினைத் தடைவிடைகளாற் றெரிந்துணர்த்தப்பட்டது

## மறைஞானதேசிகர் உரை.



புத்த னவத்தையிலொடுங்கின வானமாககண் மீளவுந்
தோன்றுவா னேனென்று சொல்ல,
மறுத் துணர்த்துகின்றார்.

உயிரவை யொடுங்கிப்பின்னு முதிப்பதென் னரன்பாலென்னிற்,
செயிருறு மலத்தினுக்குச் சிதைந்ததே தென்னிறசித்தத்,
தயர்வொழி காரியங்க ளழியுங் காரணங்கிடக்கும்,
பயிறரு காரியம்பின் பண்டுபோற் பண்ணுமீசன். (௫௨)

(இ - ள்.) உயிரவை யொடுங்கிப் பின்னுமுதிப்பதென் னரன்பாலென்னில் — பரமேசுரன் சந்நிதியிலே யழிந்துபோன விப்பிரபஞ்சமுமானமாக்களு மறித்துத் தோன்றுவதென் என்று கேட்கிறாயாகில்,

| | |
|---|---|
| செயிருறு மல த்திருக்கும் | குற்றத்தைப் பொருந்திய வாணவமலங் காரணமாக வுண்டாகாநிற்கும். |
| சிதைந்த தே தெனில் | ஆறு லான்மாக்களுக்கு மலங்களுக்கு ம ழிவில்லாதிருக்குமாயி னந்தச் சங்காரந்த னிற் சங்காரப்பட்ட தேதென்று நீ சொ ல்லி லு? |
| சிதைந்த் தயர் வொழி காரியங் களழியும் | ஆன்மாவினது ஞானக் கிரியைகளை சீவி பிக்கின்ற காரியரூபங்களழியும் |
| காரணங் கிட க்கும் | காரியத்தை யுண்டாக்கப்பட்ட காரண மழியாது நிற்கும் |
| பயிறரு காரிய ம் பின் பண்டு போற் பண்ணுமீ சன. | அந்தக்காரணங் கிடக்கையாலே யந்தக் காத்தா செய்யத்தக்க காரியங்களை மீண்டு முன்புபோல் சிருட்டிகளை யுண்டாக்காநிற் பன. எ-று. (௬௨) |

---

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

---o---

மேல் ஜநககாரண முணர்த்துதல்.

உயிரவையொடுங்கிப் பின்னுமுதிப்பதெ னரன்பாலென்னி ல் - ஆன்மாவானவைகள் சாவசங்கார காலத்தி லன்னமயம் ப்ராணமயமநோமயமாகிய கோசத்திரயமுஞ் சம்ஹாரத்தையு டைய விவையிரறைச் சம்ஹாரமபண்ணின அரனிடத்திலொ டுங்கின முத்த னென்று திரும்ப வுற்பத்தி சொல்லுங் கா ரண மேதெனின் ?— செயிருறு மலத்திருக்கும் சிதைந்ததே

செனின்-குற்றமாகியவாணவமலநீங்குவதே மோக்ஷம், மலநீங்
காமற் றனுவாதி யுபசம்ஹாரப்படுகையாற் சிவனுடன்கூடியிரு
ந்து சிவானுபவம் விளங்காது காரணத்தினாற் புனருற்பத்தி
யாகவேண்டியது, ஆம்பொழுது கோசத்திரயமு நாசத்தை
யடைகையா லெவ்வா றுண்டாமெனின்?—சித்தத் தயர்வொ
ழிகாரியங்க ளழியுங்காரணங்கெடச்சும் - ஆன்மாவி னியாவெ
னனு மஞ்ஞானத்தை நீக்கு மாயாகாரியங்கெடுங் காரணமாகி
யமாயை சம்ஹாரகாலத்தினு நிற்குமாகலால்,—பயிரருகாரிய
மபின பண்டுபோற்பண்ணுமீசன - அம்மாயை யைக்கொண்டு பூ
ர்வம்போலச் சங்காரத்திற்குப்பின்புந் தனுவாதி காரியங்களைப
பரமேஸ்வரன் பண்ணுவனென் றிதன்பொருள்.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—o—

சித்துக்கும் அசித்துக்கும் தோற்ற மொடுக்கஞ் சாத்திர
ஞ் சொல்லுமாகலான் மாயையிற் றோற்ற மொடுக்க முயிர்க்
கு மதிக்கப்படாது, சித்துக்குச் சடத்தன்மை வருமாதலாலே
பாரிசேடத்தாற் சிவனிடத்திற் செப்பவேண்டும், சிவனிடத்
தொடுங்கினால் முத்தி யடைந்து போகாமற் றிரும்பச் சித்துதிப்
பானேனென் றாசங்கித்துப் பரிகரிக்கின்றார்.

உயிரவை யொடுங்கிப் பின்னு முதிப்பதெ னரன்பாலென்
னில் - சிவனிடத்திற் சித்துக்குத்தோற்ற மொடுக்கம் பிரமத்
தில் நாராயணப் பிரகிருதியிற் பரிணத வேதாந்தி பாஞ்சராத்
ராத்திரிபோல, சித்தாந்திகள் செப்பார்கள். பின்னெப்படி?—
செயிருறுமலத்தினுக்கும் - ஆன்மாக்களுக்குத் தோற்றமொடுக்க
ம் மாயையிற் கலாதிதத்துவங்க டோற்றி யொடுங்கக் கட்டவி

ட மோகமுற்ற மல மொருபிரதேசத்தில் நீங்க மறைக்க, அத ஞல் ஞானக்கிரியைகள விளங்க மறைய உபசரிக்கப்படும விகா ரமின்றி, ஞானக்கிரியைகட்குக கலையினுல் விளங்குதல், மல த்தினுன மறைதல், சித்துக்கு ஜநந மரணம சிவனிமித்த மா தலால் அரனபாலென றுபசரிக்கப்பட்டது சடத்துக்குச் சி வசங்கற்பத்தால் விகாரமாய்த் தனதுகாரண ரூபத்திற் காரி யரூப மறைதல், காரணரூப மறையக காரியரூபம விளங்குக ல், நாச முற்பத்தி,—சிதைந்த தேதெனனில் - ஆணவ முதலி ய மலங்களிருக்கிற சங்கரிக்கப்பட்ட தேதெனில்,—சித்தத்த யர்வொழி - மனசில மயக்கத்தைவிடு,—காரியங்களழியும-காரி யப்பொருளொடுங்கும,—காரணங் கிடக்கும் - முத றுணை நிமி த்தமெனகின்ற காரணத்திரய மிருக்கும அதனுல்,— பயிரரு காரியங்களபின பணடுபோற் பண்ணுமீசன - சிவனிமித்தகார ணனுய் நின்று போசகபோக்கியங்களாக முனபழகிய காரியப் பொருள்களை முந்திய சிருட்டியிற போல முதற்காரணத்தினி னறு துணைக்காரணத்தினுற் ருேற்றுவிப்பன.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

—o—

இனி ஐறுசெய்யுளான் ஈறுமாகி மருவிடுமென றதனை வலியு றுத்துகின்றுர

ஈருசியோனு லீறெய்திய வுலகம் ஈரெய்தியவாறே யொழி யாது மீளவுமவனபானினறு தோனறுதல் எற்றுக்கெனின ? மலபரிபாகம வரும்பொருட்டுத் தோனறும். அஃதேன், மீள வுந்தோனறற்பாலது முனனழியாது நிலைபெறவே யமையும். அவ்வாறன்றி அழித லெற்றுக்கெனின ? உயிரினிளைப்பு ஒழித்த

ற்பொருட்டு. முன் இளைப்பினைச் செய்துநின்ற காரியங்கள் அழியுமாகலான, அழிந்தவழியும் முனனை வினைததொடர்ச்சிக்குறியனவாய்த் ததகவ காரணங்களிற் கனமதநோடு பயினறு கிடக்கினற அககாரியங்களை ஒடுங்கியவாறே உதிககச செய்வனெனபதாம்.

ஆகக மவவவர் கனமமெல்லாங் கழிததிடல் என முனனர்க் கூறுவாராகலின, அதற்குறியவிபைபு ருண்டயுணர்ததுவாா காரணஙகிடககும பயிறருகாரியமபின பண்டுபோறபண்ணுமீசன எனருர்.

உயிரவை உயிரோடுங் கூடிய உலகமென்றவாறு
ஏதெனபது எற்றுககெனனும் பொருட்டாய் நினறது.
சிதககததயர்வு அறிவினகணணதாகிய இளைப்பு
உழிபவெனனும் வினைபெசசததகரம் விகாரததாற்றெக்கது
கிடக்குமென்பது பெபரெச்சம.
இதறகுப பிறரெல்லாஞ் சற்காரியத் தியல்பினவைதது க் கூறியதுகூறலெனனும் வழுப்படவுரைததாா.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

——o——

புக்தன உம்முடைய கர்ததாவினிடத்திலே யொடுங்கின ஆனமாககள மீளவுந் தோனறுவா னெனனெனறுசொல்ல, அவனை மறுத தருளிச் செய்கிறுர்.

உயிரவையொடுங்கிப் பின்னு முதிப்பதெ னரன்பாலென்னில் - கர்த்தாவினிடத்திலே யொடுங்கினவானமாக்கள் மீளவுந தோனறவேண்டுவானேனென்று நீ சொல்லில்,—செபிருறுமலத்தினுலும்-குற்றத்தைப் பொருநதினஆணவமலங் காரணதத

மை நீக்கின மாயாகாரிய மழியுமென்றும், மீளவு மாயா காரண த்திலேநின்றும் பிரபஞ்சத்தைக் கர்த்தா வுண்டாக்குவானெ ன்னு முறைமையையு மறிவித்தது

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

———o———

ஈசன் - ஈருகியோனால்.—ஒடுங்கியுயிரவை - ஈறெய்திய வுயிரோடுங்கூடியவுலகம் பின்னும் ஈறெய்தியவாறே யொழி யாது மீளவும்,— அரனபாலுதிப்ப தெனனெனில் - அரனபா னின்று தோன்றுத லெற்றுக்கெனின்,—செயிருறு- குற்றமபொ ருந்திய,— மலத்திருக்கும் - மலபரிபாகம் வருதற்பொருட்டுத் தோன்றும்,—சிதைந்ததேதெனனில்-அற்றேல், மீளவுந் தோன் றறபாலது முன்னழியாது நிலைபெறவேயமையுமா, அவ்வாறனறி யழித லெற்றுக்கெனின்?,—சித்ததகாவொழிகாரியங்க ளழியு ம - உயிரி னிளைபபொழித்தற பொருட்டு முன்னிளைபபினைச்செ ய்து நின்ற காரியங்க ளழியுமாகலான் —காரணம் பயிருகி டக்கும் - அழிந்த வழியு முன்னை வினைத்தொடர்ச்சிக் குரியன வாய் தத்துவகாரணங்களிற் கன்மத்தோடு டாயினறுகிடக்கின் ற,—காரியப்பின் - அக்காரியங்களடைபின்பு,—மண்டுபோற் பல னும் - ஒடுங்கியவாறே யுதிப்பச் செய்வனென்பதாம்

---

## மறைஞானதேசிகர் உரை.

பஞ்சாராத்திரி யுமது கர்த்தா கிருத்தியஞ் செய்யுமி டத்து விகாரியாகானோ வென்ன, அவிகாரியெ னறு திருட்டாந்தமிட் டுணர்த்துகிறூர்.

தோற்றுவித் தளித்துப்பின்னுந் துடைத்தருடொ ழில்கண்மூன்றும், போற்றவே யுடையனீசன புகுந்த

து விகாரமென்னிற, சாற்றிய கதிரோனிற்கத் தாமரை யலருங்காந்தங், காற்றிடுங் கனலைநீருங் காந்திடுங் காசினிக்கே. (௯௯)

(இ-ள்) தோற்றுவித் தளித்துப் பின்னுந் துடைத்தருடொழில்கண்மூன்றும் போற்றவே யுடையனீசன — சங்காரனே சிருட்டிமுதலிய மூன்று கிருத்தியங்களையுஞ் செய்தற்குரியனென்றெல்லாராலுங் கொண்டாடத்தக்க மகிமையையுடையன.

புகுந்தது விகாரமெனில்? — விகாரியாவனென்று நீ சொல்லில்? அவன் விகாரியல்ல, அவிகாரியே! அஃதெனபோலவெனில்?

சாற்றிய கதிரோனிற்கத் தாமரையலருங் காந்தங் காற்றிடுங் கனலைநீருங் காந்திடுங் காசினிக்கே — இந்தப் பூமியினகண்ணே யவிகாரியாகிய வாதித்தன சந்நிதியிலே சூரியகாந்த மணிடையுமிழாநிற்கின்றது, முகுளித்தமான முளரியலராநின்றது, சலமானது மண்ணின்கண்ணே சுவறிச் செலலாநின்றது, இந்தமுறையிலே காத்தா வவிகாரியாய்நின்று பரபஞ்சத்தை நடத்துவான் எ-று (௯௯)

உவமை முற்றுமை

இதற்குப்பிரமாணம் விசுவசாரோத்தர மெனவறிக

---

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

—o—

மேல் சிவனிர்விகாரியென்ப துணர்த்துதல்.

தோற்றுவித்தளித்துப் பின்னுந் துடைத்தருடொழில்கண்மூன்றும் போற்றவேயுடையனீசன புகுந்தது விகாரமென

யில் - சிருஷ்டி திதி சம்ஹாரமென்கிற மூன்றுகிருத்தியத்தையு
மீசுவரன் பண்ணுவாராகில் அவனுக்கு விகாரமுண்டாயிற்றெ
ன்று சொல்லின்,—காசினிக்கே சாற்றிபகதிரோனிற்கத் தாம
ரையலருங் காந்தங்காறுமிழுங்கனலே நீருங்கரந்திடும்-அந்தக
னிர்விகாரியாய் நிற்க, விவ்வுலகின்கட் டாமரையானது விகசிக்
கும், சூரியகாந்தமானது அக்கினியையுமிழும், நீரானது சுவறிடும்,
இப்படிப்போலச் சிவனிர்விகாரியாய்நிற்கப் பிரபஞ்சமானது
விதமாக அவன சந்நிதிமாத்திரத்திற் காரியப்படுமென்றறிக

தத்ரோக்தம் - [illegible]
[illegible] ததா ஸந்நிதிமாத்ரேண [illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible] ||

தாமரையலருமென்றது- சங்கோசமாயிருந்தமாயை சிரு
ட்டிகாலத்திற் றனுவாதிவிகாசமாதலுக்குத் திட்டாந்தம

காந்தமனலேயுமிழுமென்றது- கன்மம ஸ்திதி காலத்திற் ப
லோதயமாதலுக்குத் திட்டாந்தம

நீருவறுமென்றது- சங்காரகாலத்திற் பிரபஞ்சமொடுங்கு
தற்குத் திட்டாந்தம.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

---

சிவன் கிருத்தியகிருத் தானாலும் விகாரியல்லனென்று வி
ளம்புகின்றார்.

தோற்றுவித் தளித்துப் பின்னுந் துடைத்தருள் தொழில்கள் மூன்றும-சிருட்டி திதி சங்காரமென்கின்ற மூன்று கிருத்தியங்களையும், சொல்லாமல் சித்திக்கும திரோபாவானுக் கிரகமென்கின்ற விரண்டு கிருத்தியங்களையும்,— ஈசன - சிவன,— போற்றவேயுடையன - பண்ணுதற்குரியன.—புகுந்ததுவிகாரமெனவில - குலாலாதிகளுக்குப போல முனனிருந்த முறைமைவிட்டு வேறொரு முறைமை யாருதலாகிய விகாரிவந்ததெனவிலல, அஃதிலலை,—சாற்றிய கதிரோனிற்கத தாமனாயலருமகாந்தங்காற்றிடுங கனலை நீருங் கரந்திடுங காசினிக்கே-உலகத்தினக்கணணே காரணமாகக கற்பிக்கபபட்டசூரியன முன்னின்ற முறைமையி னிற்கக கமல மலரும், சூரியகாநதக கல்லுந தானும அசைவற்றிருநது அக்கினியைக்ககக்கும், காசினிக்கே யென வினறுமெடுத்துப் பூமிக்குள்ளே நீருஞ்சுவறும

நீ சொன்ன துபக்குத் திட்டாந்தமன்று, சூரியனுக்குக் கமலமலரக்கடவது, காந்தங்கனலைக் கக்கக் கடவது, நீர் நிலத்திலே சுவறக்கடவது என்று சங்கற்பமில்லை; காரியம் நிகழக்கண்டோம், இதுகொண்டு பூதங்காத்தா, பிரகிருதிகாத்தா, கன்மங்காத்தா, காலங்காத்தா எனகின்ற வாதங்கள வந்தலாவ; புத்திமான் காத்தாவெனபதுபொய்யாய்த் தூரம போயிற்று சத்தியம். நீசொல்லியது சூரியனுக்குக் கமனசங்கற்பத்துவாரத்திலாற் கமலவிகாசாதி சங்கற்ப காரியமாமென்று காணுதலால் வேறுமாறில்லை

கடகாரியம் நிருமிக்கவிலே குலாலனுக்கு விகாரமுண்டென்றீர, சகத்காரிய நிருமித்தலிலே சிவனுக்கு விகாரமில்லையென்றீர், சேதனப்பொருளாக ளிரண்டி லொன்றி லுமக்கு பட்சபாதமேன்? சத்தியமே நீசொன்னது. கடவிகிர்தியிலே குலா

லதூல சரீர விகிரதி காரணம்,குலால தூலசரீர விகிர்தியிலே குலால சூக்கு சரீரவிகிரதி காரணம, குலாலசூக்கும சரீரவிகிரதியிலே விகிரதியில்லாத குலால சிறசத்தி யசலசங்கற்பமேகாரணம அவவிடத்தும விகிர்தியில் விகிரதியுள்ள பொருள காரணமெனனில் அநவஸதைவரும குலாலதூல சூக்கும சரீரவிகிரதித துவாரத்திருலே குலாலனுககு விகிரதி சொனனோம, சடசாக்ஷாதசத்தி சரீரததில்லையெனபதே பரமார்த்தம்.

சிருஷடியாவது சாததுவிக குணத்திகத்தாற் கர்த்திரு சங்கறபததால் முறகாரணத்திற் காரியபபொருள வெளியாதல்

திதியாவது ராசத குணதி கததாற றேறறிய அந்தநதப பொருள அநதநதததொழிலி லமைநது முதறகாரணம பற்றுக நிற்றல்.

சங்காரமாவது தாமதகுணதிக்கத்தாற் றனது தனது தொழில்களை விடடு முதறகாரணததில் முழுகிமறைதல்.

திரோபாவமாவது மிகுதியும நிநதிதமாகியபோககிபபொருளினு மிது நனகெனறு நழுவாதிருததல்

அநுககிரகமாவது பாசவீடு சிவததுவ விளககமெனவறிக.

---

## சிவஞானயோகியருளா வருமாறு.

—o—

ஒருகடவுள் மூன்று தொழி லிடையறாது செய்வானாயிற் பாரமெய்தி விகாரிபாவானபோலுமென்பார்க்கு, அஃதில்லையெனபது; தனககுரிய முத்தொழில் செய்யுமதுபற்றி விகாரமெய்தாத ஞாயிற்றினவைதது அறியப்படுமெனபதாம்.

காமிளிசகெனபது உருபுமயக்கம்

இவையிரண்டு செய்ளானும புதகர்மதம்பரறி யாசங்கித்துப பரிகரிதது ஈறுமாகி மருவுவித்திடுமாறு வலியுறுததபபட்டது.

---

# நிரம்பவழகியருரை வருமாறு.

———௧———

பஞ்சராத்திரி இநதக கிருததியஙகளை உமமுடைய காதா செய்யுமிடதது விகாரியாகானே யெனறுசொல்ல, அவனை மறுத தருளிச்செய்கிறா

சோறறுவித தளிததுப்பினனுந துடைத்தருள தொழில்களமூனறும போறறவே யுடையனீசன-பிரபஞசததைச் சிருட்டிததுந திதிததுஞ சங்கரிததுஞ செயகிற விநசக கிருததியஙகள மூனறும நீ சொலலுததககதாக உமமுடைய காததாவுககு அநாதியே யுண்டாயிருககில,—புருடநது விகாரமெனனில -ஆனமாககளைபபோலே காததாவுககும விகாரமுண்டான தெனறு நீ சொல்லில? இநதத தொழிலகளைச செய்கச்செய்தேயும விகாரஙகளி லகபபட்டால், அதெனபோல வெனனில?—சாறறிய சதிரோளிற்கத தாமரையலருங காநதஙகாறறிடும கனலீனுங் காந்திடுங்காசினிக்கே - சொல்லபபட்ட ஆதித்தன சனனதியிலே தாமரையானது அலராநிற்கவும, சூரியகாந்தக் கல்லானது அக்கினியை யுமிழாநிற்கவும, சலமானது சுவறாநிறகவும, இநதப பூமியிலே மூனறு தொழிலும் ஆதித்தனாலே தொழிற்படுகைச் செயதேயும ஆதிததனுககு விகாரமில்லா திருந்தாற் போல; காததாவுககு முனசொல்லபபட்ட கிருத்தியங்களைச் செய்கச் செய்தேயும விகாரமற்றிருப்பன.

இந்தக் கிருத்தியங்களைச் செய்தச்செய்தேயும் கர்த்தாவு க்கு விகாரமில்லை யென்பதற்குப் பிரமாணம். திருவண்டப்ப குதி, "படைப்போற்படைக்கும் பழையோன்படைத்தவை-காப்போற்காக்குங் கடவுள்காப்பவை-கரப்போன்கரப்பவை க ருதாக-கருதக் துடைக்கடவுள்" என்னுமதுங் கண்டுகொள்க

இதனாற் சொல்லியது கர்த்தா சிருட்டி திதி சங்காரமெ னகிற மூன்று கிருத்தியங்களையுஞ் செய்கைச்செய்தேயும் விகா ரமற்று நிற்பனென்னு முறைமை அறிவித்தது

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

—o—

ஈசன - ஒருகடவுள்,—தோற்றுவித்த தளித்துப் பின்னுக் துடைத்தரு டொழிற்கண் மூன்றும - தோன்றச்செய்து நி லைபெறுத்திப் பின்னு மிறுதியைச்செய்விக்கின்ற விம்முத்தொ ழிலும்,— போற்றவேயுடையன - இடையறுது செயவாரு யின்,—புகுந்தது விகாரமெனனின - பாரமெய்தி விகாரியா வான் போலுமெனபாரக் கிலைதில்லையென்பது,— சார்ந்திபகதி ரோனிறக - யாவரானும் புகழப்படுகின்ற ஞாயிற்றினசந்நிதி ககண,— காந்தங்கணலைககாற்றிடும் - சூரியகாந்தக கல்லினக ணெருப்பைககாலச்செயதலும,—தாமரை பலரும - தாமரைய லரச் செய்தலும,—காசினிககு - பூமியினகண,—நீருங்காந்தி டும் - நீரைககாந்திடச செயதலுமாகிய தனக்குரியமுத்தொழி ல்செய்தும அதுபற்றி விகாரமெய்தாத ஞாயிற்றினைவைத் துறிய ப படுமெனபதாம.

இவை யிரண்டு செய்யுளானும் புத்கர்மதம்பற்றி யாசங்கி த்துப் பரிகரித்து ஈறுமாகி மருவிவித்திடுமாறு வலியுறுத்தப் பட்டது.

## மறைஞானதேசிகர் உரை.



இதுவுமது.

உரைத்தவித் தொழில்கண்மூன்று மூவருக் குலகமோத, வரைத்தொரு வனுக்கேயாகி வைத்ததிங் கென்னையென்னில், விரைக்கம லத்தோன்மாலு மேவலான மேவினோர்கள், புரைத்ததி காரசத்தி புண்ணிய னணைவாலே. (௬௪)

(இ-ள்) உரைத்தவித் தொழில்கண் மூன்று மூவருக் குலகமோத வரைத்தொருவனுக்கேயாகி வைத்ததிங் கென்னையெனில் — ஞானாகக ளித்தொழில்கண் மூன்று மூவருக்கு முரித்தென்றுசொல்லச் சிவனுக்கே யிம்மூன்றுவகைக் கிருத்தியமென்று வரையறுத்துக் கூறியதென்னையென்று நீசொல்லுகிறாயாகில்?

விரைக்கமலத்தோன்மாலு மேவலான மேவினோர்கள் புரைத்ததிகார சத்தி புண்ணியனணைவாலே — மேலான சிவனுடைய வதிகாரசத்தி, பிரம விஷ்ணுக்களுக்கு அவனுடைய வேவலினாலே பொருந்தி யவரவர் கிருத்தியங்களைச் செய்வார்கள். எ - று.

அதிகாரசத்தியாவது, முக்குணமிகையாகிய வாமை பிரமாவை யதிட்டிக்கை, சேட்டை மாயையை யதிட்டித்துக் கிருத்தியங்களைச் செய்கை.

உம்மை எண
ஏகார மீற்றசை.

இதற்கு விசுவசாரோத்தரமும் வாய்விய சங்கிதையும சுவசசநதமு மெனவறிக. (நசு)

---

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

—o—

மேல் சிவனுடைய வேவலாற் பிரமவிஷ்ணுக்கள கிருத்தியங்களைப பண்ணுவாகளெனபதுரைததல்.

உரைதத விததொழில்களமூனறு மூவருக்குலகமோத வரைதறொருவனுககேயாககி வைபபதிங கெனனையெனனில் - சொல்லாநினற சிருட்டி திதி சஙகாரமெனனு மிமமூனறுகிருததியமும பிரமவிஷ்ணுருததிரா மூவர்கரு முலகததார் சொல்ல,பிரமாதிகளிககி யொருவறகே மூனறுகிருத்தியமு மிவவிடததுச சொல்லுவானேனெனின,—விளாககமலததோன மாலுமேவலால் மேவினோர்கள - கமலோறபவனும்விஷ்ணுவும, [உமமையினுலுஞ சந்நியோக விசிஷடதையினுலுங காலருத்திரனும் இமமூவரும்] சரீகண்ட பரமேஸ்வரனுடைய வேவலினுலிததொழில்களைப பொருநதினபேர்கள் அஃதெங்ஙனெனின,—புரைததிகாரசததி புண்ணியனணலாலே - புண்ணியனுகிய பரமேஸ்வரனுடைய வதிகாரசததியானது, பிரமாசிருட்டிக்கவும விஷ்ணுவிரக்ஷிககவுங் காலருததிரன சங்கரிக்கவும பொருந்துகையலே,‡ அயோதஹத்தியென் ருற்போல சிவசததி யிவர்களை யதிட்டித்துசசெய்கையா லிவர்களே செய்ததெனப்பெறும். இப்பிரமாதிகளும் பதிபதார்த்தத்தி லந்தர்ப்பாவமெனவுமறிக. சிருஷ்டிகாலத்திற் ஸ்ரீகண்டபரமேஸ்வரர்

பிரகிருதியிற் சூக்கும சிருட்டியைத் தாமுண்டாக்கித் தூலசிருட்டியாதிகளுக்குத் தம் அதிகாரசத்தியைப் பிரமாதிகளிடத்தில் வைத்து, ஸ்தூலமாயிருக்கிற சிருட்டிஸ்திதி சங்காரங்களைப் பண்ணுவிப்பர்.

‡ இருமபு சுடுகிறது.

தது-க்தம் சூக்ஷ்ம த்ருவ்ய-ஸ்ரஷ்டா — யதா ஜ்வலாஜ்வலிந: ஸ்ருஷ்டா விஸ்ருஜதி பாவஸ்தூலான் | ஸோ மந்த்ரா காலருத்ராதி விஷ்ணு ப்ரஹ்மாதி ரூபிண: ||

அல்லதூஉம், பிரமவிஷ்ணுக்கள் அதிகாரசத்திக்குத் தக்க புண்ணியத்தைப்பண்ணிப் பெற்றவர்களென்று முன்னமே சொல்லுவார்கள். அதற்கு வேதாகமங்களில் பலவிரோதமுண்டு. அஃதன்றியும் பிசகாதத்திரத்திலும் 'தேவதாருவனத்தில் நர்த்தனமாடிய தேவன்' என்பதற்கும் விரோதமாதலால் பிரமாவினிடத்திற் கிரியாசத்தி பதிந்து கருமப்பிரதானமும் ஞானப்பிரதானமுமாயிருக்கும், விஷ்ணுவினிடத்தில் ஞானக்கிரியைகள் சமானமாய்ப்பதிந்து ஞானகருமசாமியமாயிருக்கும், காலருத்திரனிடத்தில் ஞானசத்தி பதிந்து ஞானப்பிரதானமாயிருக்கும். சிவனமாயாதீதர். பிரமாசிருஷ்டித்த பிரபஞ்சத்தை விஷ்ணு பாலனம் பண்ணுவர், காலருத்திரர் சங்காரம் பண்ணுவர் ஆகையாலவர்கள் சாஞ்சனராகலிற் பிரகிருதியிற் குணத்திரயத்தையதிஷ்டித்துக்கொண்டுபிரமாண்டவர்த்திகளாயிருப்பர்கள்

தது-க்தம் - ப்ரஹ்மாண்டே வர்த்திநோ ஹ்யேதே ஸாஞ்ஜநா விஷ்ணுமுக்யா: || ஸாத்விகாத்யா குணாஸ்தேஷாம் ஸர்வஸாதாரணா: | இதி.

வஸ்து பேதமில்லாதிருந்தும் ஞான தாரதம்மியத்தினும் ஸ்தான தாரதம்மியத்தினும் கிருத்திய தாரதம்மியத்தினும் பேதமாய் குருசிஷ்ய நியாயமாகவுஞ் சுவாமி பூத்ய நியாயமாகவு நடப்பது மென்றி தன்பொருள்.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—0—

சிருட்டி திதி சங்காரங்கள் பிரம விஷ்ணு காலாக்கினிருத்திர ளியாசகளுக்குச் சொல்லியிருக்க மூன்றுதொழிலுஞ், சிரீகண்டமூர்த்திக்குச் சொல்லியதென்னையெனின்? அதற்கு உத்தரமுரைக்கின்றார்.

உரைத்தவித்தொழில்கள் மூன்றும் மூவருக்குலகமோத—சிருட்டி திதி சங்காரமென்கிற கிருத்திய மூன்றும், பிரமவிஷ்ணு காலாக்கினிருத்திரரியாசருக்கு லகஞ்சொல்ல,—

வரைத்தொருவனுக்கேயாக்கி வைத்தது மெங்கனே யெனில் - குணமத்திய நிலையராயும், பிரகிருதி யக்கிர நிலையராயும், இராகாந்த நிலையராயுமிருக்கின்ற, ஸ்ரீகண்டமூர்த்தி யொருவருக்கே நியமித்துச் சொல்லியதேதெனில்? முறைமையிற சொல்லுவாம.

பிரகம மகாசிருஷ்டி காலத்திற் பரசிவன் சுத்தமாயையினின்றும் பொருட் பிரபஞ்சஞ் சொற்பிரபஞ்சமுமாயிருக்கும் சுத்தத்துவமஞ்சையுஞ் சுத்தாத்துவவாசிகட்குச் சிருஷ்டித்ததில் புவனங்கள் சூக்குமதேகங்கள் தூலதேகங்கள் போக்கியப்பொருள்களிவைகளைப் பொதுச்சிறப்பாசப் பணணிப் பொருத்தி, சுத்த சுத்தாசுத்த வசுத்தாத்துவ வாசிகளெல்லார்க்கு

ம் வேறுவேறு நாதமாகிய பரதேகங்களைச் சிறப்பாகப்பண்ணி
ப்பொருத்தி, அந்தப் பரதேகத்துக்குள் ளிருக்கும் பிரணவக
லா பஞ்சகரூபமாகிய சிவதத்துவ மஞ்சையு மிருக்கப் பண்ணிக்
காத்து, மஹாப்பிரளயத்தின் முற்று மவாந்தரத்துஞ் சிலதேகா
திகளையுஞ் சங்கரிப்பர்

பின்னந்த மஹாசிருட்டி காலத்திலநந்தேசுரர் அசுத்த
மாயையினின்றும் புவனங்கொத்தாயுஞ் சூக்குமதேகங்கொத்
தாயும் இருவகையா யிருக்கின்ற கலாதிபிருதிவியந்த தத்துவங்
களையுந் தூலசரீரங்களையும் போக்கியப் பொருள்களையும் பொ
துச்சிறப்பாகப் பண்ணிப் பொருத்திக்காத்து, மஹாப்பிரளயத்
தின் முற்று மவாந்தரத்துஞ் சிறிது தேகங்களையும் ஸ்ரீகண்டா
தித் துவாரத்தினாலுந் தாமாயுஞ் சங்கரிப்பர்

மத்தியம சிருஷ்டிகாலத்தில் ஸ்ரீமத் ஸ்ரீகண்டருத்திரர் பிர
கிருதியினின்றும் புவனாகாரங் கொத்துமாத்திரமா யிருக்கின்
ற குணாதி பிருதிவி யந்த தத்துவங்களைப் பொதுவாகப் பண்
ணிப் போக்கியப் பொருள்களைத் தூலதேகங்களைப் பொதுச்சி
றப்பாகப் பண்ணிப் பொருத்திக் காத்து மத்தியமப் பிரளயத்
தில் முற்றுஞ் சங்கரிப்பர்

அவரேவலால் குணநிலையர்களா யிருக்கும் பிரமவிஷ்
ணுக்களும், பிரமாண்டத் தனைநிலையர்களாயிருக்கும் பிரமவி
ஷ்ணுக்களும், குணாதிபிருதிவியந்த புவனங்களிற்றூலதேகங்களை
யும் போக்கியப்பொருள்களையும் பொதுச்சிறப்பாகப் பண்ணிப்
பொருத்திக் காப்பார்கள் பிரதமப்பிரளயத்தில் ஸ்ரீகண்டரேவ
லாற் றமதிருப்புத்தொடங்கிச் சுவர்க்கபரியந்தஞ் சங்கரிக்குங்
காலாக்கினிருத்திரரே அவாந்தரத்தும் பிரமாண்டத்துட் டேகச
ரீரங்களோடு போக்கியப் பொருள்களைச் சங்கரிப்பர். ஆதலால்;—

புண்ணியன - பரசிவானுக்கிரகம் பெற்றுப் பரிசுத்தரா ய்ச் சிவனுயிருக்கு முன்சொல்லிய ஸ்ரீகண்டபரமேசுரன்,—

புனைந்ததிகார சத்தி நண்ணலாலே - பரசிவனிடத்தினி னறும பரசிவனுக கொத்திருக்கும பிரகிருதிகாரிய சிருஷ்டியாதி கிர்த்தியஞ் செய்யுஞ் சாமாத்தியம பெறலாலே, அவரோவுதற் காத்தா,—

விரைக்கமலத்தோன மாலு மேவலான மேவிஞேர்கள்- காலாகனிருத்திரரோடு பிரமவிஷ்ணுகக ளியற்றுகற காத் தாககள ஆதலால், அவரொருவருககேயாகவைத்தது அதுவ னறி

புண்ணியன - ஸ்ரீம தநநதேசுரானுக்கிரகம பெற்றுப் பரி சுத்தாயச சிவனுயிருக்கும பிரமாணடத்துட் சிவலோக கை லாச மேரு சிகர நிலையராகிய ஸ்ரீகண்டபரமேஸ்வரன,

புனைந் ததிகாரசத்தி நண்ணலாலே-ஸ்ரீம தநநதேசுரரிட த்தினினறு மநநதேசுரருக கொத்திருக்கும் பிரமாண்டத்துட் பிரம விஷ்ணுமுதலோககளுக்கு நிகரஹானுக கிரகம டண்ணுஞ சாமாத்தியம பெறலாலே அவரோவுகற காத்தா

விரைக்கமலத்தோனமாலு மேவலான மேவிஞேர்கள்-பிர மாணடத் தானிலையராகிய காலாககினி ருத்திரரோடு கூடியிரு க்கும் பிரமவிஷ்ணுக்களியற்றுதற காத்தாககள். அது வனறி யும,

புண்ணியன - பரசிவானுககிரகம் பெற்றுப் பரிசுத்தரா ய்ச சிவனுயிருக்கும் ஈசுரதத்துவ நிலையராகிய ஸ்ரீகண்டபர மேசுரன,

புனைத்ததிகார சத்தி நண்ணலாலே-பரசிவனிடத்தினின றும் பரசிவனுக கொத்திருக்கு மநந்தேசுரரோடுகூடி மாயா

காரிய சிருட்டியாதி கிருத்தியஞ் செய்யுஞ் சாமர்த்தியம் பெறா லே, அவர் ஸ்வயமாயுங் குணநிலைய பிரமாணடநிலைய விரு ஸ்ரீகண்டத்துவாரத்திலேயு மேவுதற் கர்த்தா,

விளாசகமலத்தோன மாலு மேவலான மேவினோர்கள்-கு ணதத்துள பிரமாணடத்தி னிருவகைய பிரமவிஷ்ணுக்களு மி யற்றுதற் கர்த்தாக்கள்,

இடபடி ஸ்ரீகண்டத் திரியம பிரேரகம், காலாக்கினி ருத் திரரோடு பிரம விஷ்ணு சதுட்டயம் பிரேரிடம் எனவறிக

பரசிவ னேவுதற்கர்த்தா, அநந்தேசாதிசரோடுகூட ஸ்ரீ கண்டத்திரயம் பிரமவிஷ்ணு சதுஷ்டயமெல்லா மியற்றுதற் கர்த்தாவாயிருக்கும்

* இவ்விடத்து ஞானப்பிரகாசர் ருகூ-ருஎ-வது செய்யு ட்களை வைத்து,ருசு-ருஞ-வது செய்யுட்களை ருகூ-ருஎ-வதாக அமைத்து உரைபாடம் கூறியிருக்கின்றனா அது சிருஷ்டியா திகளைக் கூறி அதனகாரண முணாத்தவேண்டு மெனபதுபோ லும்.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

---o---

அயனமாலிருவரும், புண்ணிய விசேடத்தான முதல்வனு டைய அதிகாரசத்தி அவனதேவலாற் பெற்றுடையாரன்றி அத் தொழிற்குச் சுதந்திரரல்லராகலான, முத்தொழிலுஞ் செய்தற் குறிய சுதந்திரமீறுமாகி யொருவனுக்கேயுண்டெனபதாம்

நல்வினைக்கண் வாழ்நாளின்மாலயனுகி" என்றார் புடை நூலாசிரியரும். வேதம் புராணம்இதிகாச முதலியவற்றிற்கும்

இதுவே கருத்தென்பது சதுர்வேததாற்பரியசங்கிரக முதலிய வற்றுட் காண்க.

வரைந்து வரைந்தென வலித்தது.

புரைத்தவென்னும் பெயரெச்சத்தகரம் விகாரத்தாற்றொக்கது.

புரைத்தல் உயர்தல்

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

—o—

மேலும் பஞ்சராத்திரி இந்த மூன்றுதொழிலும் பிரம்மா விட்டுணு உருத்திரன் என்கிற மூன்றுபேர்க்கு முள்ளதென்று பெரியோர்கள் சொல்ல, சிவ னொருவனுமே செய்வானென்று சொல்லுவானேனென்றுசொல்ல, அவனை மறுத் தருளிச் செய்கிறார்.

உரைத்தவித் தொழில்கள் மூன்று மூவருக் குலகமோத - சொல்லப்பட்ட வித்தக் கிருத்தியங்கள் மூன்றும் பிரமமாவுக் கும் விட்டுணுவுக்கும் உருத்திரனுக்கும் உள்ளதென்று ஞாதாக் கள் சொல்ல,—வரைந்தொருவனுக்கேயாக்கி வைப்பதிங்கெனை னென்னில் - இந்த மூன்று தொழிலுஞ் சிவனொருவனுக்குமே யுள்ளதென்று நீ நியமித்துச் சொன்னதெப்படியென்று சொல்லுகிறாயாகில், சிருட்டித்தி யிரண்டும் பிரம விட்டுணுக்களு க்குச் சிவன் கற்பித்த வதிகாரமாகையால், மூன்று தொழிலுஞ் சிவனுக்கேயுள்ளது அதெங்ஙனே யென்னில்,—விரைக்கமலத் தோன்மாலும் மேவலானமேவினோர்களபுரைத்ததிகாரசத்திபு

ண்ணிய வண்ணலாலே- மணம்பொருந்தின தாமரைப் பூவிலே
இருக்கும் பிரமாவும் விட்டுணுவுங் கர்த்தாவினுடைய வேவலி
னாலே தந்தாங் கிருத்தியங்களைச் செய்கிற வர்கள், பொருந்த
ப்பட்ட புவனங்களிலுண்டான ஆஞ்ஞாசத்திகளை அநாதியே
தம்பிரானார் பொருந்தி நின்று அவரவர் கிருத்தியங்களைச் செய்
விக்கையினாலே, அவர்களுக்கு ஒரு முதன்மையில்லை, சிவனுக்
கே யெல்லா முதன்மையும்

வரைந்தொருவனுக்கே யாக்கியென்பதற்குப் பிரமாணம்
திருவாசகம் -சதகம் "ஆயனான்மறையவனு நீயேயாத லறிந்து
யா னிப்பாவரினுங் கடையனாய, நாயினேனுதலையு நோக்கிக்கண்
டு நாதனே நானுனக்கோ ரன்பனென்பே, னாயினேனாதலாலா
ண்டுகொண்டா யடியார்தாமில்லையே யன்றிமற்றோர், பேயனே
னிதுதானும் பெருமையன்றே யெம்பெருமா னென்சொல்லிப்
பேசுகேனே" என்றும், பரபட்சம் நாரணனயனையீன்று மய
னும் நாரணனையீன்றுங், காரணமொருவருக்கங் கொருவர்தா
மிருவருக்கும், வாரணமுரித்தவனாற் காரணமென்றுமன்றத்,
தாரணை முனைக்கும்பக்கத் தவர்களு மடைந்தாரன்றே." என
னுமதுங் கண்டுகொள்க.

சித் - பர - பாஞ - மறு, எ - செ.

"விளக்கமலத்தோன் மாலு மேவலாம்மேவினோர்கள்,
ரபுரைத்தக்காரசத்திபுண்ணியனண்ணலாலே" என்பதற்குப் பி
ரமாணம் திருப்பாட்டு "பாராழிவட்டம் பகையால் நலிந்தா
ட்டவாடி, பேராழியான திடர்கண்டருள் செய்தவாபேணி, நீ
ராழிவிட்டேற நெஞ்சிடங்கொண்டவர்க்குப், போராழியீந்தபு
கழும் புகழுற்றதன்றே" என்றும், திருவாசகம் -சதகம். சாவமுன
னட்டக்கன் வேள்வித்தகர்தின்றுநஞ்சமஞ்சி, யாவவென்றாவெ

ன் றவிதாவிடேம் மவரவர்க்கே, மூவரொன்றே யெம்பிரானொடு மெண்ணி விண்ணாண்டு மண்மேற், றேவரென்றேயிறுமாந்தென்ன பாவந் திரிதவரே." என்றும், திருத்தோணோக்கம். "பங்கய மாயிரம் பூவினிலோர் பூக்குறையத், தங்கண்ணிடந்தரன் சேவடிமேற் சாத்தலுஞ், சங்கரனெம்பிரான சக்கரமாற் கருளியவா, றெங்கும்பரவிநாந் தோணோக்க மாடாமோ" என்றும், திருச்சாழல் "சலமுடையசலந்தரன்ற னுடறடிந்தநல்லாழி, நலமுடையநாரணற்க னறருளியவாறென்னேடி, நலமுடைய நாரணனற னயனமிடந்தரனடிக்கீழலராகவிடவாழி யருளினன்காண்சாழலோ." என்றும், பரபட்சம், "சீவன்கள் சன்னம்போலச் சிலவுரு ஒன்றில் நிற்றல், தேவென்றே யுலகங்காக்கச் சுவேச்சையால் சனித்தானென்னில், பூவனின் படைக்கமாட்டா தாளடிபோற்றவேதக், கோவந்தமுகத்திற்சென்றிச் சிருட்டியைக்கொடுத்தல்கூறும்," என்றும், வானங்கீழ்மண்ணுமெல்லாமாயனே கத்தாவென்பாய், தானஞ்சுசலந்தரனற னுடல்கிழித்த சக்கரத்தை, யானஞ்சுமாறுவானபாற் பெற்றுலகளித்த வார்த்தை, தானெங்குமாகுமெல்லாஞ் சங்கரன் காப்பேயாகும்," என்றும், "அஞ்சியனரிதாமேருட வசுரனைக்குமாரனாலே, தஞ்சிவித்தொருபெண்ணாலே தாருகனுடற்றுணிபித்த, தஞ்சிட்டப்புரந்தீயூட்டிச் சலந்தரனுடல்கிழித்தோச், நஞ்சினை யுண்டுமன்றே நாயகனுலகங்காத்தான்." என்னுமற்றுங் கண்டுகொள்க.

சித் - பாசு - மறு, சூ - கூ - உஉ - செ

இதனாற் சொல்லியது சருவசிருட்டியில் மூன்றுதொழிலும் சிவனே செய்வனென்றும், பிரம விட்டுணுக்களுடைய சிருட்டியுந் திதியுஞ் சிவன்கொடுக்க வவர்கள் செய்வார்களென்னு முறைமையு மறிவித்தது.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

—0—

உரைத்த இத்தொழில்களுமூன்றும் - சொல்லப்படுமிம்மூத்தொழில்களும்;—மூவருக்குலகமோத - மூன்றுகடவுளுமியற்றுமென வுலகரு சொல்லாநிற்பவும்,—வரைத்தொருவனுக்கேயாகச்சிவைத்ததிங்கென்னையெனில்- வரையறுத்தொருகடவுளுக்கேமுத்தொழிலுஞ் சுதந்தரமென்பதென்னையெனில்?--விரைக்கமலத்தோனமாலும்-வாசனைபொருந்திய கமலத்தினகணுள்ளோனாகிய அயனு மாலுமாகிய இருவரும்,—புண்ணிய நன்மையாலே - புண்ணிய விசேடத்தான,—புரைத்ததிகாரசத்தி - முதல்வனுடைய உயர்ந்த அதிகாரசத்தி,—ஏவலான மேவினோர்கள் - அவனதேவலாற் பெற்றுடையாரன்றிச் சுதந்திரரல்லா ஆகலான் முத்தொழிலும் செய்தற்குரிய சுதந்திர மிறுமாகி ஒருவனுக்கேயுள்ளதென்பதாம்.

---

## மறைஞானதேசிகர் உரை.



இதுவுமது.

இறுதியாங் காலந்தன்னி லொருவனே யிருவருந்த, முறுதியி னின்றபோனி லுறுதிதா னுண்டாகாதா, மறுதியி லரனேயெல்லா மழித்தலா லவனுளின்றும், பெறுதுநா மாக்கநோக்கம் பேரதி காரணத்தாலே. (கரு)

(இ-ள்) இறுதி யாங் கால ந் தன வி லொருவனே எல்லாரு மொடுங்கிய சங்காரகாலத்திலே சிவனொருவனுமே யுளான்.

இருவருந் தமுறுதியி னின்றுசொனைவில். — உம்முடைய சிவனைப்போல விவ்விருவருங் காத்தாவாய்ச் சங்காரப்படார்களோ வெனில் ?

இறுதிதானுண்டாகாதாம — அப்பொழுது ப்ரகிருதி மட்டு மழிகிற முக்கினசங்காரமும, மாயைமட்டு மழிகிற மத்திமசங்காரமும, நாதமட்டுமழிகிற மகாசங்காரமுமாக இவை மூவிதமான சங்காரமுண்டாகமாட்டாது;

அறுதியிலரனேயெல்லா மழித்தலால். — இம மூவிதமான சங்காரத்தையுஞ் சிவனே சங்கரிக்கையாம்

அவனுவினைமைபெறுதனாமாக்க நோக்கமபோதி கரணத்தாலே. — அந்தக் கர்த்தாதானே மேலுஞ் சிருட்டியுந் திதியு மவ்விருவரையு மதிட்டித்துக் கொண்டு கிருத்தியங்களை யுண்டாககாநிற்பன. எ - று

அதிகரண மெனபதறு லதிட்டித்து நடத்துவனென்ன வறிக

இதற்குச சுவாயம்புவத்திலும காந்தபுராணத்திலுங் காண்க. (கரு)

---

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

——o——

### இதுவுமது

இறுதியாங்காலந்தன்னி லொருவனே - மஹாப்பிரளயத்திற் பரமேஸ்வர னொருவனே நிற்பன. [ஏகாரத்தினுற் பிரம

விஷ்ணுக்களு முபசம்மாரத்தைப் பொருந்தவர்கள்,]—இருவ ருந்தம முத்தியின்றியொழிவி லிறுதிதானுண்டாகாதாம் - பிரமாவும் விஷ்ணுவுந் தங்கள் பலத்தினலழியாம லின்றுர்களெனனில், சிருஷ்டி திதி நிமித்தமா யுண்டானபேர் நிற்கி லச்சிருஷ்டியுந் திதியுமாயுள்ள பிரபஞ்சஞ் சம்மாரப்படாது. ஆகையாலம்மூர்த்திகளு முபசம்மாரப்படும். சிருட்டிதிதி கர்த்தாக்களு முபசம்மாரப்படுகையால் மேல் சிருஷ்டியாதி கிருத்தியமின்றிப் பிரபஞ்சஞ் சூனியமாமெனின்?—அநாதியிலரனேயெல்லா மழித்தலா லவனு லினமெனப்பெறுந்நாமாகக்கேநாகம்பேரதிகரணத்தானே - தனக்கேறி லாதவானே சிருஷ்டி திதி கர்த்தாக்களையும் பிரபஞ்சத்தை யுஞ் சம்மாரித்து நிற்கையாலும், புனர்ச்சிருஷ்டியுண்டென்று கேட்கப்படுகையினுலும், பாரிசேஷப்பிரமாணத்தினு லவ்வரனே சூக்கும சிருஷ்டியையுண்டாக்கி ஸ்தூல கிருத்தியத்திற்குப பிரமாதிமூர்த்திக திரயங்களையு முண்டாக்கி யம்மூர்த்திகளி லதுப்பிரவிஷ்டரா யக்கிருத்தியங்களைப் பண்ணுவர். ஆகையாற் றடையற்ற விச்சாஞானக்கிரியைகளை யுடைய பரமேஸ்வரனு லானமாக்களெல்லா முற்பத்தியாதி தருமங்களைப் பெறுவர்கள் நாமெனையால் சகலமொன நிதன பொருள்.

[illegible]

இம்மூன்று விருத்தமும் பாஞ்சராத்திமத நிராகரணம், அம்மதத்தின விஸ்தாரம பரபக்ஷத்திற் சொல்லினோம கண்டு, கொள்க.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—o—

ஆகையால் மகாப்பிரளயத்தில் பரசிவமொன்றுமே பதிக ளுக்குட பாரிசேஷிகருமென்று படிக்கின்றார்.

இறுதியான காலந்தனனில-மகாமபிரளயத்தில்,—

ஒருவனே - பரசிவனொருவரோ, பதிகளிற் பாரிசேடித்து நிற்பார்,—

இருவரும் தாமுறுதியி னின்றொனனில் - பிரம விஷ்ணுக்களிருவரும், (தாமெனபது பவுராணிகமதப் பழக்கத்திற் படித்தது,) சிவசாஸ்திரீயத்திற்கு அநந்தாதி அதிகாரகாத்தாக்களிருவருந்தமதுகிருத்தியங்களோ டிருந்தாராகளாகில்,—

இறுதிதானுண்டாகாதாம்-மகாமபிரளயம் வாராதாகும. ஆதலால்,—

அறுதியில் - அத்திதிகால முடிவில்,—

அரனே-பரசிவனே,

எல்லா மழித்தலால் - சிவதத்துவமுதற் பிருதிவி தத்துவ பரியந்தம் பிரபஞ்சமுற்றுஞ் சங்கரிபித்துச சங்கரித்தலால்,—

அவனால் - அநதப்பரசிவனால்,—

போதி காணத்தாலே-"அதபத்யுரதிஷடாகம்" என்று ஸ்ரீ மன் மதங்காகமவசனத்தால் தாகான மியத்தினால் அந்தப்பர சிவனுக்குப்பெரிதா மிருப்பாருஞ் சததிகாணத்தினாலே தானே.

திரும்பவெடுத்துக்கூட்டுக.

பேரதிகரணத்தாலே-பேரதிகரணத்தினின்றுமென (வேற்றுமைமாறுக) "நித்யாதிஷ்டேயரூபிணி" என்று பவுஷ்கரவசனத்தினாற் பரிக்கிரக சத்தியாதலா லநதப் பரசிவனுக்குப் பெரிதாமிருப்பாகுஞ் சுத்தமாயையினின்று சிவத்தத்துவ மனுக்குமம்

இன்றும்-இனிமேலும்,—

ஆக்கநோக்கம் பெறுதும்—சிருட்டி திதிகளைக் காண்போம்

திரும்ப வெடுத்துக்கூட்டுக.

பேரதிகாரணத்தாலே - பரிக்கிரகசத்தியினால் அந்தப் பரசிவனுக்குப் பெரிதாயிருப்பாகு மியற்றுதற் காரத்தாவாகும் அநந்தேசுரனாலேதான.

திரும்பவெடுத்துக் கூட்டுக

பேரதிகரணத்தாலே - தாதானமியத்தினாலந்த வநந்தேசுரருக்குப் பெரிதாமிருப்பாகு மந்தவநந்தேசுரசத்தி கரணத்தினாலேதான

திரும்பவெடுத்துக்கூட்டுக

பேரதிகரணத்தாலே-(பேரதிகாரணத்தினின்றுமென வேற்றுமை மாறுக) பரிக்கிரகசத்தியினால் அநந்தவனந்தேசுரருக்குப்பெரிதாமிருப்பாகும அசுத்தமாயையினின்றுந் தானேகாலதத்துவமாதியாய்ப் பிருதிவி தத்துவமந்தமாகுந் தத்துவங்களுக்கு,—

இன்றும்,—

ஆக்கநோக்கம் பெறுதும்-திரும்பச் சிருட்டி ஸ்திதிகளைக் காண்பாம.

## சிவஞானயோகியருரை வருமாறு.

—o—

சங்காரகாலத்தில் ஏனையிருவருந் தத்த மாற்றலோடு நிலை பெறுவாராயின உலகஞ் சங்காரமாதலின்மையான், அக்காலத்து அவ்விருவரும் உளரல்லரென்பது பெற்றாம். அல்லதூஉம், சங்காரகடவுளெனப்படுவோன், சிலவற்றை யொழித்துச் சங்கரிப்பானல்லன். அப்பெற்றியனாகிய சங்காரகடவுளின் வேறு சங்கரிப்பாரில்லை யாகலான் முழுவதுஞ் சங்கரித்தவழி அவனொருவனே எஞ்சிநிற்றல் பெறப்படுதலானும், ஒடுங்கியவுலகங்கட்குப் பெரியதோராதாரம் அவனேயாகலானும், ஒடுங்கியவுலகத்தை மீளத் தோற்றுதற்கும் நிறுத்துதற்கும் அவனேயுரியனென்பது தானே போதருமென்பதாம்.

அறுதியிலரனென்னும் பெயருடையானும் ஓரேதுக் கூறியவாறு.

இன்னும் மீளவும்.

ஆதாரம் அதிகாரமென்பன ஒருபொருட்கிளவி.

பேரதிகரணமென விசேடித்தார், முதற்காரணமும் அதிகாரமாதலுண்மையின்.

இவையிரண்டு செய்யுளானும் பௌராணிகர் மதம்பற்றி நிகழுஞ் சடாவை முறையே ஆகமவளவைபற்றியும் பொருந்துமாறுபற்றியும் பரிகரித்து, மேலது வலியுறுத்தப்பட்டது.

இதனானே பஞ்சராத்திரிமதம் இரணியகருப்ப மதங்களைப் பரிகரித்தவாறுமாயிற்று.

—

## நிரம்பவழகியருரை வருமாறு.

———0———

சிருட்டிகாலத்துக்குப் பிரமாவும் திதிகாலத்துக்கு விஷ்ணுவும சங்காரகாலத்துக்கு உருத்திரனுமாகத் தந்தாங் கிருத்தியங்களைச் செய்கிறது கண்டிருக்கச்செய்தே, மூன்று காலத்துக்குஞ் சங்கார கர்த்தாவேயுள்ள தியாவகனங் காணப்பட்டதென்ற பாருசராதந்திரியை நோக்கி மேலு மருளிச்செய்கிறார்.

இறுதியாங்காலந்தனனி லொருவனே - சங்காரகாலத்தனில் சிவன ஒருவனுமேயுள்ளன. காரகிறவனிருக்கக் காவலழிபுமோ! ஆகையாலே,—இருவருந் தம் முறுதியாய் நின்றாரெனில் - அந்தச் சங்காரகாலத்திலும பிரமம விஷ்ணுக்க ளிருவருந் தங்கள பலத்திலேலே அழியாமல் நிரபாரகவொன்று நீசொல்லில்,—இறுகிதானுண்டாகாதாம - சஙகாரமெனகிற கிருத்திய முண்டாகிறது நோரகவில்லைபாம ஆகையா லவர்களையும் அவாகள் கிருத்தியஙகளையு ம அழிபண. கிருத்தியங்களை யழியாமற் கிருத்திய கர்த்தாககளையு மழிததால்,மேல கிருத்தியமுணடாம்படி யெப்படி யெனில்,—அறுதியிலர னேயெல்லா மழித்தலா லவனுவினனம் பெறுகு நாமாக்கம நோக்கம் - அந்தச் சங்காரகாலத்தில் சிவனே சருவத்தையும் சங்கரிக்கையினாலே அந்தச சிவனாலே மேலும் சிருட்டி திதியும் நாமெல்லாரும் பெறததகக துண்டாம். சங்காரகர்த்தாவாலே சங்காரமொழியச் சிருட்டி திதியுண்டாம்படி எப்படியெனனில்,—பேரதிகரணத்தாலே - இந்தக் கிருத்தியங்களைக் கொடுக்கத்தக்க மேலான வதிகார சத்திகளைத் தனககு கருவிகளாக வுடையவனாகையிலேலே.

இதற்குப் பிரமாணம் முனனின்ற திருவிருத்தத்துக்கிட்டபிரமாணஙகளைக கணடுகொளக.

இதனாற் சொல்லியது சஙகாரகாலத்திற் பிரம விஷ்ணுக்களையு மவர்களுடைய கிருத்தியங்களையு மழித்துத் தானொருவனுமேயாய் நிற்பனெனறும, சிருஷ்டிகாலத்திலே அவர்களையும் அவர்கள் தொழில்களையு முண்டாக்குவ னெனறும, திதிகாலத்தி லவர்களுடைய வதிகாரத்தையுஞ் சஙகாரகர்த்தாவே கொடுப்பானெனனு முறைமையு மறிவித்தது.

## சுப்பிரமண்யதேசிகருரை வருமாறு.

இறுதியாங்காலந்தனனில்-சங்காரகாலத்தில்,—இருவருக்கம்முறுதியி னின்றொன்னில்-ஏனையிருவரும் கருத்தமாற்றலோடு நிலைபெறுவாராயின,—இறுதிகா ணுண்டாகாதாம - உலகஞ் சங்காரமாத லின்மையா னககாலத தவவிருவருஞ் முனரல்லவெனபது பெற்றும்,—அறுதியி லரனே எல்லாமழித்தலான-அல்லதுவுஞ் சங்காரக கடவுள எனபபடுவோன சிலவறறையொழித்துச் சஙகரிப்பானல்லன அப்பெற்றியனுகிய சஙகாரககடவுளே வேறு சஙகரிப்பாரிலலாகலானமுழுதுஞ் சஙகரித்தவழி,—ஒருவனே-அவனொருவனே எஞ்சிநிற்றல் பெறப்படுதலானும,—பேரதிகரணத்தாலே - ஒடுங்கிய உலகங்கட்குப் பெரியதோராதாரமவனே யாகலானும,—ஆககநோக்க மவனுளினும் பெறுதும்-ஒடுங்கிய உலகததை மீளத் தோற்றுதற்கு நிறுத்துதற்கு மவனே யுரியனெனபது தானேபோதருமெனபதாம்.

இவையிரண்டு செய்யுளானும பவுராணிகர்மதப்பற்றி நிகழுங் கடாவை முறையே யாகமவளவைபற்றியும் பொருந்துமாறுபற்றியும் பரிகரித்து, மேலதுவலியுறுத்தப்பட்டது.

இதனுனே பாஞ்சராத்திரிமதம் இரணியகருப்ப மதங்களை ப் பரிகரித்தவாறு மாயிற்று.

## மறைஞானதேசிகர் உரை.



இந்தத்தொழில்க ளென்னபயனைக்கருதிச் செய்கிறு ரென்றவனை நோக்கி யுணர்த்துகிருர்

சொன்னவித் தொழில்களென்ன காரணந் தோற்றவெனின், முன்னவன் விளையாட்டென்று மொழிதலு மாமுயிர்கள், மன்னிய புத்திமுத்தி வழங்கவு மருளான் முனனே, துன்னிய மலங்களெல்லாந் துடைப்பதுஞ் சொல்லலாமே. (௬௯)

(இ-ள்) சொன்னவித்தொழில்களென்னகாரணந் தோறவெனின் — இக்கிருத்தியங்கள் கர்த்தாவானவனுடைய க்ருகைகருக் காரணமெனனென்று நீசொல்லில்

முன்னவன் விளையாட்டென்று மொழிதலுமாம் — அந்தக்கர்த்தா வொருப்ரயோசனத்தைக் கருதிச்செய்யாதபடியாலே யவனது லீலையென்று சொல்லப்படும்.

இவ்விளையாட்டுச் சிறுபிள்ளைகளாடல்போலப் பலத்தைக்கொடாதோவெனவில்?

உயிர்கள் மன்னிய புத்திமுத்தி வழங்கவு மருளான் முனனே — அவனதருளா லான்மாக்களுக்கு நிலைபெற்ற பராபரபோகங்களைப் புசித்தத் தொலைத்தற்பொருட்டும், அநாதியே செறிந்துநின்ற மலங்களை யொழிக்கையின் பொருட்டும்,

துன்னிய மலங்க          மோட்சத்தை யடைவிக்கைக்குக் காரண
ளெல்லாந் து          மெனறுஞ் சொல்லலாகும். எ - று.
டைப்பதுஞ்சொ
ல்லலாமே

இதறகுச் சுவாயம்புவ மெனவறிக.                                        (௩௯)

---

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

---

மேல் சிருட்டியாதி சூக்ஷமகிருததியங்கட் கேதுகூறல்.

சொனனவித தொழில்க ளெனனகாரணந தோற்றவெண
வில் - கிழசசொல்லிப்போநத சிருட்டியாதிபஞ்சகிருததியத
தையும் பண்ணுவதான கிரியை நிராவிகாரியான சிவனுடைய
சததிததுவாரா வுணடாகவேண்டிய வேதுவேதெனின,—மண
னிபவுயிாக கருளாற்புததிமுததிவழங்கவும -அநாதியே யாண
வாதிபாசஙகளைப் பொருநதிக் துககிககிற வான்மாககளுக்குக்
கருணையினுன மாயையினி னறுங் கலாதிகளையுணடாக்கி யாண
வசததிகளை பேகதேசநீககிப் போகததையு மாணவமாயைக
ளையுஞ சாவாணமருநீககி யதனுன மோக்ஷததையுங கொடுப்
பது, (உபமை யெண்ணுமை) ஆகிறக்ர்ததாவுககுப் பிரயாசமுண்
டாமெனின? இல்லையெனபதற்காக,—முனனவனவிளையாட்
டெனறு மொழிதலுமாம் - மூனறுபொருளகளுககுள் முநதி
னபொருளாகிய பதியினுடைய லீலாமாததிர மெனறு சொல்
லலுமாம் (சொல்லலுமாமெனறது சநநிதி மாததிரத்திற் கிருத்தி
ய முணடாமெனபது கருதது) நிததியமாகிய வாணவமாயைக
ளிற் சததிசமுகங்களைச சிருட்டிகாலததி லுணடாக்கிச சங்
காரகாலத்தி லொடுக்குவ ரென்று கீழ்ச்சொல்லிப போந்து,
இவ்விடத்துக காரணங்களை நீக்குவ தென்ற தெவ்வாறெ
னின?—ஆங்கேதுன்னிய மலங்களெல்லாந துடைப்பதுஞ் சொ

ல்லலாமே - அச்சத்திகளை நீக்கினதுபோல வநாதியே யான்மா வை நெருங்கியிருக்கிற வாணவமாயைகளையும் வகையற நீக்கு வர்.

தடைப்பதும் எனறவும்மையாற் பக்குவான மாக்களிடத்திற் பாசங்களையெல்லா நீக்கியு மபக்குவானமாக்களிடத்திற் பாசங்க ணிற்கையாற் பாசங்களுடைய நித்தியமுங் கெடா தெனபது கருத்து. அல்லது ஏகமுத்தியிற் சர்வமுத்திப்பிரசங்கம வரும்.

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

சிருட்டி முதலியகிருத்தியமேதுநிமித்தம் மியற்றுவதென் னப் பலம இரண்டு நிருத்தத்தா லிசைக்கின்றார்.

தோற்ற வென்னகாரணமெனறு கூட்டுக.

விளையாட்டெனபது சிலாகருத்து.

இது வெளி—பொருள்

## சிவஞானயோகியருரை வருமாறு.

சங்காரககடவுள் இங்ஙனங் கூறிப்போந்த தோற்றமுத லிய தொழில்களைச் செய்தற்குக் காரணம் யாதெனில், "காத்தும படைத்துங் கரந்தும் விளையாடி" எனபது முதலிய திருவாக்குகள் பற்றி ஒருசாரார், அத்தொழிற்குக் காரணம் விளையாடற் கருத்தெனபர். ஒருசாரார், "ஐயாநீ யாட்கொண்டருளும் விளையாட்டி, னுய்வார்களுய்யும் வகையெல்லா முய்க் தொழிந்தோம்," எனபது முதலிய திருவாக்குகள்பற்றி. விளை

யாட்டென்றது, ஐங்கலப் பாரஞ் சுமத்தல் சாத்தனுக்கு வி னையாட்டெனபதுபோல, அதனை யெளிதிற்செயப்படுதலை நோக்கியேயாகலின அகசருநதும் உயிாகட்குப் பெத்தகால ததுச் சுவர்ககாதி போகமும பதமுததிசளும, முததிகாலதது வீடுபேறுங் கொடுததற்பயததெனபா அவ்விரண்டுந தம்முன் முரணுமையான் உயிாகண்மேற்சென்ற கருணையே ஆண்டைக் குக் காரணமெனபதாம.

மொழிதலுமெனனும்மமை எதிரது தழீஇயது.

ஏனைய எண்ணும்மை

வழங்கவுமெனனும்மமையோடு இயைதற்கேற்பத் துடை ப்பதாகவுமென ஆககச்சொல் வருவிதது ரைகக

அருளாலெனபதனை மேலும்கூட்டுக.

காரணமெனனையெனக கடாயினூர்க்குப் பயன்கூறிவிடுத் தல் செடபுவழுவாம் போலுமெனின, ஆகாது; அருளாலென் வே வழங்கவுமதுடைப்பவும வைத்த அவவருள் காரணமெனப து தாற்பரியமாகலின. அற்றுயினும அநுக்கிரகமொழித தொழி ந்ததொழில்களெல்லாம் பிறப்பிறப்புகளிற் படுத்தத துயருறு த்துவனவாகலின, அவற்றைச செய்வது அருளாமா றியாங்ஙு னமெனின? அதற்கனறே வருஞ்செய்யு ளெழுந்ததெனபது.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

—o—

இந்தத் தொழில்களை என்ன பயனைக்கருதிச் செய்கிறூர் உம்முடைய கர்த்தாவென்று புத்தன்சொல்ல, அவனை நோக்கி மேலருளிச்செய்கிறூர்.

சொன்னவித தொழில்களென்ன காரணத்தோற்றவெ னனில் முன்னவன் விளையாட்டென்று மொழிதலுமாம் - அந்தக் கர்த்தாவினுடைய திருவிளையாட்டென்று சொல்லுமாம். ஆயினுமமுடைய கர்த்தாப் பாலரையப்போலப் பயனற்ற காரியஞ் செய்வானேயெனனில்? கர்த்தா அப்படிப் பயனற்ற காரியஞ் செய்யான். அதெங்ஙனேயெனனில்?—உயிர்க்கு மனாதிப் புத்தி முத்தி வழங்கவு மருளால் முன்னே தனாதிய மலங்களெல்லாம் துடைப்பதென்று சொல்லலாமே - தன்னுடைய காருண்ணியத்திருவலே ஆன்மாக்களுக்கு நிலைபெற்ற போக மோக்ஷங்களைக் கொடுக்கைக்கும், இதுவுமன்றி அநாதியே சகசமாயிருக்கிற மலங்களைப் போக்குகைக்கும் காரணமாகச் செய்தானென்று சொல்லலாம், பெரியோர்க ளப்படிச் சொல்லப்படுகையால்.

முன்னவன் விளையாட்டென்றது இந்தத் தொழில்களைச் செய்யுமிடத்துப் பாரமற்ற நெளிதாகச் செய்தனென்று கொள்க. இதற்குப் பிரமாணம் திருவெம்பாவை "மொய்யார் தடம்பொய்கை புக்குமுகே னென்னக், கையாற் குடைந்து குடைந்துன்கழல்பாடி, ஐயாவழியடியோம் வாழ்ந்தோங்காணா ரழல்போற், செய்யாவெண்ணீறாடி செல்வா சிறுமருங்குல், மையார்தடங்கண் மடந்தைமணவாளா, ஐயாநீயாட்கொண்டருளும்விளையாட்டில், உய்வார்களுய்யும் வகையெல்லா முய்ந்தொழிந்தோம், எய்யாமற் காப்பா யெமையேலோ ரெம்பாவாய்" என்றும் "ஆர்த்தபிறவித் துயர்கெட நாமார்த்தாடுந், தீர்த்தனற் றில்லைச் சிற்றம்பலத்தே தீயாடுங், கூத்தனிவ்வானுங் குவலயமு மெல்லோமுங், காத்தும் படைத்துங் கரந்தும்விளையாடி, வார்த்தையும்பேசி வளைசிலம்ப வார்கலைக, ளார்ப்பரவஞ்செய்ய வணிகுழல்மேல் வண்டார்ப்பப், பூத்திகழும்

பொய்கைக் குடைந்துடையானபொற்பாதம், மேத்தியிருஞ்சுனைநீ ராடேலோரெம்பாவாய்," என்னுமதுங் கண்டுகொள்க.

இதனாற் சொல்லிய கர்த்தா தனது காருணியத்தினாலே ஆன்மாக்களை இரட்சிக்கை காரணமாக பஞ்சகிருத்தியஞ் செய்தானென்றும்; இது செய்யுமிடத்துப் பாரமறநின்று செய்தானென்னு முறைமையையு மறிவித்தது.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

—o—

சொன்னவித் தொழில்கள் - சங்காரக்கடவு ளின்பானென் கூறிப்போந்த தோற்றமுதலிய தொழில்களை,—தோற்றக்காரண மெனின்-செய்தற்குக் காரணமியாதெனின்,—முன்னவனைவிளையாட்டென்று மொழிதலுமாம் "காத்தும் படைத்தும் கரந்தும் விளையாடி" என்பது முதலிய திருவாக்குகளபற்றி,(விளையாட்டென்பது ஐங்கலப்பாரஞ்சுமத்தல் சாதகனுக்கு விளையாட் டென்பதுபோல) அத்துணை எளிதிற் செய்யப்படுதலை நோக்கியே யாகலின் அக்கருத்தும்,—உயிர்க்குமுனமே - உயிர்கட்கு பெத்தகாலத்து,—மன்னிய புத்திமுத்தி- தங்குதற்கேதுவாகிய சுவர்க்காதி போகமும் பதமுத்திகளும்,—துன்னிய மலங்களெல்லா மருளாற றுடைப்பதும் - முத்திகாலத்துள் பொருந்திய மும்மலங்களு மருளாற் நீங்குதலாகிய வீடுபேறுதல்,—வழங்கவும் - கொடுத்தற்பொருட்டென்பர்,—அருளாற் சொல்லலாமே - அவவிரண்டுந் தம்முன் முரணுமையா னுயிர்கண்மேற் சென்ற கருணையே யாண்டைக்குக் காரண மென்பதாம்.

## மறைஞானதேசிகர் உரை.



சிவன்செய்யும் பஞ்சகிருத்தியமு மான்மாக்க ளுக் கனுக்கிரகமென வுணர்த்துகின்றார்.

அழிப்பிளைப் பாற்றலாக்க மவ்வவர் கன்மமெல் லாங், கழித்திட நுகரச்செய்யப்பகை காப்பது கன்மவொ ப்பிற், றெழித்திட மலங்களெல்லா மறைப்பருட் செய் திதானும், பழிப்பொழி பந்தம்வீடு பார்த்திடி னரு ளேயெல்லாம். (கஎ)

(இ - ள்.) அழிப் பிளைப் பா ற்றல் — சங்காரமாவது, சுத்தாசுத்தமாகிய மா யையிற் காரியங்களைத் தத்தங் காரணங்க ளிலொடுக்கி ஜநநமரணப்பட்டுத் திரியாம லான்மாக்களை யிளைப்பாற்றுகை.

அஃதெங்ஙனமெனின்? பகலெல்லாம் வேலைசெய் திளைத் தவ னிராத்திரி நித்திரைசெய் திளைப்பாறுமாறுபோல.

ஆக்க மவ்வவ ர் கன்மமெல்லா ங் கழித்திட — சிருஷ்டியாவது, ஒடுங்கியிருக்கிற கருவிக ளையு மநந்தவான்மாக்களையுங் கூட்டி யவரவ ர் கன்மங்களை யநுபவிக்க, அவ்வவர் யோ னிகடோறும் புகுவித்துழன்று திரிகை.

நுகரச்செய் கை காப்பது — திதியாவது, அந்தக்கன்மபலங்களை யேரு மற் குறையாமற் றத்தம் விடயங்களைப் பொருந்திப் புசித்துத் தொலைக்கை.

கன்மவொப்பி ற் றெழித்திட மலங்களெல்லா மறைப்பு — திரோபாவமாவது, கன்ம சாமிய மான் மாக்களுக்குப் பிறந்தகாலத்தும் பரிபாக மான மலங்களினது கிரியத்தைத் தடுத்தல்.

அருள் செய்தி அநுக்கிரகமாவது, ஆன்மாக்களுக்காணவ தானும் பழிப் முதலிய குற்றத்தைப் போக்கி ஞானத்தை பொழி பந்தமகி க்கொடுத்து வீட்டை யடைவிப்பிக்கை ு

பார்த்திடின இந்தப்பிரபஞ்ச கிருத்தியங்களும் விசாருளேயெல்லாம். ரிக்கி லநுக்கிரகத்தின பொருட்டாம். எ-று.

இதற்குச் சுவாயம்புவமும் மிருகேந்திரமு மெனவறிக. (௩எ)

---

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

ஆன்மாக்களுக்குக் கிருபையினுற கிருத்யங்களைப் பண்ணுவரென்றதெங்ஙனம், சமஹாரமும் மறைபபுங் கிருபையோவெனின? அதுவு மாமெனறு கூறல்.

ஆக்க மவவவர்கன்மெல்லாங் கழித்திட-சிருஷடியில் தனுகரணுதிகளை யுண்டாக்குவது அவ்வானமாககள் பண்ணிய கனமமெல்லாம் புசிததுத் தொலைப்பதறகு,--காததிடல் நுகரச்செய்தல்-ஸ்திதிபண்ணுவ தவ்வககனமங்களைப் புசிபபிககிறதற்கு,—அழிப்பிளைப்பாற்றல்-சங்கரிப்பது சநந மரணத்திளுற் சகலாவஸ்தையிலுண்டாகிய விளைப்புநீங்கத் தததுவங்களெல்லாமொடுக்கி யானமாக்ககளைக் கேவலாவஸ்தையிற கிடத்துகின்றது,—

தஉ-கூ௦ ஐ௫ெ௦ெஉ ௫ — ஹொமஹாய நஊாசஷிவ௨ கூ௫ஹாகாரணஸ௦ஹ௫ யமூ தவஹா௺கஊாகஃ விஹ௫ஊ யாவதிஷெத ॥ ஹவிநா௦ ஹயவிஷாநாப ஸ வ௨ ஹ௵ தஹி௦தாயதஃ ॥ ஹாவாவஹாநஊாஹாஹெ௫கி.

மறைப்புக் கன்ம வொப்பின் மலங்கலெல்லாக் தெழிந்திட-திரோதானம் பண்ணுகிறது கன்மசாம்மியத்தின் மல

ங்க ளெல்லாவற்றையு நீக்குவதாகையாற் கன்மசாம்ய மாமல
ளவுங் கன்மபலத்திலே ஷேடபுதத்வாராமற் புசிப்பிக்கும்படி
களுக் கன்மசாம்ய மானபொழு தத்திரோதான சத்தியே யநு
க்கிரக சத்தியாம்;—

தது³க்தம் தத்ரைவ — பரிணாமயதீ தாஸ்²யா
ய ஜம் காகவித்³விஷா | யமிஹாக்ஷீண நாயமேத்³ தநாநு
க்³ராஹிகாவ்ருத்தஜக்ஷி.

அருள்-அநுக்கிரகம் பண்ணுகிறது ஆன்மாவுக் குபாதியாயு
ள்ள வாணவாதி பாசபந்த நிவிர்த்தித்துவாரா ஸ்வஸ்வரூபமா
ன சச்சிதானந்தாபிவியக்தியாக்குவது,—பழி-பொழி-ஆகையா
ற சங்காரம்பண்ணுகிறது தாமதகுணமென்றும், மறைக்கிறதுவ
ஞ்சனமென்றும், பஞ்சராத்திரி சிவதூஷணஞ் சொல்லுகின்ற
தைத் தவிர்,—பார்த்திடிற் பந்தமவீடெல்லாச் செய்திதானு ம
ருளே-விசாரிக்குங் காலத்துக் கலாதி தத்துவங்களினாலான
மாசுகளைப பந்திக்கிறது மக்கலாதிபந்தத்தைச் சங்காரகாலத்
தில் விடுவிப்பதுங் கிருபையினாற்செய்யுங் கிருத்தியமென் றித
னபொருள்.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—— 0 ——

அழிப்பு - சங்கரித்தல்,—இளைப்பாற்றல் - பூமியின் கண்
ணே சரீரேந்திரியங்களோடே சநநமரணங்களிற்கூடுதல் பிரி
தல், சுவர்க்கநரகபூமிகளிற் போதல் வருதல் முதற்றொழிற்க
ளான வருத்தோய்வுதீர்த்தல், சத்திகுன்றிய மாயைக்குத் திரு
ம்பச் சாமர்த்திய முண்டாக்கலுமாம், கன்மபாக நிமித்தமு

மாம்.—ஆக்கம்-இரும்பச்சிருட்டித்தல்;—அவ்வவர் கன்மமெல்லாங்கழித்திட - பிரளயத்திற் பக்குவப்பட்ட அவரவர கன்மங்கள் முற்றும் மலபரிபாகத்திற்கு நிமித்தமாய்ப் புசிப்பித்துத் தொலைக்க,—காப்பது - திதிசெய்வது;—நுகரச்செய்கை- கன்மபலத்தைப் புசிப்பித்தல்,— மறைப்பருள செய்தி தானும் - மலபாகம் வருமபொருட்டுக் கனமபலபோக்கியப் பொருள்களிலமிழ்த்துதலாகிய திரோபாவகிருத்தியமும், தீக்ஷையணுக்கிரக கிருத்தியந்தானும்,—கனமவொப்பில்- மலபரிபாகம்வர வரும் உபகாராபகாரகனமபலசமத்தில்,—மலங்களொல்லாத தெழுந்திட - மலமாயா கனமங்களை நீக்கிச் சிவத்துவத்தை விளக்க, திரோபாவ கிருத்தியத்தாற் கனம சமத்துவம் வருவித்தல், அநுக்கிரககிருத்தியத்தால் மலம் நீக்கிச் சிவத்துவம் வருவித்தல் எனப்பொருள்கொள்க பழிப்பொழி முதல் பொருள் வெளிப்பொருள.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

---

ஒடுக்கந் தோற்றம் நிலை மறைப்பு அருளென்னும் ஐந்தும்; முறையே இளைப்பாற்றலும், கனமங் கழியுமுகத்தான மலபாகம் வரச்செய்தலும், கனமங் கழியுமாறு அதனை நுகர்வித்தலும், கன்மவொப்பு வருவித்து மலங்களை முதிர்வித்தலும், பக்குவம் விடுவித்தலுமாகிய உறுதிப்பயத்தனவாகலான், ஐந்தொழிலுமருட்செயலேயாகலின், இவற்றுட் சில மறந்தொழிலேயேனுமெனப் பழித்தலையொழிவாயாக வெனபதாம்.

மேன் முத்தொழில் கூறி ஈண் டைந்தொழிலென்றன் மயமாம்.-பிறவெனின், ஆகாது; மறைப்பையு மருளையும் நிலை யி

றுதிகளினடக்கி ஆண்டு முத்தொழிலென்றூர், தம்முள் வேற்றுமையுடைமைபற்றி ஈண்டைந்தொழிலென்றூராகலின்.

இவையிரண்டு செய்யுளானும், சங்காரககடவுள் செய்யுந்தொழில் மறமாய் முடியுமெனனும நாததிகர்மதமும், வீண்டொழிலெனனும் மாயாவாதிகள மதமும், தன்பொருட்டெனனும் பரிணுமவாதிகள மதமும்பற்றி ஆசங்கிததுப் பரிகரித்து, மேலது சிறப்பிககப்பட்டது

---

# திரம்பவகிழுயருணை வருமாறு.

---

இப்படி ரட்சிககிற கர்ததா சங்கரிப்பானேனென்றும் புத்தன்சொல்ல, அவனை நோககி மேலு மருளிச்செய்கிறூர்.

அழிப்பிளைப்பாற்றல் - சங்கரிககிற காமததிஞலே அலைப்புண்ணு மானமாககளை இளைப்பாற்றும்படி சிறிதுகா ளவையிற்றை நீககிவிட்டு வைககிறது அபபடியிளைபபாறிவிடாமல், ஆன்மாக்கள் துககததையநுபவிகக மீளவுஞ் சிருஷடிப்பானேனென்னில்?—ஆகக மவ்வவர் கனமமெல்லாங் கழிததிட - சிருஷ்டிக்கிறது, மலம் நீங்காதபடியாலே மலநீங்குகைக் காரணமாக ஆனமாககளுககுத தனுகரண புவன போகங்களைக் கொடுத்துக் கன்மத்தைத் தொலைபிததல். அப்படி சிருஷடித்தாற்போல மலத்தைப் பாசம் வருத்தினது திருவடியிலே கூட்டிக்கொள்ளாமல் நெடுங்காலந் திதியெனறு நிறுத்துவா னேனென்னில்?—றுகரச்செய்கை காப்பது -ஆனமாக்கள் செய்தகன்ம மிகுதியாயிருக்கையிஞலே, அந்தக் கன்மம் புசித்துத் தொலைப்பிக்க வேண்டி இரட்சித்து. இப்படிசெய்யிற் கர்த்தா மறைப்பிப்பானேனென்னில் ?—கன்மவொப்பித்தெழித்திட மலங்களெல்லா

மறைப்பு - திரோபவிக்கிற அந்தபாகத்தைப் புசித்துத் தொலைப்பித்துக் கன்ம வொப்பிலே மலங்களெல்லாம் போக அநுக்கிரகமென்றது என்னில்,—அருளாசெய்திதானும் பழிப்பொழி பந்தம்வீடு - அநுக்கிரக முறைமைதானும் குற்றத்தைப்பொருந்தியிருக்கிற பாச பந்தங்களைப் போக்கி முத்திநெறியைக் கொடுக்கை இதுவொழிந்து முனசொல்லப்பட்டவை அநுக்கிரக மல்லவோ வெனனில்?—பார்த்திடி லருளேயெலலாம் - பார்க்குமிடத்திவனுககு நிக்கிரகமன்றி முன சொல்லப்பட்ட நாலுகாரிய மும் அநுக்கிரகமென்றே சொல்லப்படும்.

இந்தக் காரியமும் அநுக்கிரக மென்றதற்குப் பிரமாணம் தத்துவவிளக்கம், "கனமந்தனைக் கனிவிக்குங் காழிப்பிரான் கருணை, பனமைப்படுநகொழி லைநதுபடைப்பு நிலைகொருத்த, வினமையிழநத வொளிப்புத் துயாநின றெடுத்தலெனப, வன மைபடாநிலைமை பெரியோனுக கமைநதனவே." எனனுமதுங் கண்டுகொளக.

இதனாற் சொல்லியது ஆன்மாக்களை யிரட்சிக்கை காரண மாகக கர்த்தா பஞசகிர்த்தியங்களைச் செய்தானென்னு முறை மையை அறிவித்தது.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

———o———

அழிப்பு - ஒடுக்கமாவது,—இளைப்பாற்றல் - இளைப்பாற்றலும்,—ஆக்கம் - தோற்றமாவது,— அவ்வவர் கனமமெல்லாம் - அவரவர் கன்மங்கழியு முகத்தான,—கழித்திட - மலபாகம் வரச்செய்தலும்,—காப்பது - நிலையாவது,— நுகர்ச்செய்கை - கன்மங்கழியுமா றதனை நுகர் வித்தலும்,—மறைப்பு-மறை

ப்பாவது,— கன்மவொப்பின் - கன்மவொப்புவருவித்து,—மல ங்களெல்லாந தெழித்திட - மலங்களை முதிர்வித்தலும்,—அரு ள - அருளாவது,—பந்தம் வீடு - பந்தம் விடுவித்தலுமாகிய வுத விப் பயத்தன வாகலான,—பார்த்திடின - பராவுமிடத்து,— எல்லாசெய்திதானு மருளே - ஐந்தொழிலும் அருட்செயலேயா கலின,—பழி-பொழி - இவற்றுட சில மறதொழிலே போலு மெனப் பழித்தலே ஒழிவாயாக வெனபதாம்

இவையிரண்டு செய்யுளானும் சங்காரக்கடவுள் செய்யுந் தொழின் மறமாய்முடியுமெனனும் நாத்திகர்மதமும்,வீடுடொ ழிலெனறு மாயாவாதிகள் மதமும், தனபொருட டெனனும் பரிணாமவாதிகள் மதமும பற்றி ஆசங்கித்தும பரிகரித்து; மேல துசிறப்பிக்கப்பட்டது

## மறைஞானதேசிகர் உரை.



இங்ஙனம் பஞ்சகிருத்தியம பண்ணுகிற கர்த்தா வுக்கு வடிவு யாதெனறு வினவ, அவனை லோககி யுருமேனி யெனற விருத தமீருக வொரு தொடராக வுணர்த்து கிறார்.

அருவமோ ருபாருப மானதோ வன்றிநின்ற, வு ருவமோ வுனக்குநாகத்தா வடிவெனக் குணர்த்திங் கென்னி, லருவமு மருபாருப மானது மன்றிநின்ற, வுருவமு மூன்றுஞ்சொன்ன வொருவனுக் குள்ளதா மே. (௬௮)

(இ - ள்) அருவ உருமுடைய கத்தா நிட்களமோ, சகளநி மோ ருபா ட்களமோ, இவையல்லாக வெல்லாவவயவ

ரூப மானதோ
வன்றி நின்றவு
ருவமோ வுணா
க்குங் கத்தாவ
டிவெனக் குண
ர்த் திங் கென
வில்

ங்களுங் காணப்பட்ட சகளமோவென் றெ
னக்கு நீ யறிவிக்க வேண்டுமென்று நீ சொல்
லில்,

அருவமு மரு
பாரூப மானது
மன் றிநின்றவுரு
வமு மூன்றுஞ்
சொன்ன வொ
ருவனுக் குள்ள
தாமே.

முற்கூறிய நிரதிகாரியாகிய பரமகத்தாவு
க்கு நீ முன்னஞ் சொல்லிய மூன்றுமூ திரு
மேனியாம் எ-று.

உம்மை எண்.
ஓகாரம் வினாவின்கண் வந்தது
இதற்குச் சுப்பிரபேதமு மதங்கமுமெனவறிக (௬௮)

---

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

—0—

உபக்கிரமத்திற் கர்த்தா சித்ரூபியென றுபசம்மாரமு ம
வ்வாறே சமர்த்திப்பதான் மத்தியே பராமர்சை கூறுகின்
றது.

அருவமோரூபாரூப மானதோவன்றிநின்றவுருவமோவுணர
க்குங்கர்த்தா வடிவெனக் குணர்த்திங் கென்னில் - நீசொல்லு
ங்கர்த்தாவின் ஸ்வரூபம் அரூபமோ ரூபாரூபமோ வல்ல தரு
லத்தாரோ விவனெனக் கறிவியுமெனின்?—அருவமு மரூபாரூப

மானது மன்றினின்ற வுருவமு மூன்றுஞ் சொன்னவொருவனுக் குளனதாமே -முன்சொல்லப்பட்ட மூன்றுருபமு மொப்பற்ற பரமேஸ்வரனுக்கு லபபோகவதிகாரங்களிற் சுவேச்சையினு லுளனதாம, அவன் ஸ்வரூபஞான சிதானந்தப் பிரகாசமே யென்றிதனபொருள.

[Grantha text, illegible]

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

இதனுலுங் கர்த்தாசசரீரியல்லனென்பது சொல்லப்பட்டு, சில வாதிகள் சரீரியல்லாத கர்த்தாவுக்குக் காரியகர்த்திருத்துவங் கூடாதென்று சொல்லுவார்கள், அஃதெப்படியென்று வினவ, உத்தரமுரைக்கின்றார்.

இது வெளிபபொருள்

வினுவின் சேஷங்கருத்து இவை —கர்த்தா சரீரியோ, அசரீரியோ, அசரீரிச்சரீரியோ, அசரீரிச்சரீரியசரீரியல்லாதவரோ; இந்த நாலு பக்ஷத்துள் சரீரியசரீரி யல்லாதவனுகிற் சூனியபபொருளாய்ப் போவன, சரீரியசரீரியாகில் விருத்தமாம் இரண்டுஞ் சீதமும் உஷ்ணமுமபோல ஒருபொருளிலிரா. அப்படியிருக்குமாகிலுஞ் சரீரிக்கும் அசரீரிக்குஞ் சொல்லப்போகிறகுற்றஞ் சொல்லாமறறுனே வரும்.

## சிவஞானயோகியருரை வருமாறு.

—o—

இங்ஙனம் ஆறுசெய்யுளான் ஈறுமாகி மருவிடுமென்றதனை வலியுறுத்தி, இனி அநாதிமுத்த சித்துருவென்றதனை இருபத்திரண்டு செய்யுளான் வலியுறுத்துகின்றார்.

ஐந்தொழில் செய்யுமுதல்வனுக்கு வடிவம் இன்றியமையாமையின், அவ்வடிவமாவது அருவமுதலிய மூன்றனுள் யாதெனின்? அவனுக்கு அம்மூன்றும் வடிவேயாமென்பதாம்.

இது சொற்பொருட்பின்வருநிலை.

உள்ளவென்றது அன்பெறாத வகரவீற்றுப் பலவறிசொல்.

சொன்னவொருவன் அநாதிமுத்த சித்துருவென மேற்கூறப்பட்டவொருவன்

இதனானே அநாதிமுத்த சித்துருவாகிய சங்காரக்கடவுளுக்குத் தடத்த வடிவமிவையென்பது கூறப்பட்டது.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

—o—

இப்பனுவல் சொல்லிப்போந்த கர்த்தாவினுடைய வடிவு அருவமோ உருவமோ அரூபாரூபமோ வென்று கேட்டவனை நோக்கி; மூன்று மவனுக்குளதென் றருளிச் செய்கிறார்.

அருவமோரூபாரூப மாவதோவன்றிநின்ற வுருவமோவுனைக்குங்கர்த்தா வடிவெனக் குணர்த்திடுகென்னில் - நீர்சொல்லுகிற கர்த்தாவுக்கு வடிவு அருவமென்று சொல்லுமோ! உருவமென்று சொல்லுமோ! இவை யிரண்டுமல்லவாய் நிற்கிற அரூபாரூபந்தானோ என்று எனக்கு விளங்கச் சொல்லவேணுமென்று நீ

சொல்லில்?--அருவமு மருபாருபமானது மன்றிநின்றஉருவமு மூ னறுஞ்சொன்ன வொருவனுக்குள்ளனவாமே-அருபமாயிருந்துள்ள திருமேனியும், அருபாருபமாயிருந்துள்ள திருமேனியும், இவையிரண்டு மல்லவாய் நிற்கிற உருவமாயிருந்துள்ள திருமேனியும், ஆக இவைமூன்று திருமேனியும முன்சொன்ன கர்த்தாவுக்கு அநாதியே யுள்ளதாயிருக்கும்.

இதனாற் சொல்லியது அருவம் உருவம் அருபாருப மென்றுசொல்லப்பட்ட இந்த மூன்று திருமேனியும் சிவனுக்கே யுள்ளதென்று முறைமையை யறிவித்தது

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

—o—

உரைக்கும் கருத்தாவடிவு-ஐந்தொழில் எப்படி, முதல்வனுக்கு வடிவமின்றி யமையாமையி னவ்வடிவமாவது,— அருவமோவுருவருபமானதோவன்றி நின்றவுருவமோ-அருவாகியவடிவமோ அருவுருவாகிய வடிவமோ அவ்விரண்டுமின்றி நின்றவுருவாகியவடிவமோ இம்மூன்றனுள் இவ்வடிவென,—இங்கெனக்குணர்த்தெனனில் - இவ்விடத்து எனக்குணர்த்தவேண்டுமெனில்,— சொன்னவொருவனுக்கு - அநாதிமுத்த சித்துருவென மேற்கூறப்பட்ட வொருவனுக்கு,— அருவமு முருபாருபமானது மன்றி நின்றவுருவமு மூன்றும - அருவும அருவுருவும் உருவுமென்கின்ற மூன்றும்,—உள்ளவாமே - வடிவாமெனபதாம்.

இதனுனே அநாதிமுத்த சித்துருவாகிற சங்காரக் கடவுளுக்குத் தடத்த வடிவ மிவையென்பது கூறப்பட்டது.

## மறைஞானதேசிகர் உரை.



முற்கூறியவற்று ளுருவத்தின முறைமை யுணர்த்துகிறார்

நண்ணிடு முருவமென்னி னமக்குள வுருவம்போ
லப், பண்ணிட வொருவன்வேண்டு மிச்சையேற் பல
ருமிச்சை, கண்ணிய வுருவங்கொள்ளேம் யாம்பெருங்
கடவுடானு, மெண்ணிய யோகசித்தர் போலுரு விசை
ப்பனாறனே. (கக)

(இ-ள்.) நண்ணிடு முருவமெனில் — அநதக கர்த்தாவுக குருவந்தானே திருமேனியென்று சொல்லில்?

நமக்குள வுருவம போலப் பண்ணிட வொருவன வேண்டும — நமககொருவ ருண்டாக்கின வடிவுகள போல, வவருடைய சரீரமும் ஒருவனுணடாகக வேண்டும ஆதலா லநவததா தோடமுணடாம்.

இசசையேற் பலருமிசசை — இசசையினு லுமது கர்த்தா வடிவுகொள் ளுவனென்று சொல்லுகிறீராகில், ஆனமாக்களெல்லாருந் தங்கடஙகளிச்சையினுலே வடிவுணடாககிக கொளளவேண்டும.

கண்ணிய வுருவங் கொளளேம் யாம் — யாம நினைததவொரு வுருக கொள்ளமாட்டோமாதலால்,

பெருங் கடவுடானு மெண்ணிய யோகசித்தர் போலுரு வி — எல்லார்க்குங் கண்ணாற்காணவு முவமிக்கவு மளவிடவும் படாதேயிருக்கிற பெருமையினையுடைய யோகசித்தர் நினைத்தகோருருவைச் சமஷ்டிருபத்தாற் கொள்ளுமா

சைப்பன் றானே றுபோல, கர்த்தாவுந் தனது காருண்ணி
யத்திருவே யானமாகக்கொ யிரட்சிக்கையி
னபொருட்டுத் தனக்குவேண்டிய தோருரு
வைத் தானே கொள்வன எ-று. (௩௧)

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

———o———

இவ்வாறு விருத்த தருமமாயிருக்கிற ரூபமும ரூபாரூபமு
மரூபமு மொருவனுக்கு முடையின அநேகாந்திக தோஷமு
ண்டாமெனன, மேலு முருபாதிகளை யொவ்வொன்றுகப் பூர்வ
பக்ஷத்தி லாக்ஷேபித்துச் சித்தாந்தத்தில் சமாதானங் கூறல்.

நமக்கணிடு முருவமெனனி னமக்களவுருவமபோலப பண்ணி
ட வொருவன வேண்டும - பொருந்தப்பட்ட ரூபவான பரமே
ஸ்வரனெனின? நம்முடைய வுருவத்தை யொருவனுண்டாக்
கினதுபோல வவனுடையரூபத்தை யுண்டாக்குவா னொருவன
வேண்டும,—இச்சையேற் பலருமிச்சை-சுவேச்சையினு லுருப
ங்கொள்வரெனின? எல்லாருஞ் சுவேச்சையினு லுருபங்கொள
ளலாமெனின, அங்ஙனமல்ல — கணக்கிலுருவங் கொள்ளே
மியாம் - நாமெல்லா நினைத்தவுருவங்களை யெடுக்கமாட்டோ
ம,—பெருங்கடவுடானு மெண்ணிய வியோக சித்தர்போ லு
ருவிசைப்பன றானே - மகாதேவராகிய கர்த்தாவும் யோக
சித்தாக டாங்கணினைத்த வுருவமானது போலத் தமமுடைய
விச்சையினால் ரூபத்தைப் பொருந்துவரெனறறி.

பாகதஞ்செலவொடுவரவு மென்பதனு லிசைவனென்பதற்கி
சைப்பனென்றிருகாலத்தையுங் குறித்துச்சொல்லியதெனவறிக.

———

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

சரீரியுமாம் அசரீரியுமாம் சரீரியசரீயுமாம் என்று நாம் சொன்னோம், சரீரியசரீரியாகிற் சரீரிகளும் அசரீரிகளுஞ் சொல்லுங் குற்றம வருமெனறது ஏதெனறு குரு வினவுசிஷன கூறுகின்றதற்குக கூறுகின்றார்.

நணணிடு முருவமெனனில் - கர்த்தாவைச சரீரம் வநது பொருந்துமெனனில்,—நமக்குள வுருவமபோல - நமபோல்வார்க்குள்ள சரீரத்திற்குபபோல,—பணணிடவொருவன வேணடும - சிருட்டிக்க வேறொரு காததா விரும்பபபடுவன அப்படியாகி லவனுக்கும் வேறொருகாததா வேணடுமெனறு அநவஸ்தை வரும்,—இச்சையேல் - தமது சங்கற்பததாற்றமக்குச சரீரததைப பணணிக்கொளவாரெனறு நீர் படிநதுப் பேசில், தாம்சரீரியாயிருநது தமக்குச சரீரத்தைப்பணணிக் கொணடாரோ, அனறி யசரீரியாயிருநது பண்ணிக்கொண்டாரோ; சரீரியாயிருநது தம திநதச சரீரததைச சிருட்டித்தாராகுல், அந்தச் சரீரத்தையுஞ் சரீரியாயிருந்து சிருட்டிக்க வருமெனறனவஸ்தை வரும். அசரீரியாயிருநது சஙகற்பத்தாற்றமது சரீரத்தைப் பணணிக்கொண்டாரெனனில், அப்படிச் சங்கற்பததாற் சாவடபிரபஞ்சததையும் பணணுவரெனறு சரீரகற்பனை நிஷபலமாம். அப்படி யாகினும்,—பலரு மிசைசை-நாமெல்லாரும் நமது சஙகறபததால நமக்கு வேண்டிய சரீரங்களைப்பணணிக் கொளவோம. அப்படி நீ சொல்லவேண்டியதல்ல,— யாம் - நாமெல்லாரும்,—கணணிய வுருவங்கொள்ளோம் - கருதிய திவ்விய சரீரஙகளை மலாதி தகைந்த சாமர்த்தியர்களாதலாற் பண்ணிப் பொருத்திக் கொள்ளமாட்டோம்,—பெருங்கடவுடானும்- பரமகர்த்தாத்தானும்,—எண்ணிய யோ

காசித்தர்போ லுரு விசைப்பன்காணே - எண்ணிக்கையாயிரு க்கின்ற யோகர்கள சித்தர்களபோல வேண்டிய சரீரங்களை யெடுப்பன.

## சிவஞானயோகியருரை வருமாறு.

—o—

இவ்வுரையிற் (௩௯ ௬) இரண்டு செய்யுளையும் குராகமாக் கி உரையிட்டிருப்பதால் இச்செய்யுட்கு (௬௦) செய்யுளின் உரை வரிசையிற் பார்க்கவும்.

## நிரம்பவழகியருரை வருமாறு.

—o—

உம்முடைய கர்த்தாவுக்கு ஒரு வடிவுண்டென்று சொல் லில், நம்முடைய வடிவுகளபோல அவனுடைய வடிவையும் ஒரு வர் படைக்கவேண்டுமென்று சொல்ல, அவனது திருமேனி ஒரு வர் படைப்பிலகப்படாதென்று அருளிச்செய்கிறார்.

நண்ணிடுமுருவென்னில் நமக்குள்ளவுருவம்போலப் பண் ணிடவொருவனவேண்டும் - கர்த்தாவுக்கு உருவமுண்டென்று நீர் சொல்லில் எமக்குண்டான வடிவுகளபோல அவனுடைய ரூ பத்தையுமொருவருண்டாக்கவேண்டும். கர்த்தா சுவேச்சா விக் கிரகனுகையால் அவனுக்கு ஒருவடிவு ஒருவர் கொடுக்கவேண் டியதில்லை தன்னுடைய திருவுளத்துக்குப் பொருந்தின திருமே னி தானே யெடுத்துக்கொள்வனெனனில்?—இச்சைபேற் பல ருமிச்சை - அவனது சுவேச்சையினாலே உருவங்கொள்ளுவனெ ன்று நீர் சொல்லில்? சர்வானமாக்களுக்கும் தங்கள் தங்கள் இச்சையினாலே வடிவுகளை உண்டாக்கிக் கொள்வார்கள்.—

கண்ணியவுருவங் கொள்ளேம்யாம் - இப்படி சருவான்மாக்களு க்குக் கர்த்தா மிசையினுலே தங்களுக்குக் கருதப்பட்ட வடிவு களையுண்டாக்கிக் கொள்ளுவர்களென்று நீ சொன்னதை நாங் கொள்ளுவதில்லை. ஆனாலுமுன்னுடைய கர்த்தா வடிவு கொள்ளுகி றபடி யெப்படியெனில்?—பெருங்கடவுளானும்மெண்ணியயோ கசித்தர் போலுருவினைப்பனன்றே - எல்லார்க்கு மேலாய் மக த்தாயிருக்கிற கர்த்தா தானும், சொல்லப்பட்ட யோகசித்தர் கள் தங்களுக்கு வேண்டின வடிவு ஒருவர் கொடாமலிருக்கச் செய்தே தாங்களே யெடுத்துக்கொள்ளுகிற தன்மைபோல; சிவ னுந் தனக்குவேண்டின திருமேனி தானே கொள்ளுவான்.

நண்ணிடி முருவமென்றது, புத்தன் அவன் கர்த்தாவில்லை யென்றும் உண்டானாலும் உருவமுமல்ல வருவமுமல்லவென்று ஞ்சொன்ன விதற்குப் பரபக்கம், அவனமதம் "உருவொடுதி னுருவெனனி லுருவமுண்டாத் தானவேண்டு, முருவவலிங்கை யெனனி லுலகெலாமிசையாகு, முருவுலகத்துளோர்கட் குருவ துகனமாமெனனி, லுருவுடை யோகடெல்லா முற்றதுகன் மத்தாமே" என்றும, "அருவெனிறபவத்தினி லுறு மெடுத்தி டாகாசம்போல், மருவினனிழல்போவெனனில் மருவினர்க ளாகுமாட்சி, பெருகியவறிவுணடென்று பேசிடினசத்தோடுங், கருதிடவுருவமவேண்டு மில்லையேற் கருதலின்றே" என்னுமது ங்கண்டுகொள்க.

சித - பர - சௌ - மத - உடு - உசு.

இதனுற் சொல்லியது கர்த்தாவினுடைய திருமேனி கன் மத்துக்கிடமான ஆன்மாக்களுக்குள்ள வடிவுபோல ஒருவரா ல் சிருட்டிக்கப்பட்டதென்றுர், தன்னுடைய திருவுளத்துக்குப் பொருந்தினதொரு திருமேனியைத் தானே கொள்ளுவனென் னு முறைமையையு மறிவித்தது.

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

—o—

(௩௯-௪0) செய்யுளிரண்டுமே மோர்முடிபாகவி யுரையிட்டி ருப்பதால் இவ்வுரை (௪0) செய்யுள் வரிசையிற்பின் வைக்கப் பட்டது

---

## மறைஞானதேசிகர் உரை.

இதுவுமது.

வித்தக யோகசித்தர் வேண்டுருக் கொள்ளுமா போ, லுத்தமன் கொள்வனென்னி லவர்களி லொருவ னாவ, னத்தகை யவர்க்கெல்லா மாக்குவ தருளாலாங் கு, வைத்தது மாயையென்னில் வடிவெலா மாயையா மே. (௪0)

| | |
|---|---|
| (இ-ள) வித்தக யோகசித்தர் வேண்டுருக் கொள்ளுமா போ லுத்தமன் கொள்வனென்னில் | யோக சித்தர்களைப்போலக் கர்த்தாவுந் தனக்குவேண்டியதோ ருருவத்தைக்கொள்வனென்னில்? |
| அவர்களிலொருவனாவன | அந்தயோகசித்தர் ராகத்துவேஷத்துடன் கூடினவர்களாகையால், அவ்வியல்பினையு ஞ்சிவனுமுடையவனாவன. |
| அத்தகை யவர்க்கெல்லா மா | அத்தகைமைப் பாட்டினையுடைய யோக சித்தர்களெல்லாருஞ் சரீரத்தை யெடுக்கிற |

| | |
|---|---|
| க்குவ தருளால் | தாம் விடுகிறதுங் கர்த்தாவின தருளினாலே காண |
| ஆதலாலுவைதக | அவவிடத்துச் சரீரமெடுப்பதெல்லா மா |
| து மாயையென | யையென்று நீர் சொல்லுகிறீராகில், |
| னிர் | |
| வடிவெலா | யாதொருவன கொள்ளுகிற வடிவுகளெ |
| மாயையாமே. | ல்லா மாயாதேகமொழிந்து வேறில்லைகா |
| | ண எ - று |

இதற்குக கிரமுகமம (௭௦)

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

———o———

மேலிதுவுமது,

விதககபோக சித்தா வேண்டுருக கொள்ளுமாபோ லுக்தமன கொளவாரெனனிலவாரினி யொருவருடயன - சமர்த்தராயுள்ள போகசித்தர்களைப போல தேவாணமயுள்ள பாமேஸ்வரன வடிவுகொளவ ரெனனில், அசரிதகாகளி லொருவனுவன,—அததனை யவர்களெல்லா மாசகுவ தருளால்-உத்தமனையுடைய சித்தாகளெல்லாந தாஙகளவேண்டுருக கொள்ளுகிறது பரமேஸ்வரனுடைய பிரசாதத்தினாலே அப்படியே,—அங்கே வைத்தது மாயையெனனில் - அவவிடத்துச சித்தர்களுககுண்டாக வைததிகக மாயையெனின,—வடிவெலாமாயையாமே-உருவஙகளெல்லா மாயையே யாம என றிதனபொருள.

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

———o———

நீ்சொல்லிய திட்டாநதஞ் செப்பமன்றென்று செப்புகின்றார்.

வித்தகயோகர்சித்தர் வேண்டுருக் கொள்ளுமாபோ லுத்
தமன் கொள்வனெனவில் அவர்களி லொருவனுவன் - அத்
த வித்தகயோகர் சித்தர்களுக்குள்ளே யொருவனுவன. ஆனு
லென்ன? அவர்கள் பிராகாமிய சித்தியினுலே தங்களுக்குச்
செயற்கையாகிய திவ்வியசரீரங்களை யெடுத்துவிடுவார்கள்; த
ங்களியற்கையினுற் செயற்கையாகிய சரீரங்களைவிட்டு இயற்கை
யாகிய திவ்விய சரீரங்களை யெடுக்கமாட்டார்கள்,—அத்தகை
யவாக வெல்லா மாயகுவ தருளா லாங்கே வைத்தது மாயை
யெனவின் - அறுவனறியு மவர்கள் ஆங்கே - அவ்விடத்து,—
அத்தகையெல்லாம் - பிராகாமிய சித்தியினு லெடுக்குஞ் சரீர
ங்களனைத்து முபாதான காரணமின்றி யுண்டாகாதெனின்,—
அருளால் - சிவாஞ்ஞையினுல் காரியப்படுத்துவாரத்தினுலே,—
மாயைவைத்த தெனவின் - மாயையுண்டாக்கிக் கொடுத்தசெ
ன றுத்தாரு சொலவில், அத்திருட்டாந்தம்போல் அச்சிவனு
க்கும்,—வடிவெல்லா மாயையாமே - சரீரமுற்று மாயாமயமாமே.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

இனி இரசனைராகும் பிறர் கூறுங் குற்றங்களைப் பரிகரிப்
பாராய் உருவத்தின்கட் கூறுங் குற்றம் பரிகரிக்கவே, ஏனைய
வும் பரிகரிக்கப்பட்டனவாமென்று கருத்தான், உருவத்தின்க
ணுசங்கித்துப் பரிகரிக்கின்றார்.

முதல்வனுக்கு உருவமுண்டென்னின்? உருவமெல்லாம் ஒ
ருபெற்றியவாகலின் உருவமுடைய நம்மனோர்க்குளதாகிய ப
தந்திரம் முதல்வனுக்குமுளதாதல்வேண்டும்; அஃதன்றியின்
முதல்வனுக்குளதாகிய சுதந்திரம் நம்மனோர்க்குமுளதாதல்வே

ண்டும். இனி, நம்மனோர்க்கும் யோகிகட்கும் உளதாகிய வேறு
பாடு பெரிதாயினாற்போல, யோகிகண்முதலிய நம்மனோர்க்கு
ம் முதல்வனுக்குமுளதாகிய வேறுபாடு பெரிதாகலின்; ஒப்பு
மை கூறுதல் பொருந்தாதெனின்? அங்ஙனமாயினும், உருவ
டிவெல்லாம் ஒருபெற்றியாமெனின் உருவத்தின் வேற்றுமையில்
வழி அவ்வேறுபாட்டாற் போந்த பயன் என்னையென்பதாம்.

வித்தகயோகசித்தர் வேண்டுருக்கொள்ளுமாபோ லுத்த
மன்கொளவென்னின் என்றது அநுவாதஞ் செய்துகொ
ண்டது.

இவையிரண்டு செய்யுளுந் தடை. (ருக-ருஉ)

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

---

இப்படி யுமமுடைய கர்த்தா யோகசித்தர்களைப்போல
வடிவங் கொள்ளுவருகிலவர்களி லொருவனென்று சொல்ல
அல்லவென்று மறுத்து மேலருளிச் செய்கிறார்.

வித்தகயோகசித்தர் வேண்டுருக்கொள்ளுமாபோ லுத்தம
ன்கொளவென்னி லவர்களிலொருவனுக்கு - சாத்திரஞ்சொ
ன்ன முறைமையிலே சித்திபெறத்தக்க தபசுகளைப்பண்ணின
யோகசித்தர் தங்களுக்கு வேண்டின வடிவுகளைக் கொள்ளுத
ற்போல் சிவனும் அப்படி வேண்டின வடிவுகளைக் கொள்ளுவ
னென்னில்? இவனும் இந்த யோகசித்தர்களிலே ஒருவனாவன்.
அப்படி யல்லகாணும், சிவனுடைய வடிவு அந்த வடிவுகளுக்கு
ளொன்றல்ல. அதேதென்னில்? அந்தவடிவுகள் சிவனுடைய கா
ருணியத்தினாலே பெறுகிற வடிவுகளுமாய் மாயாதேகமுமா
யிருக்கையினா லெனக் கொள்க.—அத்தகையவர்களெல்லா மாக

குவதருளாலாங்கு வைத்ததுமாயை - அந்த முறைமையினையு
டைய யோகசித்தர்களெல்லாம கர்த்தாவினுடைய வருளினு
லே வேண்டின வடிவுகொள்ளுவர்கள் அப்படி கொள்ளுகைச்
செய்தேயு மவர்கள் கொள்ளுகிற தேகங்களெல்லா மாயாதேக
மாயிருக்கும்,— எனனில் வடிவெலா மாயையாமே - என்று
சீர்சொல்லில் கர்த்தாவாகிலும் வடிவுகொள்ளுவனாகிலந்த வ
டிவுகளெல்லா மாயாதேகமாம்.

இதனாற் சொல்லியது சித்தா யோகிகளைப்போலச் சிவனு
ம் தனக்கு வேண்டின வடிவுகொண்டாலும், அந்த வடிவுகள்
போலச் சிவனுடைய வடிவு மாயாதேகமல்லவென்ன; அவனு
மொரு வடிவுகொள்ளவேணுகையிலே வடிவுகளெல்லா மா
யாதேகமு மாமென் றவனசொன்ன முறைமையு மறிவித்தது

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

—0—

உருவகாரியமெனனில் - முதல்வனுக்கு உருவமுண்டெ
னவில்,—உருவகாரணம்போல - உருவமெல்லாமொரு பெற்றி
யவாகலி னுருவமுள்ள—பாசமமைந்தோர்க் குளதாகிய பாசதந்திரம்
போல,— பண்ணிட வொருவனை வேண்டும் - முதல்வனுக்கு மு
ருவுண்டாதற் கொரு கருத்தாவுமவேண்டப்பட்டு பாசதந்திரமா
தல் வேண்டும்,—இசைபெல்-முதல்வ னினைக்க வடிவம் கொள்
ளுதல் சுதந்திரமெனனில்,—அவனிச்சை - முதல்வனுக் குள
தாகிய சங்கற்பமாத்திரமே ஞானசத்து முளதாகல் வேண்டுமேல்,—யாங்க
ளெண்ணிய வுருவங் கொள்ளேம் - நம்மனோர் கருதிய வடிவமெடு
த்தல் முடியா,—பெருங் கடவுளாதலும்-முதல்வனும்,—யோக
சித்தாபோல் எண்ணிய வுருவிசைப்பனகாண - யோகிசித்தர்

போலத் தான்கருதியதொரு வடிவத்தை எடுத்துக்கொள்வன்,—வித்தகயோகசித்தர் வேண்டுருக்கொள்ளுமாபோல்-சதுரப்பாடுடைய யோகசித்தர்கள் வேண்டுருக் கொள்ளுமாறுபோல,—உத்தமன் கொள்வானென்னி லவர்களி லொருவனுமவன்-முதல்வ னினைந்த வடிவங் கொள்வானாயி னவனியோகசித்தர்களிலொருவனாய் முடியுமெனின்,--அதனை யவர்க்கொல்லாமாகருவ தருளால்-அத்தன்மையுடைய யோகசித்தர் முதலியோர் வேண்டுருக் கொள்வது முதல்வனருளான்றி முடியாமையானும்,—இங்குவைத்தது மாயையெனில் - அவ்வறிபுமவ்விடத்தில் யோகசித்தர்கட் குண்டாகிய வுருவ மாயாகாரியமாய் முதலானாரு,நமமனோர்க்கும் யோகிகட்கு முள்ளதாகிய வேறுபாடு பெரிதாயினாற்போல யோகிகள் முதலிய நம்மனோர்க்கு முதல்வனுக்கு முள்ளதாகியவேறுபாடு பெரிதாகவி னுபமை கூறுதல் பொருந்தாதெனின்?— வடிவெலாமாயையாமே-அங்ஙனமாயினுமுருவடிவெல்லா மொருபெற்றியாகிய மாயாகாரியமேயாகலி னுருவத்தின் வேறுமை இல்வழி அவ்வேறுபாட்டாற்போந்த பயனென்னையென்பதாம்

இவைஇரண்டு செய்யுளுந் தடை (நகக-சப)

---

## மறைஞானதேசிகர் உரை.



ஆகலா லெமதுகாத்தா மாயாரூபியென வுணர்த்துகிருர்.

மாயைதான் மலத்தைபபற்றி வருவதோர் வடிவமாகு
மாயவா ணவமகன்ற வடிவொடு தொழிலியார்க்கு
நாயக னெல்லாஞானத் தொழின்முத னண்ணலாலே
காயமோ மாயையன்று காண்பது சத்திதன்னால்.(சக)

(இ-ள்.) மாயைதான மலத்தைப் பற்றி வருவதோர் வடிவமாகும் — நீசொல்லிய மாயை கன்மத்துக் கீடாக வடிவை யெடுப்பிப்பதன்றித் தனித்தொரு வடிவை வேறொன்று மெடுப்பிக்கமாட்டாமையால் மலத்தைச் சார்ந்து வருவதொரு வடிவைப் பொருந்தும்.

ஆயவாணவமன்றே அறிவொடு தொழிலையாக்கும் — இப்படி யான்மாக்களைப் பொருந்திநின்ற வாணவ மலமானது அவர்களது ஞானக்கிரியைகளைத் தடுத்து பிரகாசியாதபடி நிற்கும்.

நாயகனெல்லா ஞானத் தொழிலினு முதலனானமையாலே — ஆன்மாக்களைப் போலக் கிஞ்சிஞ்ஞத்தையு மறைப்பையு மில்லாத கர்த்தாவானவன் சர்வத்தையு மறிகையினாலுஞ் சர்வகிருத்தியங்களைப் பண்ணுகையினாலும்

காயமோ மாயையன்று — அவனது வடிவு மாயையினா லெடுக்கப்பட்டதாயி னவனும் நம்மைப்போல வொருவனாய் விடுவன்,

காண்பது சத்தி தன்னால் — யாங்காணப்பட்ட திருமேனி யவனது சத்தி சாமர்த்தியத்தாற் கொண்டது. எ-று.

ஏகார தேற்றம்

அவனுக்கு வடிவுண்டாகப் படுவது சத்தியா லென்றறிக (௬௪)

இதற்குக் கிரணாகமத்திலும் பார்க்கினையிலுங் காண்க.

---

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

—0—

சொல் உத்தரங்கூறல்.

**மாயைதான் மலத்தைப் பற்றி வருவதோர் வடிவதாகும்.**

மாயையான தஞ்ஞான சம்பந்தியாயிருக்கிற வான்மாக்களைப் பற்றி வருவதொரு ரூபமாகும்,— ஆயவாணவ மகன்ற வறிவொடு தொழிலையார்க்கும் - அஞ்ஞானமாகிய வாணவம் பெரிதாகிய ஞானத்தையுங் கிரியையு மறைக்கும் அதைநீங்கிய,—நாயகனெல்லா ஞானத்தொழின் முகமன்னாலே காயமோ மாயையன்று காண்பது சத்திகனைல் - சர்வலோகநாயகனான சிவன் சர்வஞ்ஞனுஞ் சர்வகர்த்தாவு மாகையினாலே அவனுடைய தேகம் மாயையல்ல பின்னையேதெனின்? சிற்சத்தியேயென நிகழ்பொருள்.

[illegible — Grantha script verse] ஸம்ஹவாரோ... இதி.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

———o———

ஏகதேசவுவமையில் முற்றுவமைக்குள்ளவுரை யுரைக்கப்படாதென றுரைக்கின்றார்.

மாயைதானமலத்தைப்பற்றி வருவதோர் வடிவமாகும் - ஆணவமல நிமித்தமாக வாராநின்றிருக்கும தூலசூக்குமசரீரமாகும். எதற்காக?—ஆயவாணவம - அந்த ஆணவமலம பசு ஆன்மாக்களுக்கு,— அகன்ற வறிவொடு தொழிலையார்க்கும் - சிவனுக்குப்போல விரிந்த சர்வஞ்ஞத்துவஞ் சர்வகர்த்திருத்துவ மெனநின்ற சிவத்துவமாகிய பேரறிவைக் கட்டும. அதனாலத்தப் பசுவானமாக்களுக்கு மலபரிபாகம் வரும் பொருட்டுப் போகம்புசிக்கச சிற்றறி வுண்டாகச் சிவனருளால் மாயை தூ

வுமன்றி எல்லாவறிவும் எல்லாத்தொழிலும் எல்லா முதன்மை யுமுடையன. இங்ஙனம் அங்கிசுட்டுத தம்முள ஏற்றத்தாழ்வு ண்மையின், அதற்கேற்ப மலத்தைப்பற்றிய பசுக்களுக்கு அத னோடுகூடியுடைத்தாய ஏகதேசவறிவைச்செய்யு மாயை யுருவமு ம, அநாதிமுத்த சித்துருவாகிய பசுபதிக்கு மலநீங்கியவுயிர்க கு வியாபகவறிவைச் செய்யுஞ் சத்தி யுருவமுமாதலே அமைவு டைமையின், அங்ஙனங்கூறுந் தம்முள் ஏற்றத்தாழ்வுண்மை இ னிது விளங்குதலான், அதனையறியாது இச்சையேற பலரும் ச்சையென்றும, மாயைகொண்டு வடிவெல்லா மாயையாகுமெ ன்றுங் கூறுதல் அடாதென்பதாம்

தானென்பது அநுவதித்தலையுணர்த்திநின்றது

பற்றியென்பதுபோல "ஒன்றுவிக்கும்பற்றால்" என்புழிப் போலப் பற்றிக்கொண்டு நானென்னும்பு விரித்துணர்க

காயசெனெல்லாஞானந் தொழின்முத னென்னவாலென வே, உயிர்கள் ஒருஞானத் தொழின்முதலே நண்ணுவனவென பது பெற்றாம்

அகறல் நீங்குதல்.

ஆதல் பொருந்துதல், அஃது உபசாரத்தாற் காரியத்தின மேனின்றது

ஓகாரம் சிறப்பின்கண் வந்தது

ஏகதேசவறிவைச் செய்தல் ஏகதேசப்படுந் தகுதியுடைய பொருட்கேயன்றி ஏனையதற்குரித்தன்று, வியாபகவறிவைச்செ ய்தல் வியாபகப்பொருட்கேயன்றி ஏகதேசப்படுந் தகுதியுடை யதற்கு உரித்தன்றாகலான், ஏகதேசத்திலறியும் பசுக்களுக்கு ஏகதேசப்படுந் தகுதியுடைய மாயையே உருவமாயிற்று; வியா பகமாயறியும் பசுபதிக்கு அதுபோலேகதேசப்படுந் தகுதியில் லாத சத்தியே உருவமாயிற்றெனக் கொள்க.

இனி, ஆணவமலத்தை அறிவொடு தொழிலையார்க்கும் என்பதற்கு, வியாபகஞானத் தொழில்களை ஆணவமலந் தடுக்கு மென்றுரைப்பாருமுளர். முன்னும் பின்னும் பொருளியைபுப் படுத்தற்கேலாது நின்றுவறலுமாகலின் அஃதுரையன்மையறிக.

## நிரம்பவழகியருரை வருமாறு.

மீளவும் புத்த ருமமுடைய கர்த்தாவுக்கு மாயாதேகமல்லவோவென்று சொல்ல, எம்முடைய கர்த்தாவுக்கு மாயாதேகமல்ல, சத்திவடிவுகாணும். அப்பொழுது சத்திவடிவென்றும் மாயாவடிவென்றும் பேதமயாதோவென்று சொல்ல, ஒவ்வாதென்று மறுத்தருளிச்செய்கிறார்.

மாயைதானமலத்தைப்பற்றி வருவதோர் வடிவதாகும் - மாயாதேகமானது ஆன்மாக்கள் செய்த கன்மத்தாக கிடாச ஆணவமலங் காரணமாகவுண்டாய் வருகிறவடிவுகளாகயிருக்கும். எம்முடைய கர்த்தாவுக்குச் சத்திவடிவு காணும். அப்போ சத்தியாலே கொள்ளப்பட்டவடிவு அப்படிப்பல்லவோ, அல்ல. அதெப்படியெனில்?—ஆணவமலம் மறைத்த அறிவொடு தொழிலையார்க்கும் நாயகன் - இப்படி அநாதியே யுண்டாய்வருகிற ஆணவமலத்தால் மறைக்கப்படாமல் மலாதீதராயிருக்கிற ஞானசத்தியையுங் கிரியாசத்தியையு முண்டாக்குகிற கர்த்தாவானவன்,-- எல்லா ஞானத் தொழில்முதல நண்ணலாலே காயமோமாயையன்று - அந்தக் கர்த்தா சருவஞ்ஞத்தையும் சருவ கிருத்தியத்தையும் சருவ முதன்மையையுமுடையவனாகையாலே அவனுக்கு வடிவு மாயையல்லவாகையாலே,—காண்பது சத்திதன்னால் - அவனுடைய வருளை யவனுக்குத் திருமேனியாம் என்றறிவாயாக.

இதனாற் சொல்லியது மாயாசரீர மலசம்பந்தமாயிருக்கிற ஆன்மாக்களுக் கொழிந்து சிவனுக்கில்லையென்றும், அவன் மலரஹிதனாயிருக்கிறபடியினாலே தனது சத்தியே வடிவாகச் சகளீகரித்துப் பிரபஞ்சத்தை நடத்துவனென்னு முறைமையு மறிவித்தது.

## சுப்பிரமண்யதேசிகருரை வருமாறு.

இனி விடை.

நீ பின்னங் கூறுதல் பொருந்தாது, அச்சிவனேற்றத் தாழ்வா லங்கங்கள் வேற்றத் தாழ்வுடையனவன்றித் தம்மு ளொப்பனவல்ல, அற்றேலவ்வேற்றத் தாழ்வு கொள்ளனே யெனிற் கூறுதும். போகிகளம்மனோரெல்லாரும் மலத்தைப் பற்றிக்கிடக்கும் பசுக்கள், அதுவன்றி ஒன்றையே யறிதலுமொன்றையே செய்தலுமொன்றின்மேல் முதன்மை யாதலுமாகிய அற்பஞானத் தொழின் முதலுடையராம் அம்முதல்வருள்ளான,— ஆயஆணவ மகன்ற - இவ்வாணவமலம் நீங்கிய,— அறிவொடு தொழிலையார்க்கு நாயகன் - அறிவிற்றங்கி நின்றுணர்த்தவோனாகிய பசுபதி —எல்லா ஞானத்தொழின் முதன்மைகளாலே - அதுவுமன்றி யெல்லா அறிவு மெல்லாத்தொழிலு மெல்லா முதன்மையு முடையன் இங்ஙனமங்கி கட்டுத் தம்மு ளேற்றத் தாழ்வுகளுண்மையி னதற்கேற்ப,—மலத்தைப்பற்றிய பசுக்களுக்கு,—வருவதோர் மாயைதானவடிவமாகும்-அகதேடிவை புடைத்தா யேகதேசஅறிவைச்செய்யு மாயை யுருவமாதலும், அநாதிமுத்த சித்தருவாகிய பசுபதிக்கு,—காயமோர் மாயையன்று-வடிவ மேகதேசத்தைச்செய்யு மாயையல்ல ஆகலின,— சத்திதனால் காண்பது - மலநீங்கிய வுயிருக்கு வியாபக அறி

வைச்செய்யும் சத்தியுருவமு மாதலே யமைவுடைமையின் அங்கங்களினூந் தம்மு ளேற்றத்தாழ்வு மின்மை இனிது விளங்குதலா ன அதனையறியாது இச்சைசேயற பலருமிச்சை யென்றும, மா யையெனினில்ல வடிவெல்லா மாயை யாகுமென்றுகூறுதல் அடா தெனபதாம்.

---

## மறைஞானதேசிகர் உரை.



அவனுக்கு வடிவுண்டாகப் பகிவது சத்
தியாலென வுணர்த்துகிறார்

சத்தியே வடிவென்றாலுந் தானேபரி ணாமமாகு,நி
த்தமோ வழியுமத்தா னின்மல னருவேயெனனி, னத்
துவா மாககததுள்ளா னெனல்வ னருமைதனனைப்,புத்
திரா னுடைமைபோல விருந்ததன் புகலக்கேளீ.(சஉ)

(இ-ள்.) சத்தியே வடிவென்றாலுந் தான பரிணாமமாகு நித்தமோ வழியு மத்தா னின்மல னருவேயெனனில — அநந்தசகர்த்தாவுககுச சத்திதானே வடிவானெனனில் ? அப்பொழுது பரிணாமமென னுங் குற்றமுண்டாம அதற்கு நித்தியத்து வமில்லையாயவிடும அதுவுமேலின்மலனாகிய சிவன ருபமொழிந்து ருபங்கொள்ளானென று நீசொல்லில்?

அத்துவா மார்க்கத துள்ளா னெனறு — அருபமாகி லானமாக்களுக்குப் பாவனை கூடாது.

ஆகையால் வடிவுடையவனையே பாவித்துப் பூசிக்கையின பொருட்டு மயிர் தோல் முதலியவாறுங் கலைமுதலியவாறுக இ

சத்தியே வடிவென்றாலுந் தான்-சிவனுக்குச் சிவசத்தியே சரீரமென்று சொன்னாலும் அகண்டித மூர்த்தியாகச் சொல்லலாம், கண்டிதமூர்த்தியாகச் சொல்லில்,—பரிணாமமாகும்-திரிவதாகும். அதனால்,—நித்தமோ வழியும் - நித்தமென்கிறதுபோய் அநித்தியமாகும் மாயை கலாதி காரியமாவதுபோல ஏகதேசத்திற கண்டித மூர்த்தியாமெனனில் மாயைபோற் சடமாம்,— அதனால் - அந்தக்குற்றம் வருதலால்,—நின்மல னருவே யெனனில் - நீர் சொன்ன வுருவமன்று, நீர்சொன்ன வருவே யெனனில்?—அருவாமார்க்கத்துள்ளானன்று - சிவன் சடத்தருவா மார்க்கத் தொருவுருவாயிருக்கும் பொருள்போல்லன, ஆவனெனனில்,—இயன்றமை தன்னைப் புத்திதானுடைமைபோல விருந்தனை புகலக்கேணி - மாறுபடுமெனபது சொல்ல நீ கேள்.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

அங்ஙனமாயினும் உருவமெல்லாங் கண்டிதப்பொருளாகலிற் பரிணமித்தழிவெய்தாத சிவசத்திக்குத் தகாமையால், அநாதிமுத்த சித்துருவாகிய முதல்வன் முதற்கட் கூறப்படும் அருவப்பொருளாதன் மாத்திரையானே அமைவுடைத்தெனின்? அற்றதுவாயையும் சடமாம் பொருளே அவற்றோடொப்ப வைத்து அங்ஙனங் கூறுதல் பொருந்தாதெனபதாம்.

புத்திதானுடைமைபோல விருந்தனையெனபது இழித்தற்கண் வந்த குறிப்புமொழி

அனறெனபது பாடமாயின், அத்துவாமார்க்கத்துள்ளானென்பது. அத்துவாமார்க்கத்துள் ஒன்றாகக் கருதப்படானெ

ன்றுரைத்து, அனாதியென்பது அவயவத்துவாக்கள தியல்போடு மாறுபட்ட இயல்பென்ன வினைத்தொகையாக வைத்துரைக்க. அன்றுதல் அப்பொருட்டாதல் "அனாதிஞர்புரமெரித்தார்க்கு" எனபதனுமுணர்திக. அற்றேல், முதல்வன் அருவமேயெனில் அத்துவாக்களினொருவனும் முதயுமென்றல் யாங்ஙனமெனின்? அது வருஞ்செய்யுளிற் கூறப்படும்

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

—0—

தன் சத்தியே வடிவாதலுடைமையானே உருவமுண்டாம், உருவமுண்டானபொழுதே அதற்கொரு அழிவு முண்டாம், ஆகையால் சிவனுக்கு வடிவு அருவமென்று புகலென்சொல்ல; அருவமல்லவென்று மறுத்தருளிச்செய்கிறார்

சத்தியே வடிவென்றது ஞானபரிணாமமாகு நித்தமேயாவதியும்—அந்தக் காரணத்தாலுங்கூடத் திருமேனி சத்தியேயென்று சொல்லினும் அதற்குப் பரிணாம முண்டாகத் தகுதியமென்கிற முறைமையும் இல்லையாயவிடம்,—அதனால் நிர்மலனுருவேயெனவிலத்துவாமாகத்துளானென்று—அநாதி நிர்மலமே சிவன், அருபியாயிருப்பான் ஞானமென்று நீ சொல்லின், அருவமுடையாயிருக்கும் அத்துவாமோதத்தினென்று வேதாகமங்கள் சொல்லுகிற முறைமையுண்டாகாது சிவனுடைய திருமேனி யுருவமானாலும் அதுக்கழிவில்லை யென்றும், அத்துவாமோதத்தி யாகையினாலருவமல்லவென்றுஞ்சொல்ல, இவையிரண்டு மல்லவென்னில்? பின்னை ஏதென்று கேட்க,—மேலு மருளிச்செய்கிறார். இவனருமை தன்னைப் புத்திரனுடையைபோல விருந்தனை புகலக்கேண்மை—ஆகையால் நீ புத்தியுடையவர்களைப்போலே யிருந்தாய், அதைக்

கர்த்தாவினுடைய வருமையை நா முனக்குச் சொல்ல நீ கேட்பாயாக.

இதனாற் சொல்லியது சிவன் றனது சத்தியே வடிவாகச் சகளீகரித்தாலும், அது ஒரு காலத்திலு மழியாதென்றும்; அது அரூபமாயிராதென்னு முறைமையு மறிவித்தது.

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

சத்தியே வடிவென்றாலும் - அவனுக்குச் சத்திவடிவாயினும்,— தானபரிணாமமாகு நித்தமோவழியும் - உருவமெல்லாங் கண்டிதப்பொருளாதலின் பரிணமித் தழிவெய்தும்,— அதுகால் - அதுசிவசத்திக்குத் தகாமையால்,— நின்மல னருவேயென்னில - அநாதிமுத்த சித்துருவாகிய முதல்வன முதற்கட கூறப்படும அருவப்பொருளாகவே மாத்திரை யென்றலே அமைவுடைத்தென்னில்,— அந்நுவயாமார்த்தத்தாளா னன்று - ஆறத்துவாவையுங் கடந்தபொருளை யவற்றோடொப்பவைத்து அங்ஙனங் கூறுதல் பொருந்தாதென்னில்,— இவனருமை தன்னை - இவன்தன்மையை,— புத்திரனுடைய போல இருந்தனை - புத்திரனுடையாய்போல விருந்தவனே,— புகலக்கேள் - கூறுவாம் நீ கேட்பாயாக வென்பதாம்.

---

## மறைஞானதேசிகர் உரை.



மேலைக்கோர் புறனடை யுணர்த்துகின்றார்.

உலகினிற் பதார்த்தமெல்லா முருவமோ டருவ மாகி, நிலவிடு மொன்றொன்றாக நின்றவந் நிலையே,

போல, வலகிலா வறிவன்றானு மருவமே யென்னிலா யந்து, குலவிய பதார்த்தத்தொன்றாய்க் கூடுவன் குறித்திடாயே. (௪௩)

(இ-ள்.) உலகினிற் பதார்த்தமெல்லா முருவமோ டருவமாகி நிலவிடும் — விசுவத்திலுண்டாகிய பதார்த்தமெல்லா முருவமாயு மருவமாயும் பொருந்தாநிற்கும்.

ஒன்றொன்றாக நின்ற வந்நிலையேபோல — அந்த ரூபமும் ரூபமுங் கூடிநின்றாலும் உருவ த்திரவிய மருவத்திரவிய மாகாது, அருவத் திரவிய முருவத்திரவிய மாகாது நின்ற முறைமைபோல;

அலகிலா வறிவன்றானு மருவமே யெனவில் — சர்வஞ்ஞனான சிவனு மருவத்தன்மையுடைய னென்றால் அப்பொழுது

ஆய்ந்து — ஆராய்ந்து,

குலவிய பதார்த்தத்தொன்றாய்க் கூடுவன் குறித்திடாயே — ஞானமார்க்களாற் கொண்டாடப்பட்ட சிவனும், விசுவத்திற் பதார்த்தங்களோ டொன்றாய் விடுவன்காண் எ-று.

இதற்கும் பந்தமுமென்ற விருத்தத்துக்கு மதங்காகம மெனவறிக (௪௩)

---

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

——o——

**உலகினிற் பதார்த்தமெல்லா முருவமோடருவமாகி நிலவிடு மொன்றொன்றாக நின்ற வந்நிலையேபோல வலகிலாவறிவன்.**

டைய சிவனு முருவில்லாப்பொருளென்று சொல்லில்,—ஆய்ந்து உலகிய பதார்த்தத் தொகுதிக் கூடுவன் - விசாரித்துக் கொண்டாடப்பட்டனவாகா மாயா மாயாகாரியப்பொருள்களின் ஒன்றுடைய அப்பொருள்களோடு கலப்பில்லான கலப்பன,—குறித்திடாயோ - விசாரித்துப்பார்

சித்துருவுஞ் சடவுருபோ லன்றென்று தாற்பரியம்.

---

## சிவஞானயோகிகளுரை வருமாறு.

—o—

ஆகாயமுதலிய அருவப்பொருள் உருவத்தினியல்புடையதாகாது, நிலமுதலிய உருவப்பொருள் அருவத்தினியல்புடையதாகாது, சந்திரன்முதலிய அருவுருவப்பொருள் அருவியல்பேயுடையதுமாகாது உருவியல்பேயுடையதுமாகாது இங்ஙனம் ஆராய்ந்துணரப்பட்ட பொருள்களெல்லாம் ஒன்று பிறிதொன்றினியல்புடையதாகமாட்டாது ஆகலான், அநாதிமுத்த சித்துருவாகிய முதல்வனை அருவப்பொருளேயெனின்? அவனுடைமை போல மாட்டாமையுடையனெனப்பட்டு அவற்றுளொருவனாய் முடியுமென்பதாம்.

உருவமோருவமெனப்பதனை இரட்டுறமொழிந்துரைத்துக் கொள்க.

ஒன்றினியல்பு ஒன்றுடைத்தாகாதென்பார், ஒன்றொன்றாகாவென வுபசரித்தார்; இவ்வாறுரையாதார்க்குச் சற்காரியவாதமுரணுமாறுணர்க.

இதனானே நின்மலன் அருவேயென்பார் மதமும், அருவுருவேயென்பார் பக்ஷமு மறுக்கப்பட்டவாறுமாயிற்று. அங்ஙனமாக, சத்தியேவடிவென்றால் பரிணாமமாகவே அநித்த

மமாய் விடுமெனக் கூறிய சூத்ரத்திர்குப் பரிகாரமென்னை யெ
னின, அது வருஞ்செய்யுளிற் பெறபபடும்.

---

## நிரம்பவகிழயருரை வருமாறு.

—o—

அந்த முறைமையைத் தெளிய வெனக்குச்சொல்லவேணுமென்
ன மேலருளிசசெயகிறா.

உலகினிறபதார்த்தமெல்லா முருவமோடருவமாகி நிலவி
டும் - பிரபஞசததி லுணடான திரவியமெல்லாம விளங்கப்பட
ட அருவமும் அததுடனேயுருவமாயிருககும்,—ஒனறொனறகா
கினறவகநிலேயேபோல - எநதப் பதாாததஙகளதான அருவமு
ருவமாகாமல் உருவ மருவமாகாமல் அருவமருவமாயும உருவமு
ருவமாயும் நிறகுநதனமைபோல,—அலகிலாவீசனறு மருவ
மேயெனவிலாயநது-எண்ணிறநத திருமேனிகளெல்லாந தாஞ
யநிற்கிற பரமேசுரனேயும நீயருவமெனறே யாராயநதுசொல்லி
ல்,—குலவியபதாாததத்தொனருய் கூறுவன குறிததிடாயே-
ஆகையா லநதக காததாவும் அனமபோததாலே அறிநதுசொ
ணடாடப்பபடட பிரபஞச பதாாத்தஙகளிலே ஒனருய் விடுவ
ன் இதனே யப்படி யாகாத படியிஞலே காததா வருவமல்லவெ
னறு புத்திபண்ணிக கொள்வாயாக.

இதனற் சொல்லியது பிரபஞ்சத்திலுளள பதார்த்தங்க
ளெல்லா மாயாபதார்த்தருமா யருவமு முருவமுமா யிருக்கும,
சிவன அவையிற்றி லொனறுகாதபடியாலே அருவமல்லவென
று முறைமையும் அறிவித்தது.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

——o——

உலகினிற் பதார்த்தமெல்லாம - உலகிற்காணப்பட்ட பதார்த்தமெல்லாம்,—உருவமோ டருவமாகி நிலவிடும் - உருவும் அருவும் அருவுருவமாகி காணப்படுநிற்கும்,—ஒன்றொன்றாகா நின்ற அந்நிலையேபோல - ஆகாயமுதலிய அருவப்பொரு ளுருவத்தி னியல்புடையதாகாது, நிலமுதலிய வுருவப்பொருள் அருவத்தி னியல்புடையதாகாது, சந்திரன்முதலிய அருவுருவப் பொருள் அருவியல்பேயுடையது மாகாது,உருவியல்பேயுடையது மாகாது, இவ்வாறு மாறுபடுத்தவாறுபட்ட பொருள்களெல்லாம் ஒன்று பிறிதொன்ற னியல்புடையதாக மாட்டாதாகலான்,—அலகிலா அறிவனொன்று மருவமேயெனனில் -அநாதிமுத்த சித்துருவாகிய முதல்வனை அருவப்பொருளேயெனின்,—குலவிய பதார்த்தத்தொன்றுப்பக் கூடுவன - அவனாற் கொண்டாடப்பட்ட பதார்த்தங்களைப்போல மாட்டாமையுடைய னெனப்பட்டவாறு ளொருவனாய் முடியும்,—ஆய்ந்து குறித்திடாயே - நீ சிந்தியாராய்ந் தறிவாயாக வென்பதாம

இதனானே நின்மலனை அருவேயென்பார் மதமும் அருவுருவேயென்பார் மதமும் மறுக்கப்பட்டவாறு மாயிற்று.

---

## மறைஞானதேசிகர் உரை.



அநந்தக் கர்த்தாவினவடி வினைதன்மையென்
றளத்தற்கரிதென றுணர்த்துகிறார்.

பந்தமும் வீடுமாய பதபதார்த்தங்களல்லாதுந் தமு மாகியில்லா னளப்பில னாதலாலே, யெந்தைதா

னின்னனென்று மின்னதா மின்னதாயி, வந்திடானெ
ன்றுஞ்சொல்ல வழககொடு மாற்றமினறே. (சுரு)

| | |
|---|---|
| (இ-ள்.) பந்தமு ம் வீடுமாய | ஆன்மாக்களைப் பந்திக்கப்படும் பந்தமுமவர்களை மேலானபதத்தை யடைவிக்கப்படு மோட்சமுமெனக் கூறிய சொல்லும்பொருளு மல்லாதவன, |
| பதபதார்த்தங்க ளல்லான் | |
| அந்தமு மாதியில்லான | முடிவெனனும் பதத்தி னுடையவு முதலெனனும் பதத்தினுடையவும் பொருளல்லாதவன, |
| அளப்பிலன | அளவைப் பிரமாணங்களா லளவிடற் கரியவன, |
| ஆதலால் | இத்தன்மையை யுடையனாதலாலே; |
| எனதைதா னின்னனென்று மின்னதா மின்னதாகி வந்திடானென்றுஞ் சொல்ல வழககொடு மாற்றமினறே. | எமதுகர்த்தா வொருவராற சுட்டியறிதற் கரியனாகையாலு மின்னதாகுமென றறிவிடற் கரிதாகையாலு மின்னவனாகா னென்று சொல்லுதற கேதுவுடன கூடியதொரு சொல்லில்லை. எ - று. |

ஏகாரம் தேற்றம்.

உ-ம். மைப்படிந்த கண்ணாளுந் தானுங்கச்சி மயானத்தான்வார்சடையான் மாசொனறில்லா, னொப்புடைய னல்லனொருவனல்ல னோரூரனல்ல னோருவமையிலலி, யப்படிய னவ்வுருவ னவ்வண்ணத்த னவனருளே கண்ணாகக் காண்பதல்லா, லிப்படிய னிவ்வுருவ னிவ்வண்ணத்த னிவனிறைவ னென்றெழுதிக் காட்டொணாதே. (சுஅ)

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

---0---

மேல் சிவஸ்ரூபத்தை யத்த வியாவிருத்தியினாற் றெருத்துக் கூறல்.

பந்தமும் வீடுமாய பதபதார்த்தங்களல்லான் - ஆன்மாக்களைப் பந்திப்பதுமாயாணவத்தடனீங்குவதுமாய சத்தார்த்த ஸ்வரூபமான வாங்மயவிஞ்ஞான ரூபியென்று சத்தப்பிரமவாதி சொல்லுவதுமன்று.

இதர்குச் சம்மதி வாக்குக்களினரோற்றத்திலெழுதிறோம்.

சப்தமே ப்ரம்மமெனபதற்குச் சமமதி.

உ ரு மி ம ம் இ - தா நா ஹ தி ஸ ய ரா ஜ ா ந ம வ ா ய

உஜா த ரா ஹி ஜெ வ தா.

அந்தமு மாதியில்லான - உற்பத்தி திதிநாசத்தையுடைய தேகமில்லாதவன,—அளப்பிலனுதலாலே - காலதேச வஸ்துககளினாற் பரிச்சேதிக்கப்படுகிறவனல்லனுகையால்,— எந்தைதா னின்னனென்று மின்னதா மின்னதாகி வந்திடானென்றுஞ் சொல்ல வழக்கொடு மாற்றமின்றே - எம்முடைய ஸ்வாமிதானதிகார கர்த்தாக்களுக்கு வினனுறென்று மின்னதாவரென்று மின்னதாகாரொன்றுஞ் சொல்லுதற்குச் சங்கையு முத்தரமுமில்லை.

இதனாற் சத்தமே பிரமமென்பவனையு மதிகாரகர்த்தாக்களு ளொருமூர்த்தி யெனபவனையு மறுத்தது.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

---0---

சாங்கரியமுண்டென் றுரைக்க வில்லையென்றும், பிரகாராந்தரத்தினு லுண்டென்று முரைக்கின்றூர்.

பாதமும் விதமாய பதபதார்த்தங்களல்லான் - மோகமும் போதகமுமாயிருக்கும் மாயா மகாமாயா காரியமாகிய சொற்பொருளாகும் பொருள்களல்லான,— அந்தமு மாதியில்லான் - நித்தியன,— அளப்பிலன - வியாபகன,— ஆதலாலே எந்தைதான - எமது சுவாமிதான,— இன்னனென்றும் - இக்குறியுடையனென்றும,— இன்னதாம - இப்படியாவதென்று சுட்டியறியப்படும பொருளாமென்றும,— இன்னதாகிவந்திடான -வியாபகத்தால் எல்லாந் தானதுவா யிருத்தலால் இப்பொருளாய் வாரான,— என்றுஞ் சொல்லவழக்கொடுமாற்றமின்றே - சங்கை யுத்தரங்களில்லை அனுமா னுகமங்களில்லை யென்றுமாம.

## சிவஞானயோகியருரை வருமாறு.

———o———

அநாதிமுத்த சித்துருவாகிய எந்தை, கட்டு வீடென்னும் பதங்களையுடைய பசுபாச பதார்த்தங்களது இயல்புடையனல்லனாகலானு', எழுவாயிறுவாய் இலனாகலானும, அவையிலனாகவே அளவைகட் கெட்டாமையானும்,அருவம் உருவம் அருவுருவமென்னும் முக்கூற்றுள் இன்னனுவனென்று தான் அம்முக்கூறும்படும் விருத்தி பரிணமம் விவாதத்தமெனபவற்றுள் ஒன்றிற் படுவன படானென்று தான கூறுதற் கோராசங்கையுமில்லை, ஆசங்கையின்மையின அதற்கு மறுமொழியாகிய பரிகாரமுமில்லையெனபதாம்

அருவமெல்லாம் உருவமாய்த் தோன்றுதலும் உருவமெல்லாம் அருவமாயழிதலு மொருதலை. அதுபற்றி அவை அளவைகட்கு வரம்பு படுவனவுமாம்.

அநாதிமுத்த சித்துருவாகிய எந்தைக்குத் தோற்றக் கேடுகளின்மையானும, அவை யின்மையின் அளவைகட்கு வரம்புப

டாமையானும், அவன் மூக்கூற்று ளொருகூற்றினும் வைத்து மொழியப்பட்டா னென்பார், அந்தமுமாதியில்லா னளப்பிலருதலாலே, யெந்தைதானின்னனென்று சொல்ல வழக்கொடு மாற்றமின்றே. என்றும்; கட்டு வீடுகளிலருகலின் எவ்வாறுமாமென்பார், பந்தமும்விடுமாய பதபதார்த்தங்களல்லான் இன்னதா மின்னதாகி வந்திடானென்றுஞ் சொல்லவழக்கொடு மாற்றமின்றேயென்றும் கூறினார். எதிர் நிரனிறை "எந்தையாரவரெவ்வகை யார்கொலோ" என்றருளிச்செய்த பாசுரமுமிது

பதபதார்த்தமென்றது குழைக்காதுபோல் இரண்டாம் வேற்றுமைத்தொகை பதம் அவயவச்சொல்லி.

ஆதியுமென்னு மும்மை விகாரந்தகாமைக்கது அற்றேல், உருவமுடையாரெல்லாம் விகாரப்படுதலும் ஏகதேசமாதலுந் தடக்குறுதலு முடையராதல் காணப்பட்டமையின், முதல்வனுக்கு உருவமுண்டாயின அவையு முளவெனப்படு வழுவாமாலெனின், அவ்வாசங்கை நீக்குதற்கெழுந்தது வருஞ்செய்யுளென்பது.

## நிரம்பவழகியருரை வருமாறு.



இப்படிச் சொல்லப்பட்ட உம்முடைய கர்த்தாவினுண்மை எப்படியென்ன, அவனுண்மையை ஆன்மபோதத்தால் அறிந்து சொல்லப்படாதென்றருளிச்செய்கிறார்.

பந்தமும்விடுமாய பதபதார்த்தங்களல்லான்-ஆன்மாக்கள் செய்த கன்மத்துக்கீடாக அவர்களைத் தொந்திக்கப்பட்ட பந்தங்களுமாய், அது புசித்துத் தொலைந்தால் விட்டு நீங்குவதாயிருக்கத்தக்க லோகங்களுமாய், அந்த லோகங்களிலுள்ள பொரு

ள்களுமல்லாத தத்துவாதிகளுமாய்,—அந்தமு மாதியில்லான்- மற்றுள்ள வடிவுகளைப்போலத் தனக்கொரு முதலு முடிவுமில்லா தவன் ஆகையிலே,—அளப்பிலன் - ஒருவராலு மின்னபடியெ ன் றளந்தறியப்படாதவன்,—ஆகலாலே எந்தைதானின்னனெ ன்று மின்னதாமின்னதாகி வந்திடானென்றுஞ்சொல்ல வழக் கொடுமாற்றமின்றே - அப்படியிருக்கையிலே எம்முடைய சுவாமிதான இன்னனென்று மின்னதென்றும் இன்னதா மென்று மின்னதாகாதென்று இன்னதாகி வருவனென்றும் இன்னதாகி வாரானென்றும் சொல்லுகைக்கு அதற்குண்மை யாதொரு வழக்குமில்லை அதற்கோ ருத்தரமு மில்லை.

எந்தைதா னின்னனென்று மின்னதாமின்னதாகி வந்தி டானென்றுஞ்சொல்ல வழக்கொடு மாற்றமின்றே என்றதற் குப் பிரமாணம் தேவாரம்,“மைப்படிந்த கண்ணாளுந் தானுங் கச்சியேகம்பத்தான் வார்சடையான்மாசொன்றில்லா,தொப்புடை யனல்லனொருவனல்ல னோரூரனல்ல னோருவமனில்லி, யப் படியனவ்வுருவனவ்வண்ணத்தனவனருளேகண்ணாகக் காணினல் லால், லிப்படியனிவ்வுருவனிவ்வண்ணத்த னிவனிறைவனென்றெ ழுதிக் காட்டொணாதே.” என்றுஞ், சிவபுராணம். “இன்பமுந் துன்பமு மில்லானேயுள்ளானே-அன்பருக்கன்பனே யாவையு மா யல்லையு மாஞ்-சோதியனே துன்னிருளே தோன்றாப் பெருமை யனே-யாதியனேயந்த நடுவாகியல்லானே” என்றும், திருச்சு ண்ணம். “வேதமும்வேள்வியுமாயினார்க்கு மெய்ம்மையும்பொய் ம்மையுமாயினார்க்குச், சோதியுமாயிருளாயினார்க்குத் துன்பமுமா யின்பமாயினார்க்குப், பாதியுமாய்முற்றுமாயினார்க்குப் பந்தமுமா ய்வீடுமாயினார்க்கு, ஆதியுமந்தமுமாயினார்க்கு ஆடப்பொற்சுண் ணமிடித்துநாமே” என்னுமதுங் கண்டுகொள்க.

இதனாற் சொல்லியது கர்த்தா சடசித்துக்க ளிரண்டினும் நிறைந்து அவை தானேயாய் நிற்கச்செய்தேயும அவையொன றுடனுந் தோய்வற நிறபன ஆகையால், அவனுண்மையை அவ னறிவிக்க வறியும தொழிநது அனமபோதத்தால் இனனபடியெ னறுஞ சொல்லப்படானென னுமுறைமையை யறிவித்தது.

'சொனன' 'அழிபபு' 'அருவமோ' 'கண்ணிடும்' 'வித்தக' 'மாறைபதான' 'சத்திய' 'உலகினில' 'பந்தமுற' ஆகத் திருவிரு த்தம ஒனபதும் புததன.

அவன காததா விலலையென்றாம, பிரபஞ்சம் ஒருவர் படை க்கவேணடுவ திலலை அநாதியேயென்றும சொனன விதர்குப் பிரமாணம் பரபடசம, அவனமதம "பெறுவதிங் கெனபடை த்துப் பெற்றதுவிலையாடடெனிற, சிறுமழைவிறையதாகுரு செய்திடுங்கனமதசென னி, னுறுபெருங்கணமஞசெய்வோா மு ன்புளராவருனனை, யறிவுறுஞாலமெல்லா மநாதியென றறிந் திடாயே" எனனுமதுங கணடுகொளக.

சித - பர - சௌ - மத, உ௬

---

## சுப்பிரமண்யதேசிகருரை வருமாறு.

—o—

எக்கைதான் - அநாதிமுத்த சித்துருவாகிய வெக்கை,— பந்தமும் வீடுமாய பதபதார்த்தங்களல்லான - கட்டுவீடெ னனும் பகுதிகளையுடைய பசுபாச பதார்த்தங்களது இயல்பு டைய னல்லனதலானும்,—அந்தமுமாதி யில்லான-இறுவாயெ முவாயிலனாகலானும்,— அளப்பிலனதலாலே - அளவையிலனாக லானும்,— இன்னனென்றும் - அருவமுருவ மருவுருவமென்னு மூக்கூற்றுள் இனனனெனறுதான்,—இன்னதா மின்னதா

சிவந்திடானென்று சொல்ல-அம்முக்கூற்றுப்படும் விருத்தி பரிணாமம்விவர்த்தன மென்பவற்றுள் ஒன்றிற்படுவன படானென்றுதான கூறுவதற்கு,—வழக்கொடுமாற்ற மின்றே - ஓராசங்கையு மில்லை, யாசங்கை யின்மையி னதற்கு மறுமொழியாகிய பரிகாரமு மில்லையெனபதாம்

---

## மறைஞானதேசிகர் உரை.



மேன முடிந்தமுடித்தலெனுஞ் சுருதி
யுத்தியா லுணர்த்துகிறார்

குறித்ததொன் றாகமாட்டாக் குறைவில துதலா
னு, நெறிப்பட நிறைந்தஞானத் தொழிலுடை நிலை
மையானும், வெறுப்பொடு விருப்புத்தன்பான் மேவு
த லிலாமையாலு, நிறுத்திடு நினைந்தமேனி நின்மல
னருளினாலே. (௬௫)

| | |
|---|---|
| (இ-ள்) குறித்ததொன் றாகமாட்டாக் குறைவில துதலானும் | ஆன்ம போதத்தாற் குறிக்கப்பட்டன வெல்லாமாய் நிற்கின்ற நிறைவினையுடைத்தலானும், |
| நெறிப்பட நிறைந்த ஞானத் தொழிலுடை நிலைமையானும் | தன்னிடத் தொருக்காலும் பிரிவற்றிருக்கிற ஞானக்கிரியைகளை யுடையனாய் நிற்றலானும், |
| வெறுப்பொடு விருப்புத்தன்பான் மேவுத லிலாமையானும் | ஆன்மாக்களைப்போ லிராகத் துவேஷாதிக டன்னிடத் தில்லாதவனாகையாலும், |

இயற்றுதற் கர்த்தாக்களாயிருந் தூடதேசகர்த்தாக்களுஞ் சிரு டடிமுதலிய கிருத்தியகர்த்தாக்களுமா யிருக்கின்ற அனுசதா சிவர் அநந்ததேசுரா ஸ்ரீகண்டருத்திரயம பிரம விஷ்ணு புத்தர் அருகர் கபிலா கணாதா முதலிய கர்த்தாக்கள் சரீரங்களெல்லா ஞானாதனும் பாரம்பரியமாயுப் மதிட்டித்தாத் தனது சரீரமாகப் பண்ணிக்கொண்டு அவர்கள் ப ண்ணுவிக்கிருத்தியங் தனது கிருத்தி யமாய் முடித்தலால அந்த நமது சரீரமென்று,—குறித்த-சங்கற் பித்த சரீரங்களுக்குள் ளொரு சரீரமுமல்ல வென்னுங் கு றைவின்றி நிறைவாகி நிற்பவ ராதலாலும்,—நெறிப்பட நின்ற ஞானத் தொழிலுடை நிலைமை யாலும் - எல்லாமாக்கத்தகுஞ் செல்லப் பூரணமாகிய சிற்சித்திபாசசெய்தி சபசத்தியுடைய தன்மைய ராதலாலும்,—வெறுப்பொடு விருப்புத் தனபால்மே வுத லிலாமையாலும் - இராகத் துவேஷ விஷயங் தனக்கிடத் தில்லாமையாலும்,—அருளினால - தனது சத்தி சங்கற்பத்தா ல்,—நினைத்தமேனி - சங்கற்பித்த காரியத்திற்கேற்ற அனு ச தாசிவர் முதலோர திருமேனியை,—நிறுத்திடும - தனது திரு மேனி போலத் தரிக்கும்.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

—o—

விகாரப்படுதற்குக் காரணம் பரதந்திரம், ஏகதேசமாதற்கு க் காரணஞ் சிற்றுணர்வு சிறுசெயல்களும், குட்சகுறு தற்கு காரணம் விருப்புவெறுப்புகளுமேயாகலின், அநாதிமுத்த சி த்தருவாகிய முதல்வன்மாட்டு அவ்வுபாதிகளின்மையின் ; அக் குற்றங்களுக்குச் சேயனுகிய அவன், ஆணவமகன்ற வறிவொடு தொழிலையார்த்து நிற்றலின், தானினைக்கதோரு திருமேனி யைத் தனதாகக்கொண்டருளுவனென்பதாம்.

குறித்ததொன் ருகமாட்டாக் குறைவே பரதந்திரமாவ தெனவறிக.

அற்றேல், அக்குற்றங்களிலனாகிய முதல்வன் உருவமின்றி நின்றே எத்தொழிலுஞ் செயய வல்லுமாகலான, உருவங்கோடலாற் போந்த பயனென்னையெனின, அஃதுணர்த்துதற் கன்றே வருஞ்செய்யு ளெழுந்ததெனபது.

---

## நிரம்பவழகியருளை வருமாறு.



உமமுடைய கர்த்தாவி னுண்மையை அவனறிவிக்க வறியுமதொழிந்து ஒருவராலு மறியபபடாதென்ன, சகளீகரித்துப் பிரபஞ்சத்தை நடத்த வேண்டுகையினால் அவனையு மொருவர் படைக்கவேண்டுமென்ற பஞ்சராத்திரியை நோக்கி, அவனொருவாபடைப்பி லகப்படானென்று அருளிச்செய்கிறார்

குறித்ததொன்ருகமாட்டாக குறைவிலனாகலானும- ஆனமபோதத்தால் அறவித்து வென்று சுட்டி யறிப்பப்படாத குறைவற்று நிறைந்த ஞானமே தனக்குத் திருமேனியாக வுடையவனாகையாலும,—நெறிப்படநிறைந்த ஞானத் தொழிலுடைநிலைமையானும் - போந்தசெய்யாமல் எபபொழுதும் ஒருதன்மையாயிருக்கிற சருவஞ்ஞத்தையும சருவகிருத்தியத்தையும ஒருமை தனக்குள்ளவனாகையாலும்,—வெறுப்பொடுவிருப்புத் தனபால் மேவுதலிலாமையானும-பிரியாப்பிரியஙகள் தனனிடத்துப் பொருந்தப்படாதவனாகையாலும்,—நிறுத்திடுநினைந்தமேனி நினமனைருளினாலே - இங்ஙனஞ் சொல்லிபபோநத முறைமைகளையுடையவனாகலா லவனுக்கொருவ னொருவடிவு கொடுக்க வேண்டுவதில்லை; தனக்கு வேண்டின வடிவு தானே யெடுத்துக் கொள்ளுவன் மலரகிதனாகையால்.

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

—0—

மறைகளெல்லாம் - வேதங்களெல்லாம்,— ஒன்றென்வு ரைத்திட - ஆன்மா வொருவனென் றுரைத்திடவும்,— உயிர்க ளொன்றி நின்றனென்று-உயிர்களோடு கலந் தூடுருவி நிற்ப னென்று,—பன்மை நிகழ்த்துவ செய்யுளெல்லாம் - பன்மை கூறுவதுயாதெனின்?— அவை பதிதானொன்றென்பதையும் - வேதத்துள்ளான்மா வேகனேயென்பதும் பரமான்மா வொ ருவனேயென்பது தாற்பரியமாகலின்,—அன்று - அதுபற்றி மு ரணுதலின்மையான,மேற்செய்யுளின் வேறுபடாதாம்,— அககரமகடோருருசென்றிடும் அகரம்போல - ஒன்றேயான ம பலவெழுத்துகளில விரவிநிற்றல் காணப்படுவது போல,— சிவனொருவனே சேர்ந்து நின்றனன் -ஒருவனேயிய பரமான்மா பலவுயிர் களின் விரவிநிற்றல் யாங்கனமென்று மாசங்கைக்கிடமின் மையான உள்ளுமாமெனறதூஉ மமைவுடையனவெனப்படும்

## மறைஞானதேசிகர்.



அந்தப் பிரமம், ஆன்மாக்க ளனைத்துஞ் சாருஞ்<br>
சகலந்து நின்றதேயாயினு மந்தவான்ம ||<br>
விறகும வேருய்நிற்கு முறைமையு<br>
ணர்த்துசிறார்.

உருவொடு கருவியெல்லா முயிர்கொடு நின்று வேறாய, வருவது போலவீச னுயிர்களின் மருவிவாழு வன், தருமுயி ரவனேயாகா வுயிரவை தானுமாகான், வ ருபவ னிவைதானும் வேறுமாய் மன்னிநின்றே.(௨)

(இ-ள்) உருவொடு கருவியெலலா முயிரொடு நின்றுவேறாய வருவது போல — தத்துவங்களுடனே பொருந்திநிற்கிற வான்மாவானவ னிவையிற்றைக கூடிக காரியப்படுத்தி நிற்கையிலும், இவையிற்றுக்குத தாரகுதாரமுமாய் வேறுமாய் நின்றாறபோல,

ஈசனுயிர்களினே பருவிலாமுவன — சிவனு மிப்படி யானமாககளைப் பொருந்தியிருப்பான இருந்தானே யாயினும,

கருமுயிரவனேயாகா — சிவனு மந்த வான்மாவுங் கூடினவிடத்து அந்தவானமாக காத்தாவாக மாட்டாது

உயிரவை தானுமாகான — அந்தக்காத்தா வுயிர்களுடனே கூடி யிருந்தானேயாயினும், அந்த வுயிர்களுமாகான.

வருபவனிவை தானுயும வேறுமாய மன்னி நின்றே — சிவ னிப்படி யானமாக்களுக்கு வேறாயிருந்தானேயாயினும் வியாத்தியிலேலே யனனியமாய் நிலைபெறறுநிறபன. எ - று.

ஐராரம அசைநிலை
இக்கூறகு வாதுசோதகரம். (கூ)

---

## சிவாகரயோகியருரை வருமாறு.

———o———

சீவசிவர்களுடைய அதவைததிற்கு உதாரணம்

வருபவ னீசன - ஏககாலதது மெவவிடததும் ஆன்மாக்களைப் பிறிவறககூடி வருபவனுன ஈஸ்வரன,—வேறுமாய் மன்னிநின்றே - ஆனமாககளுடைய காத்ருத்வ போக்த்ருதவாதிகளுககு அந்யமாக ஆனமாக்களிலே நிலைபெற்று நின்றே, கண

ம்ராநுகுணமான சுகதுக்கபோகங்களைப் புசிப்பிப்பன,—உயிர்க ளின மருவி யிவைதானுயும வாழ்வன-முத்தான்மாக்களை வே றறக்கலந்து ஜீவஸ்வரூபந் தோன்ருமற் ரூனேயாக வாழ்வன. ஜீவான்மாக்களதான மலரீங்கிச் சிவனுவாசவென்னை ஆநாதோ வெனனில்?—கருமுயி ரவனேயாகா - சிவனுற் பிரகாசிப்பிக்க பபட்ட வறிவையுடைய வானமா சிவனே வியாபியாது அதே னபோல வெனனில்?—உருவொடு கருவியெல்லா முயிர்கொடு நின்று வேருய வருவ துயிரவைதானு மாகாபோல - தேதேறந் திரியாந்த்க் கரணங்களை ஆனமா தானுக வபிமானம பண்ணி க்கொண்டு நின்று, அதற்கு அந்யமாய வருவது அவவாறு கூடி நின்ற காலத்துமே தேேறந்திரியாதிக ளானமா வாகாததுபோ ல இவைதாருயும வேறுமாய் என்ற இரணடுமையும சிவ னை சீவான்மாக்களு மல்ல அவையிறறுக்களுக்கு அநயமுமல்ல தாநாநமிட்டமே' என்றது. இருவர் கூடிவாழ்த லினபுறுபுண ராசசி யென்றிதனபொருள

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

———o———

சிவனுக்குமானமாவுக்கு மிப்போது சொல்லிய சம்பந்தத் திருலே யொரு பிரகார மதத்துவைத மறிவிக்கப்பட்ட தானுலு ம,வஸதுவிருலே பேதப்படுமெனப துரைக்கின்ருர்.

உயிர - ஆனமா,— உருவொடு கருவியெல்லாங்கொடு நின் று - தூலதேக சூக்கும தேக பரதேக மிவைகளைக்கொண்டு நி ன்று, தனது சங்கறப ரூபை சனனிதி மாத்திரத்தாற் செலுத் தித தொழில்களைப் பண்ணுவித்து நின்று,— வேருய்வருவது போல - உயிர்வேறு சரீரம வெறென்று நின்ருற்போல,—ஈச னுயிர்களின மருவிவாழ்வன - ஆனமாக்களிடத்துச சம்பந்தித்

து தனது சங்கற்ப ரூப சந்நிதிமாத்திரத்தினாலே செலுத்தி நிற்பன. அமூர்த்தமாய், வியாபகமா யிருக்கின்ற ஆன்மாக்களைச் செலுத்தும் வகை யெப்படி யெனின்? சரீரத்தின் அவயவங்களை யங்கங்குப் பிரேரித்த தானமாக்களிடத்தி லறிவு தொழில்களை யுந்தச் சரீரத்தி லவயவங்களைக்கொண்டு விளக்கிக் காரியம் நிகழ்ப்பண்ணுவதே செலுத்துவதென்றபடி. ஆதலால்,—ஒருமுயிராவனேயாகா வுயிரவை தானுமாகான - செலுத்தப்படும் பொருளாகிய ஆன்மாக்களும், செலுத்தும் பொருளாகிய சிவனும் ஒருபொருளாகா,— வருமவனிவைதானுயும் வேறுமாய் மன்னிநின்றே - அந்தச்சிவன் முன்சொல்லிய வியாப்பியவியாபக சம்பந்தத்தினாலே இந்த ஆன்மாக்களாயும், வஸ்துவினாலே வேறுபட்டுத் தனித்தொருபொருளாயும் இருப்பன,—முத்தான்மாக்கள் நிரஞ்சனாகளாதலால், சிவன்போலச் சிவப்பிரேரியாகளன்று.

"வ்யோமாவிர்த கீர்யாஸ்ய
ஸ்வதயேவாபிமோக்ஷஞ்ருத"

என்று மோக்ஷபரியந்தம் சிவனுக்கு வசியனென்னும் பெயர் மிருகேந்திர வசனத்தினாலே காண்க.

## சிவஞானயோகியருரை வருமாறு.

முதல்வன் அங்ஙனம் வேறாகியும், உலகெலாமாகி நிற்றல் அனைவுடைத் தென்பது உடம்பின் கண்ணதாகிய உயிரியல்பினை வைத்துக் கண்டுகொள்க வென்பதாம்.

ற சாரியை

அவை பகுதிப்பொருள் விகுதி.

நின்று வருபவ னெனவிளையும்.

இவையிரண்டு செய்யுளானும் பேதவாதம் பேதாபேதவாதம் அபேதவாதமாகிய மூன்று மதங்களையும் பரிகரித்து, 'உலகெலாமாகி வேறா யுடனுமாய்' என்ற முதற்கூற்றுப் பொருள் வலியுறுத்தப்பட்டது.

இன்னும் இதனைச்சுட்டுங் கடாவிடைகளெல்லாம் முன்னர் விரித்துக் கூறப்படு மென்பதுபற்றி ஈண்டு விரித்தில.

இனி ஒளியாயோங்குற்ற கடப்படுங் கடாவிடைகளே மேலைச் சூத்திரத்து ளிவைபற்றிக் கூறியபோந்தமையின் ஈண்டுத் தெரித்தில.

அஃதங்ஙனமாக, முதனூற்பொருளை முதனூலிற் கிடந்தவாறன்றித் தொகுத்தன் முதலிய நால்வகையாப்பினு ளொன்றுபற்றிச் செய்தலன்றே வழிநூலாவது, அவ்வாறன்றி, 'அன்றவை பதிதாமெனன்றெனன் றுறையும்' எனவும், 'உருவொடு கருவியெல்லாம்' எனவும், பிறவுமாகிய சிலவற்றை முதனூலிற் கிடந்தவாறே கூறுதல் வழிநூற்கு மரபன்று போலுமெனின்?—"முன்னோர் மொழிபொருளே யன்றி யவர்மொழியும், பொன்னேபோற் போற்றுவ மென்பதற்கு—முன்னோரின், வேறுநூல் செய்துமெனு மேற்கோளில் லென்பதற்குங், கூறுபழஞ் சூத்திரத்தின் கோள்" என்பவாகலின், அப்பயன்பற்றி ஒரோவழி யங்ஙனங் கூறுதலும் வழிநூற்கு மரபாமென விடுக்க.

இதனானே கூறியது கூறலென்னும் வழுவின்மையுங் கண்டுகொள்க.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

———o———

இந்தப் பரப்பிரமத்தைப்போல் நீர் சொல்லுகிற வான்மாவைக் காணப்பட்டதில்லையே யென்ன, மேலருளிச்செய்கிறார்.

உருவொடு கருவியெல்லா முயிரொடு நின்று வேறாய் வருவது போல — ஆன்மாவானது இந்திரியங்கள் கரணங்கள் முதலான கருவிகளெல்லாங் கூடினதொரு சரீரத்தைப் பெடுத்துக்கொண்டு நிற்கச்செய்யவே, இந்தச் சரீரத்துக்குள்ளேயோரச் சொல்லியழைக்க, இவையிற்றோடுள்ள வயிக்கபாவத்தினாலே யிவையிற்றை யுள்ளடக்கி யிவையிற்றுக்கு வேறாயிருக்கிறதானவந்த முறைமையொன்றுபோல,—ஈசனுயிர்களின் மருவியாழ்வன-சிவஞானமாவிதோடுள்ள வயிக்யபாவத்தினாலே ஆன்மாவை யுள்ளடக்கித் தான்பிரகாசித்து நிற்பன். ஆன்மாத் தானே அந்நிய கர்த்தாவாய் நிற்பனெனனில்?—கருமுயி ரவனேயாக்க - உண்டாக்கப்பட்ட வான்மாவும் சிவனோடே கூடியிருந்தாலொழியச் சிவனுக மாட்டான். அந்தக் கர்த்தாத்தானே ஆன்மாவாய் நிற்பனெனனில்?—உயிரவை தானுமாகி—அந்தக் கர்த்தாவும் இப்படி ஆன்மாக்களுடனே கூடியிருந்தாலும் இந்த ஆன்மாக்களாகிறதில்லன் ஆனாலிரண்டுஞ் சமமெனனில்?—வருபவ னிவைதானுமாய் வேறுமாய் மன்னிநின்றே-சிவஞானமான்மாக்களுமா யவையிற்றுக்கு வேறுமாய் வரத்தக்க சத்தியை யுடையனாய் நிற்பன். அதெனபோல, ஆன்மாச் சரீரமுமா யதற்குவேறுமாய்நின்ற தன்மைபோல.

இதற்குப் பிரமாணஞ் சிவஞானபோதம் "கட்டு முறுப்புங் கரணமுங் கொண்டுள்ள, மிட்டதொரு பேரழைக்க வென்னொன்றுங்—கொட்டி, யவனுளமா கில்லா னுளமவனா மாட்டா, தவனுளமா யல்லனுமா மங்கு" "என்றும், "அரக்கொடு சேர்த்தி யணைத்தவக் கறபோ, லுருக்கியுடங்கியைந்து நின்று—பிரிப்பின்றித, தானே யுலகாந் தமியேனுளம்புகுதல், யானே யுலகென்ப னின்று" என்னுமதுங் கண்டுகொள்க.

சிவஞானபோதம் - உ - சூ, க - ௮ - வெ.

இதனாற் சொல்லியது ஆன்மாச் சரீரத்தை யுள்ளடக்கித் தானே பிரகாசித்து நின்றாற்போலப் பரமேஸ்வரனும் ஆன்மாக்களை யுள்ளடக்கித் தானே பிரகாசித்து நிற்பனென்றும், பரமேஸ்வரன் ஒனமாவுமா யல்லவுமாய் நிற்பனென்று முறைமையு மறிவித்தது.

---

## சுப்ரமணயநேசிசருரை வருமாறு·

———o———

உயி ருருவொடு கருவியெல்லாங் கொடுநின்று-உயிர்நரம்பு முதலியவற்றாற் பிணிக்கப்பட்ட தனுவோ டைம்பொறி முதலிய கருவிகளையுங் கைகொண்டு டடனாயநின்று,— வேறாய்வருவதுபோல்-அவ்வாறுடனாய வழியு முயிருயிரே யுடம்புடம்பே யுயுருடம்பா மொழியா துடம் புயிராகமாட்டாததுபோல,—ஈசனுயிர்களின் மருவிவாழ்வன-முதல்வ னுயிர்களோ டபேதமாய்க்கலந்து நிற்பன்,— தானுமுயிரவையாகான தருமுயிரவனாகா-அவ்வாறுகலந்து நின்றவழியு முதல்வன முதல்வனே! உயிருயிரே! முதல்வனுயிரா யொழியான, தரப்பட்ட உயிர முதல்வனாகமாட்டாது அவ்வாறாயினும்,—இவைகாணுயும வேறுமாயும மனனின்னறே வருபவன-உயிரவவுடம்பின வேறாகியும அதுவாகிநிற்றல் காணப்படுதல் போல, முதல்வன அயனனம வேறுயு முலகெலாமாகி நிற்ற லமைவுடைத்தெனக.

இவையிரண்டு செய்யுளானும பேதவாதம பேதா பேதவாதமஅபேதவாதவமாகிய மூககூறறுமதஙகளையும பரிகரித்து, 'உலகெலாமாகி வேறு யுடனுமாய்' நின்றமுதற் கூற்றுப் பொருள் வலியுறுதகப்பட்டது.

☞ உ-சூ, க-அ, முடிந்தது.

## மறைஞானதேசிகர் உரை.



இப்படி யானமாக்களிடத்திரண்டற்று நிற்கு
ங் கர்த்தா, விருவினைப் பலன்களைக் கொ
டுக்கு முறைமை யுணர்த்துகிறார்

இருவினை யினபதுன்பத் திவ்வுயிர் பிறந்திறந்து,
வருவது போவதாகு மன்னிய வினைப்பயன்க, டரும
ரன் றரணியோடு தராபதி போலத்தாமே, மருவிடா
வடிவுங்கஞ்ம பலன்களு மறுமைக்கணே. (ச)

(இ - ள) இருவினை யினப துன்பத் திவ்வுயிர் பிறந்திறந்து வருவது போவதாகும் — இவ்வான்மா புண்ணிய பாவங்களுக்கிடாகப் பிறந்துவருவதும் இறந்துபோவதுமாகும், கன்மரூ சடமாதலால் றுளுக்குச் சரீரத்தினை யெடுக்கவற்றோ வெனில்?

மன்னிய வினைப்பலன்க டருமரன — ஆன்மாக்கண் முற்சனனத்தி லார்ச்சித்த கன்மபலத்துக் கிடாக நிலைபெற்ற விருவினைப் பயன்களை பேருமற் குறையாமற் கர்த்தா வறிந்து கொடுப்பன. அஃதெனபோலவெனனில்?

தரணியோடு தராபதி போல — விசுவத்தி லானமாக்களுக் கதிபனுயிருக்கிற விராசாவானவர்கள் செயல்களுக்கிடாக நிக்கிரக மநுக்கிரகஞ் செய்யு முறைமை போல;

தாமே மருவிடா வடிவுங்கன — இப்படியொழிக் தான்மாக்களுக்கு வருகிற சகத்துக் கேதுவாகிய சரீரமு மது

மபலன்களு மறு | ற்கேதுவாகிய கனமபலங்களுந தாமேவந
மைககணணே. | து பொருநதமாட்டாது,ஆதலா லொருகாத
தாக கூட்டிக காரியபபடுததுவன. எ - று.

ஓடு இடைச்சொல்.

'இருவினை' முதல் 'பேறிழ' ஈருக நாலு மொருதொடர்.
இநாகுப பாாகசிவையெனனு மாகமம (ஈ)

## சிவாகரயோகியருளா வருமாறு.

—o—

மேல மாறிப்பிறநது வருமா றுணாததுதல்.

இவவுயி ரிருவினை யினபதுனபதது பிறநதுவருவது மிற நதுபோவது மாகும-புணணிய பாபததின பலமாகிய சுகததை யும துககததையும புசிப்பதாக பூமியிலே வநது பிறப்பதும ஸ வாசகததிலே புணணியபலமே புசிபபதாகவும நரகததிலேபா பபலமே புசிபபதாகவும் இறநது போவதுமாம,—மனனிய வி னைபபயனக டருாரன - இவவாறு பொருநதிய புணணியபா ப பலஙகளை ஒறாமே கொடுபபன. எவவாறெனனில்,— தரணி போடு தராபதிப போல-பூமியானது விகாரமனறி நினறு அவ ரவர பணணின காஷுஅதிகளுககு ஏறறபலததைககொடுககிறு பபோல காமபலஙகளை யுணடாககிய பூபதியானவனஅவ்வவ ர பணணின கிருஷியாதி பலனகளை யவவவர்ககேயாகச செலு ததுமாபோல அவவவாபணணின காமபலததை அவவவரை யே புசிககபபணணுவன. காமமே பலததைககொடுககுமல்லது காமாநுகுணமாக மாயையே பலததைக கொடுககும, இதற் கொரு கர்ததா வேணெனனில்?—தானே மருவிட்டாவடிவுங் கனம பலஙகளு மறுமைக் கண்ணே - மாயை ஜடமாகை யால் தானே யுருவாகவறியாது, கனமயானது செய்தவுட

னே நாசமாகையால் அநதககனமததிலே ஒரு அதிருஷ்டத்தீ கைஜநிப்பித்து அதை ‡அதுவ நிஷடயம்பண்ணி மறுமைகககண ணே பலஙகொடுபப தாகையால கருமந தானே பலஙகொடுகக மாட்டாது, ஆகையால் ஈஸ்வரனே கருமபலத்தைக கொடுகக வேணடுமெனறு இதனபொருள.

‡ அதுவநிஷடா - வழியிலிருப்பது.

இவவுயிரெனபது சகலரெனவறிக.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

---

மேல்வினையால் மாறிபபிறநது வருமாறு உணாததுகின ுரா

தரணியோடு தராபதிபோல - பூமியோடு கூடிய விரா சா கிருஷிபாதிபலஙகளை யவரவா செயதியறிநது கொடுப்ப துபோல,— அரன - மாயையோடு கூடியசிவன,—மனனியவி னை பயனகள கருமம - அவனவனுக்குப பொருநதிய சுகதுகக மோகங்களைக கொடுபபன.

தரணியாகிய முககாரணமினறித தராபதி பலன கொடு ககமாட்டான தராபதியனறித தரணிபறிவினமையாற் பல ன கொடுககமாட்டாது கிருஷிதொழிலுமபபடியே அப்படி ச சிவனும மாயையும கனமமும மூனறுமபிரிதது பலனகொடாது.

இருவினை யினபதுனபத தெனறவிடதது இருவினைகளா லென விரிகக.

இன்பதுனபத்து - சுகதுகக காரண யோனிகளில் வருவ து போவது சுவாகக நரகஙகளில்.

மற்றதுவெளிப்பொருள்.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.



இனி நாற்பத்தேழு செய்யுளான் 'அலகிலா வுயிர்கள் கன்மத்தானையி னமர்ந்து செல்ல' என்ற இரண்டாஞ்சூத்திரத்தை அவ்வவர் மதம்பற்றி யாசங்கித்துப் பரிகரித்து வலியுறுத்துகின்றார்

மேற் கூறிப்போந்தவுயிர், முற்பிறவியிற் செய்யப்பட்டுக் கிடந்த இருவினைகட்காகப் பிற்பிறவியில் வரும் இன்பத்துன்பம் நுகராநிற்பான், மேலும் வினையேறுதலின், அந்நுண் மீளமீளப் பிறந்திறத்தலும் துறக்கநிரயங்களிற் சென்று மீட்லுமுடைத்தாகலான், உடம்போடு நிலைபெறு மவ்வினைப்பயன்களை, மருத்துவனும் வேந்தனும்போல, முதல்வனே யவ்வுயிர்க்கு நுகர்த்தானையாற் கூட்டுவன், இவ்வாறன்றிச் சடமாகிய அவைதாமே மறுமைக்கண் வந்து கூடமாட்டாவென்பதாம்.

தரணமென்னும் வடமொழி கட்டளையென்னும் பொருட்டாகலான், நோயைக் கட்டுப்படுத்தலின் மருத்துவனுக்குத் தரணியெனக் காரணக்குறியாயிற்றென்பது

அறமுதல்வினைகளான் மருத்துவ னுரைத்த நூலி னென்ன முன்னா வருத்துக் கூறுவாராயினாரென்பது

இதனானே முதல்வனவ்வாறு மூவகையுமாய் நிற்றலானாய பயன் இதுவென்பதுணர்த்தியமுகத்தான், இரண்டாஞ்சூத்திரத்தின்கட் பதியியல்பெல்லாந் தொகுத்துக் கூறப்பட்டது.

## நிரம்பவழகியருரை வருமாறு





எல்லாம் பரப்பிரமமேயென்றும் புண்ணிய பாவங்கள் பரப்பிரமத்துக்கு வேண்டுவதில்லையென்று மவனை மறுத்தருளிச் செய்கின்றார்

இருவினை யின்ப துன்பத் திவ்வுயிர் பிறந்திறந்துவருவ
து போவதாகும் - முற்சனனத்திற் செய்த புண்ணியபாவங்
களுக்கிடான சுகதுக்கங்களை யநுபவிக்கைக்கு இந்தவான்
மாக்கள் சனனமரணப்பட்டுச் சொர்க்கநரகங்களிலே போவ
தும் பூலோகத்திலே வருவது முடைத்தாயிருக்கும். இந்தச் சு
கதுக்கங்க ளிவர்களுக்கு வந்துகூடுகிறபடி யெப்படியெனில்?—
மன்னிய வினைப்பலன்கட்டுமரன்-ஆன்மாக்களுக்கநாதியிலே
பெற்றுள்ள புண்ணிய பாவங்களின் முறைமைக்கிடான சுகது
க்கங்களைப் பரமேஸ்வரன் கொடாநிற்பன் அதென்போல வெ
னில்?—தரணியோடுதராபதிபோல- இராஜாவானவன் விசு
வத்திலுள்ளவர்களவரவர்செய்த புண்ணிய பாவங்கள் தா
னே அதற்குத்தக்க பலன்களைக்கொடுக்கு மொழிந்து கர்த்தா
வேண்டுவ தில்லையென்ற பட்டாசாரியனை மறுத்து மேலருளிச்
செய்கிறார் —தாமேமருவிடாவடிவுங் கன்மபலன்களு மறுமை
க்கண்ணே - இப்படி யொழிந்து வருகிற சந்தத்துக்குண்டா
ன சரீரமும், புண்ணியபாவங்களுக்குண்டான இன்பதுன்பங்க
ளும், இவை யசேதனமானபடியினாலே தானேவந்து பொருந்தமா
ட்டாது, ஆகையால் கன்மங்களையும் ஆன்மாக்களையும் பரமேஸ்
வரனே அறிந்து கூட்டவேணும்

இதற்குப் பிரமாணம் சிவஞானபோதம் "உள்ளதேதோ
ற்ற வுயிரணையுமவ்வுடலி, னுள்ளதா முற்செயவினை யுள்ளடை
வே—வள்ளலவன், செய்பவர்செய்திப் பயன்விளைக்குஞ் செய்
யேபோல், செய்ப செயலணையா சென்று" என்னுமதுங் கண்டு
கொள்க.

சிவஞானபோதம் - உ - சூ, ரு-வெ.

இதனாற் சொல்லியது ஆன்மாக்கள் கன்மத்துக் கிடாகச்
சனன மரணப்பட்டுச் சொர்க்கநரகங்களிலே போவார்களென்

றும், மீளவும் பூமியின்கண்ணே வருவானென்றும், அந்தக் கன்மங்கள் சடமானபடியாலே ஆன்மாக்களைத் தானுகச் சென்று கூடாதென்றும், ஆன்மா தனக்கென்ன வறிவில்லாதது கொண்டு தான்செய்த கன்மங்களை யறிந்து கூட்டமாட்டாது; ஆகையால் அவ்விரண்டையும் பரமேஸ்வரனேயறிந்து கூட்டு வனென்னு முறைமையு மறிவித்தது

'உலகெலாம்' 'ஒன்றென' 'உருவொடு' 'இருவினையின்பம்' ஆகத் திருவிருத்தம் - சு, மாயாவாதி இவ்விடமறுத்து ஆன்மா வுண்டென்றும் புண்ணியபாவங்க ளுண்டென்றும் சொல்லுகின்றது

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

———o———

இவ்வுயிர் - மேற்கூறிப்போந்த வுயிர்,— இருவினை - முப் பிறவியிற் செய்யப்பட்டுக் கிடந்த இருவினைகளினாக, இன்பத் துன்பத்து - இப்பிறவியின் வரும் இன்பதுன்ப நுகர்ச்சியான் மேலும் வினையேறுதலின்,— பிறந்திறந்து - அங்ஙனம் மீளமீள பிறந்திறத்தலும்,— வருவது போவதாகும் - நரகசுவர்க்கங்க ளிற் சென்று மீட்லுமுடைத்தாகலான்,— மண்ணியவினைப்பல ன்கள் - உடம்பொடு நில்பெறு மவ்வினைப் பயன்களை,— தாணுவோடு தராபதிபோல-மருந்துவனும் வேந்தனும் போல,— அரன்றரும் - முதல்வனே யவ்வுயிர்க்குத் தன்தானையாற் கூட்டுவன்,—வடிவுங்கன்மபலங்களும்-இவ்வாறன்றி யுருவுங்கன்ம பயனும் சடமாகலின்,—தாமே மறுமைக்கண்ணே மருவி டா - மறுமைக்கண்ணே வந்து கூடமாட்டா தென்பதாம்.

இதனானே முதல்வ னவ்வாறு மூவகையுமாய் நிற்றலானு யபய னிருவென்ப துணர்த்து முகத்தா னிரண்டாங் கூற்றின கட்படு மியல்பெல்லாந் தொகுத்துக் கூறப்பட்டது.

## மறைஞானதேசிகர் உரை.

மேல் லோகாயத னின்பதுன்ப மென்ப தொ
ருவா தரவேண்டுவதில்லை, அவ்விரண்டுமி
யல்பாக வானமாக்களுக்கு குண்டா
மென்பதனை யுணர்த்துகிறார்

இருவினை யென்னையின்பத் துன்பங்களியல்ப தெ
ன்னி, னொருதன்மை யியல்புகளுள்ள தொருவனுக் கி
ரண்டுசெய்தி, வருவதென் மலருநீயு மருவலினை வா
சமவெம்மை, தருவதென் னீரொன்செய்து தானியல்
பாகுமன்றே. (ரு)

(இ - ள்) இருவினை யென்னை யின்பத் துன்பங்க ளியல்ப தெனனின — ஆன்மாக்களுக்குச் சுகதுக்கமாகிய விருவினையுஞ் சுபாவத்திலே தானே யுண்டாம், ஒருவன் கொடுப்பனென்பானேன், அவ்விரண்டுந் தானே யுண்டாமென்று நீ சொல்லில் ?

ஒருதன்மை யியல்புகளுள்ளது — நீ யஃது இயல்பென்று சொல்லுவையாகி லஃதொருபட் டிருக்கவேணுங்காண

ஒருவனுக் கிரண்டுசெய்தி வருவதென — இப்படி யியல் பொன்றேயிருப்பதொழிந் தான்மாக்களுக்குச் சுகதுக்கமென்ப இரண்டாய்வருகிற தெப்படியென்னின் ?

| | |
|---|---|
| மலருந்தியு மருவலின வாசம வெமமை தருவதென னீரென செயது | நீரானது மலனைப் பொருந்தினபோது வாசனையுணடாம், அககினியைப பொருநதின போது வெமமை யுணடாவானேன, அம்மெனன கனமதைதசசெய் ததற் குணடாயிறறு |
| தானியல் பாகுமனறே. | ஆகையா லானமாககா சுடியாயிருக்கிறதா துககியாயிருககிறது மொருவன கொடுககவேணடாம், சுபாவஙகாணும எ-று (ரு) |

---

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

——0——

மேல் லோகாயதன புணணியபாபஙகளெனப தொனறுமில்லை, சுகதுககஙகள ஜீகததுககு ஸவபாவமெனபதை பனிரணடு விருததததிறசொ அநுவதிதது நிராகரிததல

இருவினையெனனையிருபத தனபஙக ளிபலபதெனனில்-புணணிய பாபஙகளென றிரணடு னடெனறு சொலலுவானேன, சுகதுககஙகள ஸ்வபாவமே யெனனில,—ஒருகனமை யியல்புகளள தொருவனுககு இரணடுசெய்தி வருவதென - ஸவபாவமான தொரு பகுபபா யிருபபதனறி யொருவனுககு சுகமும துககமு மிரணடுவகையா யிருப்பதேதெனனனில,— மலருநதியு மருவலின வாசம வெமமை தருவதென னீரனசெய்து தானியப்பாகுமனறே-புஷபமானது பொருநதினபொழுது வாசனையையும் அகனிபொருநதினபோது ஊஷணததையும உணடாக்குகிற நீரானது எனனபுணணிய பாபததைபபணணிறறு,ஆகையாலெல்லார்ககும சுகதுக்கங்கள ஸ்வபாவமே எனனில்

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

——0——

உலோகாயதன மத மாசங்கித்து தூஷிக்கின்றார்

இருவினையென்னை - பாவபுண்ணிய மெனப்பட்டது,—பிரத்தியக்ஷப் பிரமாண மொன்றுக்குமே விஷயமாகக் காணப்பட்டிராதலும் நிஷ்பிரயோசனம்,—இன்பதுன்பங்க ளிப்படியென்னில் - சரீரத்தைத் தவிர ஆன்மாவில்லை, சரீரமானமாவுக்குச் சுகதுக்கங்களைச் சுபாவமென்று நீசொல்லில்,— ஒருதன்மையிலுள்ளது-சீதத்துக்கும் ஜலத்துக்குமியற்கை,— ஒருவனுக்கிரண்டு செய்யவருவதென - ஒருபுருஷனுக்குச் சுகதுக்கானுபவமிரண்டு வருவதேது,— மருந்தீயு மருவலின் வாசமுமைமருவுதென் னீரென்செய்ததான - ஜலமென்ன கன்மத்தைப் பண்ணித் தான் புஷ்பாசனிகள் பொருந்தியவிடத்து மணஞ் சூடு கொடுப்பது. ஏது காரணம். இல்லை, - இப்படியாகு மன்றே - பொருளியற்கைதானே

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

——0——

இவ்வுரை - சு - செ, சேர்க்கப்பட்டிருப்பதைக் காண்க.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

——0——

உள்ள தொன்றல்ல, பின்னை யுள்ளதேது? இந்தச் சரீரத்துக்குச் சுகதுக்கங்க ளிரண்டு மியல்பாக வுண்டாமென்ற உலகாயதன்மத மருளிச் செய்கிறார்.

இருவினை யெணையினைபத் துன்பங்க ளியல்பதென்னில்- இரண்டுவினையாகச் சொல்லப்பட்ட புண்ணியபாவங்கள் வேண்டுவதில்லை, இந்தச் சரீரத்துக்கு உண்டாகிய சுகதுக்க மியல்புகாணுமென்று நீ சொல்லில்?—ஒருதன்மை யியல்புகளுள்ளது- இயல்பென்று சொல்லுவையாகில், அக்கினியும் உஷ்ணமும்போல வொருபடிப்பட்டிருக்கவேணும், அப்படியன்றிச் சுகதுக்கங்க ளிரண்டா யிருக்கையினா லியல்பென்றதாகாது. இதுவன்றியும்,—ஒருவனும் இரண்டுசெய்தி யுருவதென்ன - ஆனபடி ஒருவனுமிருக்கச் சுகதுக்கமென்று இரண்டாய வருகிறபடி யெப்படி,—மலருந்தீயு மருவினவாசமும்வெம்மை சருவதென நீரென்செய்தது - பூவும் அக்கினியும் பொருந்த சலத்துக்கு கந்தமு முஷ்ணமு முண்டாவானேன், அந்தச்சலம் என்ன கன்மத்தைச் செய்தது, அதையால் அந்த சலத்துக்கு இரண்டு மியல்பாக வந்ததுபோல் —தானியல் பாகுமன்றே - புண்ணியபாவங்களால் வரவேண்டுவதில்லை, சுகதுக்கங்க ளிரண்டும் இந்தச் சரீரத்திலே நிற்கிற வறிவுக்கு இயல்பாகவுள்ள முறைமை காணும்.

இதற்குப் பிரமாணம் பரபக்ஷம் அவனமெசம "இன்பொடு துன்பமெல்லா மெய்துவ கன்மத்தென்னின், னன்புனல் சந்தனத்தி னல்லுகவு மணுகவொண்ணு, மின்பொலி யழலினொடு மேவுவ கன்னத் தீமை, யென்செய்த தியம்பிடாய்நீ யிவையெலா மியல்ப தாமே" என்னுமதுங் கண்டுகொள்க

சி,த-பர, லோகா-ம, கo-செ

இதனாற் சொல்லியது ஆன்மாக்களுக்குப் புண்ணியபாவங்களுக்கிடாகச் சுகதுக்கம் வரவேண்டுவதில்லை, சலத்திலே பூவும் அக்கினியுஞ் சென்று பொருந்த கந்தமு முஷ்ணமுமியல்பாக வுண்டானாற்போல், சுகதுக்கங்களு மியல்பாகவந்து பொ

ருநதறென்று உலகாயுதன் தன்மதஞ் சொன்னனென்று மு றைமையை அறிவித்தது.

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

—o—

இவ்வுரை - சு - செ, சேறகசுப்படிருபபதைக் காண்க.

## மறைஞானதேசிகர்.



முனசொனன லோகாயதனை மறுததுணர்த்துகிறுர்.

தன்னியல் பொழியபபூவுந் தழலும்வந தணையநீ
ரின், மன்னிய திரணடுசெய்தி வருமிரு வினையினுலு,
முன்னிய வின்பத்துன்ப முறுமுயி ருணர்விலாத,துன்
னிய வசித்தையினபத் துனபயகள்சூழ்ந்திடாவே.(சு)

(இ-ள) தனனியல் பொழியப்பூவுந் தழலும்வந தணையநீரின் மனனிய திரணடுசெய்தி — நீரானது தனக்கியல்பாகிய தடபததை யொழிந்து, மணததையும வெம்மையும பொருந்தியதற் கிரணடு குணமுணடாய தாகையால்,

வருமிரு வினையினுலு முனனிய வினபத துனபத முறுமுயிர் — ஆன்மாக்கள் செய்யப்பட்ட விருவினையினுலு மவரவருககுத தககசுகதுககபலங்களைப பொருநதும்.

உணர் விலாத துனனிய வசித் — நெருங்கின பூதங்க டனக்கென்ன வறிவி லாமையாலுஞ் சடமாதலாலு மதனை யினபு

வைரயின்பத்துன் துன்பங்கள் பொருந்தாதான் எ - று.
பங்களை சூழ்ந்தி
டாவே. (சு)

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

—o—

இதற சூத்திரம்.

தனியல் பொழியப் பூவுந்தழலும் வந்தணைய நீரில்மன னிய திரண்டுசெய்தி-நீருக்குத தனக்கு இயல்பான குளிர்ச்சி நீங்கப் பூவும் நெருப்பும் பொருந்தியிட மணமும் வெம்மையும் பொருந்தித்து. அப்படியே,— வருமிருவினையினுறு முனனிய வினைப்பயனகள - புண்ணியபாபங்களென்று சொல்லப்பட்ட விரண்டுதொழிலினுலும சுகதுக்கங்களாகிய கருமபலமானதுவ ரும —உறுமுயிர்-அந்தசுகதுக்கங்களை ஆனமாவானது பொரு ந்தும்,—உணர்விலாத துனனியவசத்தை யின்பத்துன்பங்களை சூழ்ந்திடாவே- அறிவில்லாததாய ஆனமாவிற்கு போகாயதன மாயிருக்கிற தேகத்தை சுகதுக்கங்கள் பொருந்தாது, நீரிற்பொ ருந்தின வாசனையுமுஷ்ணமும் நீருக்கின்றி அந்த நீரை ¶ஸ்வீக ரிக்கிற பேர்க்கானதுபோல தேகத்தில் பொருந்தின சுகதுக்க ங்கள் தேகிக்கல்லது தேகத்துக்கில்லை.

¶ ஸ்வீகரித்தல் - அங்கீகரித்தல்.

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—o—

நீ சொன்ன திஷ்டாந்தத்தி லானமாவிற்குச் சுகதுக்கங் களியற்கை யன்று, செயற்கை யென்றுதானே சித்தித்ததென் றுசெப்புகின்றார்

சனிபல்பொழிய-தனதியற்கைச் சித்குணமறைய,— பூ
வந்தழலூர வந்தணைய - பொருந்த,— நீரினமனவிய திரளெழி
செயதி-மணங்கூடுனெனனுஞ் செயற்கைக்குண மிரண்டும வந
துசேர்ந்தன, அப்படி,—வரு மிருவினையிருலும-புத்தியில் பொ
ருந்திய புணணியபாவங்களிருலும,— உனனியவினபதுனப
ம - உணடாகிய செயற்கைச் சுகதுக்கங்களை,—உயிருமும - ஆ
னமா வநுபவிப்பன,— உணர்விலாத் துன்னியவசித்தை யின
பதுனபங்களை சூழ்ந்திடாவே - ஆனமாவைப்பொருந்திய சரீ
ரேந்திரியாதிகள் அறிவின்மையாதலாலந்தச் சுகதுக்கங்களை
யநுபவியாது, அசித்தைப் பொருந்தி யிராதெனறுரை பணண
லாகாது.

சுகதுக்கங்கள் புத்தித்தத்துவத்தி லுண்டாய்ப் பொருந்தி
யிருத்தல்

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

—o—

ஒருபொருட்குத் தம்முள மாறுபட்ட விரண்டுதனமை
காரணந்தானின்றி யுளவாகாமையானும், தனனீருக்கு வாச
மும வெப்பமுஞ் செயற்கையானுளவானவாகலின அதுவேயீ
ணடைக்கு உவமையாய முடிதலானும், இனபத்துனபநுகர்ச்
சி சித்துக்கன்றிச் சடத்துக்குக் கூடாமையானும். அவ்வினபத்
துனபமிரண்டற்குங் காரணம் வேண்டப்படு மாகலான், இரு
வினையெனப்படுஞ் சஞ்சிதமே ஆண்டைக்குக் காரணமென்ப
தாம்.

என்னை யென்னும் வினு இன்மை குறித்து நின்றது.

அதுவெனனும பகுதிப்பொருள விகுதி அப் பண்பினமே
னிலாறது
தனஙியல்பு ஈடபம
உணாவிலாத வசிதுதெனறது "அடியளாநதானறுயது" எ
ன்றூர்போலக கொள்க (௫—௯)

## நிரம்பவழகியருளை வருமாறு.

இபபடிசசொனன உலகாயுதனை மறுததுமேலருளிச் செ
ய்கிறூா.

தனஙியல் பொழிபப பூவுந் தனலுமவந தனையாகினமன
னிய திரண்டுசெயுடி - தனனுடைய சுபாபமொழியப பூவும அ
சுகினியும பொருநத சலகநதக்கு இரண்டு குணமுணடாயது அ
துதனமைபோல,—வருமிரு வினையினுனு முனனிய வினபதுது
னப முறுமுயிா - அநாதியே யுணடாகபபடட புணணியபாவ
ங்க ளிரணடிகுனுும உளள நினைவுகளாக வாததகக சுகதுக
கயஙகளா ஆனமாப பொருநதி அநுபவிககும அப்படி நீாசொல்
லுகிற வானமாவை எஙகேயுணடென்று காணப்பட்டது இங
த உடமபு காணும சுகதுககஙகளா யனுபவிககிறது எனறு நீ
சொல்லில்—உணாவிலாத துனனிய வசிதகையினபத துனப
ங்களா சூழநதிடாவே - பிரஞ்ஞையில்லாத பூதஙகளினுடைய
காரியமுமாய சேதனமுமா யிருககிற சரீரம, நனமை தீமைக
ளை யறியாத, ஆனபடியாலே யநதச சரீரததைச் சுகதுககங்க
ள வநது பொருநதாது. ஆகையால் சேதனனுயிருககிற வான
மாவே யினப துனபங்களை யறிந்து புசிக்கும்.

இதற்குப் பிரமாணம் பரபக்ஷம் அவன்மறுப்பு" கநதமவெ
ம்மை கலநதிடும்புனல் கனமமேன்செய்த தென்றனை, சந்தன

ந்தழல் சாரசீரி தனமையுற்றிடு மாறுபோற், தந்தகன்ம மிர ண்டணைந்து தருஞ்சுகத்தொடு துக்கமுஞ்,சிந்தியாவெழு சிவனு ற்றிடும் வேறுடற்கிலே தேறிடே." எனனுமதுங் கண்டுகொள்க.

சித்-பர, லோகா-மறு, கசு-செ.

இதனுற் சொல்லியது உலகாயுதன சுகதுக்கங்க ளுடலு க் கொழிநது ஆனமாவுக் கில்லையென்ன, அவனை மறுத்து ஆன மாவே சுகதுக்கங்களை யனுபவிக்குமெனனு முறைமை யறிவித் தது.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

---o---

இருவினையென்னை - இருவினை யெனபவே யில்லை,— இன பத்துனபஙகளியல்ப தெனவில - இனமதுனபங்க ளியல்பே யாகுமெனின,—இயல்புக கொருதனமையுளளது இயல்பினுக் கொருதனமை யுளளதனறி,— ஒருவனுக்கிரணடு செய்தி வருவ தென,— ஒருபொருட்குத தமமுண மாறுபட்ட விரணடுதன மை வருவதுயாது,—மலருநதீயுமருவலின-போதுமனலும பொ ருந்துதலான,—வாசம வெமமை- மணமும் வெப்பமும்,—நீரெ னசெய்துதருவது - தண்ணீர் யாது காரணத்தாற் றரப்பட்ட து,—தானியல்பாகுமனறே- தானேயியல்பாகுமெனின?--நீரின றனவியல்பொழிய-தணணீரககியற்கையாகிய தட்பமொழிய,-- பூவுநதழலும் வநதணைய - மலருந் தீயும் பொருந்துதலான்,— இரணடுசெய்தி மனனியது - வாசமும வெப்பமும் செயற்கையா னவாயின. ஆகலிறு துவே யீண்டைக குவமையாய்முடிதலா னும,— உனனியவினபத [illegible] முயிருறும்-கருதிப இனபதுன்ப நுகர்சசி யுயிராகிய சித [illegible] ணறி,—உணர்விலாத-உணர்வில்லா

னவாகிய,— தன்னியவசத்தைசூழ்ந்திடாவே - நெருங்கியசட
த்திர்குக்கூடாமையாலும்,—இனபதனபங்க ளிருவினையிலுனு
ம வரும் - அவவினைபததனப மிரணடிர்குக காரணமவேனட
ப்பமெமாகையால் இருவினையெனப்பமெ சஞ்சிதமே யாணடைக
குகாரணமெனப்பமெ எனபதாம. (ரு—சு)

## மறைஞானதேசிகர் உரை.



அவன மீளவு மிமமையிற் ரெழில் செய்ததனாலே
பொருடேடிப் போகங்களையு மிசசனனததி
லனுபவிககும தொழிநது, மறுமைபபயனி
ல்லை யெனபதனை யு ணாததுகிறா.

இம்மைபின் முயற்சியாலே யிருநிதி யீட்டியின்
ப, மிமமையே நுகாவாசெயதி யிலாதவர் பொருளுமி
னமி, யிமமையே யிடருழபபர் வேமிரு வினையதுண
டே, லிம்மைபின முயற்சியினறி யெயதிட வேணடுமி
ஙகே. (எ)

(இ-ள்) இம்மை யின முயற் சியாலே யி ருநிதி யீட்டி — ஆன்மாக்க ளிந்த வுலகிற் றமது முயற்சியி ற்பிரயாசப்படடுப பெருகப பொருளை யா ாசசித்து

இனப மிம்மை யே நுகர்வர் — இம்மையிலே தானே சுகத்தை யநுபவி ப்பார்கள்

செய்தி யிலா தவர் பொருளு மின றி யிம்மை யே யிடருழப்பர் — இஃதனறி மடிமைமை யுடையோர்கண் முயற்சியினமையாற் பொருளும்பெறு திம் மையிற் றனே கமககில்லாதே போயிற்றெ னறு துனபததையு முறுவார்கள்.

வேறிரு வினை யதுண்டேல் — இன்ப துன்பங்கட்குக் காரணமாகிய மடியு முயற்சியுமின்றி முற்சனனங்களி லாச் சித்த விருவினைப்பலன்கள் வேறுண்டாகில்,

இமமை யின முயற்சியின்றி யெய்திட வேணடுமிங்கே — அந்த விவ்விடத்து முயற்சியு மடியுமில் லாதிருக்கவும் பொருளுண்டாக வேணுங் காண் என்று (எ)

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

———o———

மேல்சங்கை

இந்தத்தேகத்திலுடைய உச்சாகத்திலுலே பகுவான திரவியத்தைத் தேடி, அதிலுலே இந்தத்தேகத்திலே தானே சுகத்தையு மனுபவிப்பார்கள் ; உச்சாக மில்லாதவர்களுக்குப் பொருளுமில்லாம லிங்கேதானே துக்கத்தை அனுபவிப்பார்கள். இந்த உச்சாக மடிமை யென்கிற விரண்டுமல்லாமல் வேறே புண்ணியபாபங்களென் றிரண்டு முண்டாமாகில் உச்சாகமன்றியிலே யிப்பொழு திவ்விடத்துண்டாக வேணுமே

———

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

———o———

காரணமாகக் காணப்பட்ட பொருளைக் காரணமாக விலைத்தமையுமென்று, கற்பிப்பதே முக்கியம், காணாத காரண கற்பனை நிஷ்பிரயோசனமென் றுசங்கிக்கின்றார்.

வெளிப்பொருள்.

———

## சிவஞானயோகியருரை வருமாறு.

—o—

இவ்வுரை - அ - செ, சோதிக்கப்பட்டிருப்பதைக் காண்க.

## நிரம்பவழகியருரை வருமாறு

—o—

மீளவும் இம்மையிலே தொழில்களைச் செய்து பதார்த்தங்களையுண்டாக்கி யதனாலுண்டான போகங்களை யிந்தச் சந்நதியிலே யனுபவிக்கும் தொழிலன்றி மறுமைப்பய னில்லையென்கிற உலகாயுதன் மதமே லருளிச் செய்கிறார்.

இம்மையின் முயற்சியாலே யிருநிதி யீட்டி - இந்தச் சந்நதியிலுண்டாகிய உற்சாகத்தாலே மிகுதிப்பாகத் தனங்களைச் சேகரித்து,—இன்பமிம்மையே நுகர்வர் - அந்தப் பதார்த்தங்களினாலுண்டாய போகத்தை யிந்தச் சந்நதியிலே புசியாநிற்பார்கள்,—செய்கையிலாதவர் பொருளுமின்றி யிம்மையே யிடருழப்பர் - ஒரு தொழிலுஞ் செய்யமாட்டாதவர் தனங்களு மில்லையா யிம்மையிலே துயரத்தோடே கூடி ஊதீதப்பட்டாநிற்பார்கள்,—வேறிரு வினையதனேடேல் - இதுவொழிந்து வேறே மறுசந்நதிக்காகச் சஞ்சிதத்த புண்ணியபாவங்களுண்டாமாகில்,—இம்மையின் முயற்சியன்றி யெய்திட வேண்டுமிங்கே - இந்தச் சந்நதியிலே ஒருதொழிலுஞ் செய்யாமலிருக்கச் செய்தேயுந் திரவியமுண்டாகவேணும், அப்படியுண்டாகாது அதுகொண்டே மறுமைப்பயனில்லையாகையால், இந்தச் சந்நதியிலே செய்த தொழிலாலுண்டாகிய பயனை இங்கே யனுபவிப்பன.

இதனாற் சொல்லியது, உலகாயதன் இம்மையிலே தொழில்களைச்செய்து அதனாலுண்டாகிய திரவியங்களைக் கொண்டு

இம்மைப்பயனை யனுபவிக்கிற தொழிந்து மறுமைப்பயனில்லை யென்றான என்னு முறைமை யறிவித்தது.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

இவ்வுரை - அ - செ, சேர்க்கப்பட்டிருப்பதைக் காண்க.

---

## மறைஞானதேசிகர் உரை.

அவனை மறுத்துணர்த்துகிறார்.

இருவினைச் செயல்காணிம்மை யிரும்பொருளி
ன்பம்வேண்டி, வருவினை செய்யுங்காலை மடிவருமடியு
மின்றித், தருவினை யதனிலத்தந் தானறுந் துயரந்தங்
கு, மொருவினை செய்யாதோரு முடையரிவ் வுலகந்
துள்ளே. (அ)

(இ-ள்) **இருவினைச் செயல்காண** நீ முற்கூறிய மடியு முயற்சியு மிருவினையால் வருஞ் செய்திகாண், ஆன்மாக்கடமது முயற்சியா லுண்டாவதல்ல அஃதெங்ஙனமெனனில்?

**இம்மை யிரும் பொருளின்பம் வேண்டி வருவினை செய்யுங்காலை மடிவரும்** இம்மைக்கண் ஒருவன் மிகவும் பொருட்டேட வாசைப்பட் டதற்கேற்ற வினைசெய்யுங் காலத்தி லவன் முற்சன்மத்தி லாச்சித்த நல்வினைப்பய னுண்டாகாவிட்டுத் தமமுயற்சி நீங்கி மடிமைவந்து பொருந்தாநிற்கும்

**மடியுமின்றித் தருவினை யதனி** மடிமைவந்த காலத்து மடிமை நீங்கிய பொருள்வரவிற் கேதுவாகிய வைகளா லீட்

லத்தந் தானறு டியதனமுமொரோவழி பொருந்தும. முற்
ந் துயரந்தங்கும் சந்நத்தி லார்சசிதத சறகனமமில்லைபாகிற்
களவுமுதலியவறறுற பொருள போனவா
றே துனபமடையாநிறகும

ஒருவினை செ ஆகையா லிபபடிப்பட்டதொரு முயர்ச்
ய்யாதோரு மு சி செய்யாதிருநகவும், பூர்வத்தி லார்சசிதத்
டையரிவ வுலகத கனமபலத்தாலே பொருளையு மினபத்தையு
துளளே. முடையரா யிருபபாகள எ-று

உமமை யுயர்வு சிறபபு (அ)

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

—— 0 ——

### இதாருத்தரம்.

இருவினைச் செயல்காண—சுகதுககங்கள் வருவதெல்லாம் புண்ணியபாபங்களுடைய தொழிலினாலல்லது இம்முயறசி யால வாராதுகாண, அதெவவாறெனவில்?— இமமையிரும பொருளினபம வேணடி வருவினை செய்யுங்காலை மடிவரும மடியுமின்றித் தருவினை யவனி லத்தந் தானறுந் துயருந்தங்கும்— இமமையிலே அதிகமான பொருளைததேடி சுகத்தை யனுபவிக்கவேணடிப பொருளவரு முயாசசியைச செயயுங்காலத்து மடிமைவரும. மடிமையைத் தவிாந்து உசசாகத்தைப் பணணினும மதனுற பொருளு மில்லாமல் போனாலும போம. பொருளில்லாததனறி அபாயம் வரினுமவரும்,— ஒருவினைச செய்யாதோரு முடைய ரிவவுலகத் துளளே-பிராரத்த மல்லது வாராதெனனும் முறைமையை யறிந்த பெரியோா, அயாசிதவிருதமாக பூமியினகணணே யிருககவும் அவர்களுககு சீவனம் நடககவும் கணடோம்.

---

## ஞானப்பிரகாசனை வருமாறு.

—o—

இம்மையின் முயற்சியாற் செய்யுங்கன்ம மோரிடத்திற் பலத்தைப் பொருந்தி யோரிடத்தி னீங்கி வியபிசரியாதாதலா லவ்வியபிசரித்த விடத்துக்கரணுத் காரணங் கற்பிக்க வேணு மென்று காண்பிக்கின்றார்.

வெளிப்பொருள்.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

—o—

அற்றேல் அக்காரணமாவது முயற்சியேயாமென்பதூஉ டம்பாட்டினு றெனின் மன்றேயினும் வைத்துக் கணக்காக வறியக் கிடத்தலின் அதுவேயமையும், வேறுமோர் காரணங் கோடன் மிகையா மென்றது பொருந்தாது அஃதொரோவழிப் பிற முதலுர் அவ்விருதிறத்தினும் வைத்தறியக் கிடத்தலின் நியத காரணம் வேறுண்டென்பது பெறப்படுதலால், அதுவே ஆணைக்குப் புலனாகாத சஞ்சிதவினை யென்று அறியப்படுமென்பதாம்

ஒருவினை செய்யாதோரு முடையராதல் கிழியீடு நேர்படப்பெற்றா முதலாயினாமாட்டுக் காணப்படும்

ஈண்டியவென்றது செல்வமை. அஃது 'உடையார்முனில்லார்போல்' என்பதனானுமறிக

இவைநான்கு செய்யுளாலும் உலோகாயதர் மதம்பற்றி யாசங்கித்துப் பரிகரித்துச் சஞ்சித மெனப்படு மிருவினையுண்மை, காரியவேதுவின் வைத்துச் சாதிக்கப்பட்டது.

அற்றேல், இருவினையேயமையுமாகலின் "முயற்சி திருவினையாக்கு முயற்றின்மை - யின்மை புகுத்தி விடும்" என்பதுபற்றிச் செல்லும் மனவெழுச்சிக்குப் பயனில்லை போலுமெனின் அது முன்னர்க் கூறப்பட்டது (எ—அ)

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

மேலும் அவனை நோக்கி மறுமைப்பய னுண்டென்று மறுத்தருளிச் செய்கிறார்

இருவினைச் செயல்காண் - நீ முன்னே சொன்னவையெல்லாம் முற்சநநத்திலே செய்த புண்ணியபாவங்களினுடைய முறைமைகாண், — இம்மை யிருவினைபொருள் பெற்றவேயன்றோ - இந்த சநநத்திலே மிக்க பதார்த்தத்தினாலுண்டாகிய போகத்தை விரும்பி, — வருவினை செய்யுமதனால் மதிவருமா - இவ்விம்முண்டாகத் தக்க தொழில்களிலே நின்று உபசரித்தாலும், முற்சநநத்திற் செய்த புண்ணியபாவங்க ளுண்டாயவகத்துக் கூடுதலில்லையாகில், உபசரிக்கிற வயவாரத்திலே இதற்கு பயனில்லையாகிய மதியை யென்று கூறாநின்றாய் இதுவன்றியும், — மதியுமின்றித் தருவினை பற்றிலதாய் நின்றதுமற்றுமுண்டு - போதமும் மதியாமல் மிகுந்த விருப்பத்துடனே திரவியமுண்டாகத் தக்க தொழில்களைச் செய்தாலும் முற்சநநத்திலே இவன்செய்த புண்ணியங்களமயில்லையாகில், இவன் கையிலுள்ள திரவியங்களுமை போய், மேல்வருகிற ஆக்கமும் முண்டாகாமல், வியாகுலமே யுண்டாகாநிற்கும் — ஒருவினை செய்யாதோரு முடையரிவ்வுலகத்துள்ளே - இப்படி முன்சொல்லப்பட்ட தொழில்களுக்குள் ஒருதொழில்களுஞ் செய்யாதிருந்தவர்கள் முற்சந

த்திலே செய்த புண்ணிய கன்மங்களுக் கீடாக மிகுந்த சிங்கா தனபதியா யிருப்பார்கள், பிரத்தியட்சமாக இந்தப் பூலோகந் தனக்குள்ளே

இன்னுஞ்சொல்லியது இம்மையிலுண்டான பதார்த்தங் களும் அந்தப்பதார்த்தங்களா லுண்டாகிய புசிப்புகளுஞ் சாவு மறுமையிலுள்ள புண்ணியபாவங்களுக் கீடாக வருகிறதொழிந்து, இம்மையிலுள்ள தல்லவென்று, உலகாயதனை நோக்கி மறுத்தருளிச் செய்தாரென்னு முறைமை யறிவித்தது

---

## சுப்பிரமண்ணியதேசிகருரை வருமாறு.

—o—

அற்றேல்-அக்காரணமாவது முயற்சியே யாமெனபது — முயற்சியாலே யிம்மையின் - முயற்சியா லிம்மைக்கண்,—இருநிதியீட்டி,—மிகுந்தபொருள்களை யீட்டுதல் செய்து,— இன்ப மிம்மையேநுகர்வர் - இன்பத்தையு மிப்பிறப்பின் கண்ணே யநுபவிப்பரென வுடன் பாட்டினும்,—செயதியிலாதவர் பொருளுமின்றி-முயற்சி யிலாதவர் பொருளீட்டலின்றி,—இம்மையேயிடருழப்பர்-இப்பிறப்பின்கட் டுன்பத்தினை யெய்துவரென எதிர்மறையினும் வைத்துக் கண்கூடாக அறியக்கிடத்தலி னதுவே யமையும்,— வேறிருவினையதுண்டேல்-அதுவன்றி யிருவினையென்பதொன்றுண்டென வேறுமோர் காரணங்கொள்ளின்,—இம்மையின் முயற்சியின்றி-இப்பிறப்பின்கண் யாதொரு முயற்சியின்றியும்,—இங்கேயெய்திட வேண்டும் - இவ்விடத்துப் பொருள் கைகூடவேண்டும். அஃதின்மையா னதுபொருந்தாதெனின்,— இம்மை யிரும்பொருளின்பம் வேண்டி - இம்மைக்கட் பெரிய பொருளின்பங்கள்கருதி,—வருவினைசெய்யுங்காலை மடி

டபிணிமூப்புச் சாக்காடென்னு மாறுமுனகருவி றபட்டது — சூக்குமசரீரத்துடன் கருப்பாசயத்திற் றங்குமபொழுது சிவஞாலககாலத் தமைந்ததாகும.

அவவிதி யனுபவததாலேறிடு ம — இஙஙனம விதிககப்பட்டவிதி யனுபவிதநே தொலைககபபடும.

முனபுசெய்த கனமமிங கிவற்றிற்கேது — முற்சனநததி லானமாக்க ளார்சசிதத விருவினைகளு மிப்பொழு திவவிட்த் தனுப விபபதானவற்றிறகுக காரணமாம.

சேருநீ யினிச செய்மகனமமேெ லுடற் சேருமனறே — நிகழ்காலத்திற் சரீரிசெயகிற கனமங களும வருகிற சனநத்துககுக காரணமாயி ருந தநரத தேகததிற் கூடுமெனறு நீயறிவாயாக எ-று.

இருவினையெனவினையெனறும விருத்தமுத லிநான்கு மொரு தொடர்

சுப்பிரபேதத்திற் பேதித்துக் கூறிய தாகம பேதமெனவறிக.

கருவுட்பட்டனவென்று பன்மை கூறு தொருமை கூறியது, "ஒருமையிற் பனமையும் பனமையிலொருமையு மோரிடம் பிறவிடந் தழுவலு முளவே" எனபதனாற கூறியதெனவறிக.

"அட்டகவுலசத்தோடே யுயிரிதாவருந்தனறி, தொட்டவனுதாநதொகசுச் சுககிலத்துடனேதோனறிப், பட்டனை பபசததிறபட்டுக கருட்டையிற்பதிந்துமுர்றிச், சட்டகமென னத்தோனறித் தரணியிறறங்கிச்சாயும்" எனவறிக. (௯)

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

—o—

மேலும்.

பேறு-ஒன்றுண்டாகிறது,—இழவு-போறது,—இன்பம்-சுகம்,—பிணி-துக்கம்,—(ஒடு-இடைச்சொல்)மூப்பு-நரைதிரை,—சாக்காடு - மரணம்,— என்னுமாறு முன் கருவுட்பட்டது-இப்படிச்சொல்லப்பட்ட ஆறும் கருவிற் பதிகிறபோழ்தே முன் செய்த கருமத்தில் பக்குவமானவை பிராரப்தகமாகப் பொருந்தப்பட்டது,—அவ்விதி யனுபவத்தால் ஏறிடும்,— அந்தப்பிராரப்தத்தினுடைய சுகதுக்கானுபவத்தினாலே நுகாமையேறிடும்,—முன்செய்த கன்மமிங்கிதனுக்கேது-பூர்வத்திலே செய்த கருமங்களிங்கதேகத்திலே யனுபவிக்கிற சுகதுக்கங்களுக்கேது,—தேறு நீயினி-செய் கன்மமேலுடற் சேருமனோ-இந்ததேகத்திலே செய்கிற புண்ணியபாபங்களினாலே மேல் தேகாதிகளைப் பொருந்துமென்று தெளிவாயாக

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—o—

பிராரத்தகம் புசிக்குமிடத் தாகாமிய மேறுமுறைமையும், அது சஞ்சிதத்தோடு கலந்து காலாந்தரத்திற் பலன் கொடுக்கு மென்பதும், பல மாறுமென்பதும் படித்தறிவிக்கின்றார்

பேறு - தனக்கு யோக்கிய போக்கியப் பொருளைப் பொருந்துதல்,—இழவு - நியமித்த காலாந்தரத்தி லதைப்பிரிதல்,—இன்பமோடுபிணி - சுகதுக்கம்,—மூப்பு - நரைதிரை,—சாக்காடு-மரணமென்கின்ற,—ஆறு முன் கருவுட்பட்டது-சரீரத்தடைத்தது,—அவ்விதி யனுபவத்தால் - நியமித்தவாறின

தனுபூதியால்,—ஏறிடும் - ஆகாமிய கன்மம் வந்துபொருந்து ம,—முன்புசெய்த கன்ம மிங்கிதனுக்கேறு - முன் சன்மங் களிற் பண்ணிச சஞ்சிதமாய்க் கட்டுப்பட்ட கன்மத்துட் பக்கு வ்ப்பட்டப் பிராரத்த கன்ம மிவ்வாக்குறுங் காரணம். கண்டகா ரியானுமானத்தாற் காரண மனுமிக்கப்பட்டது,—தேறுநீ - இப்படி யனுமித்துத்தெளிநீ,—இனிச்செய் கன்ம மேலு டற் சேருமன்றே - இப்போதேறு மாகாமியகன்ம மேற் சஞ்சி தத்தோடு கலந்து சில பக்குவமாயப் பிராரத்தகன்மத்தோடு கூடி மேல்வருஞ் சன்மங்களி லெடுக்குஞ் சரீரங்களிற் பேறி முவினைபமுத லாறு பலத்தோடும் பொருந்தும்,—கண்ட கார ணானுமானத்தாற் காரணகாரிய மனுமிக்கப்பட்டது

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

—o—

எடுத்ததோருடம்பின் வரக்கடவனவாகிய இன்பத்துன்ப ங்கட்கு ஏதுவாகிய செல்வ வறுமைகளும், அவற்றின் வரும் உ யர்விழிவுகளும், அவற்றுறுய இன்பதுன்பங்களுமாகிய வா றுமமுன்னே தானே சூக்குமமாய்ச் கருவினுள்ளே நின்றன வன்றி, அப்போதப்போது உளவாவனவல்ல அவைபின்னர் த் தூலமாய்வந்துகூடுதல் அவற்றையனுபவித்தற்குத் துணையாகிய முயற்சியானும். அங்ஙனமனுபவித்தற்குத் துணையாகவெழுந் து, முயற்சியும் அவ்வளவிலொழியாது மற்றோருடம்பிற் படும் அ வ்வறுவகைக்கும் வித்தாய நிலைபெறும். முற்பிறவியினிகழ்ந்தமு யற்சி இப்பிறவியின் வருமவ்வாறிற்கும் ஏதுவாயினாற் போலு மதனையேமுயற்சியானுங்கடவது பிறிதில்லையென்பதாம்.

பிணியென்பது ஈண்டுத் துன்பயாதிரையே யுணரத்தி நின் றது.

## நிரம்பவழகியருளை வருமாறு.

---o---

முற்சனநத்திற் சரீரத்தா லுண்டான புண்ணிய பாவங்களைந்தச் சரீரம விடும்பொழுது அதுவும ஒக்கப்போம், அது இந்தச்சனநத்தில் வந்து பொருந்துகிற முறைமை யெப்படியென்ற வினை நோக்கி அருளிச்செய்கிறார்.

டேறிழ வினயமோடு பிணிமூப்புச் சாக்காடென்று மாறு முன கருவுடபடடது - இவன பொருடசாரவு உயிரசசார்வு என்று சொல்லப்பட்ட விரண்டையும பெறுகிறதும், இவையின்றை யிழநதவிடுகிறதும, ஒருசுகதுககத்தை யநுபவிக்கிறதும், அசரோடு வியாதிமுதலான துககங்களை யநுபவிக்கிறதும், விருததாபபியததால் வருகிற துககஙகளும், மரணமும, என்று சொலலப்படட இந்த அறுகாரியமு முறசனநததிற செய்தது; இடபொழுது மாதாவினுதரத்தி லுண்டாகிய கருபபையிலே ஆனமா வணுவாகச சென்று பதிற வவதரததிலே யிவையும் சூக்கமாகச சென்று கூடிப் பதியாநிற்கும் —அவவிதி யனுபவததா லேறிடும்-அநதமுறைமை பரமேஸவரன விதிததபடியே யநுபவிததுத தூலநதபோம். இதறகுக் காரணமேதெனனில்?— முனபுசெய்த கனமமிஙகிவர் நிறகேது-முறசனநததிலாாசசித்தபுணணியபாவம இவவிடதது இநத அநுபவததுககும் அதுவே காரணமாம. இநதவுடலிலே இப்பொழுது செய்கிற கனமம அநுபவிப்ப தெப்படியெனனில?—தேறுநீ யினிச்செய்கனம மேலுடறு சேருமனறே - இநத முறைமைபோல இப்பொழுது நீசெய்கிற கனமஙகளும் வருகிற சநநததில் எடுக்கிற தேகத்திலே கூடுமெனறு புததிபண்ணுவாயாக.

இகூறற் சொல்லியது முறசநநத்திற் செய்த புண்ணிய பாவம இநத சநநத்திற் பொருநதுகிறபடி யெப்படி யென்ற

டல்வினைக்கும், தொடர்ச்சியா லொன்றுக்கொன்று தொன்றுதொட்டநாதிவித்தி, னிடத்தினின மரமர தனின வித்தும்வந் திடையுமாபோல். (க0)

(இ - ள) உடற் செயல் கன மமிந்த வுட ல்வாந்த வாறெ னவெனனில் — இவ்விருவினைகளு முடலின காரியமாக வேறுப, இனி யிவவுட லுணடாதறகுக கார ணமயாதெனறு கேடகிறுயாகில,

விடடபடு மு னறுடம்பின வி னையிந்த வுடல் வினைகசகும — முறசனமததில் விடப்பட்ட தேகததினி னறு செயததனம மிநத சநததைதை யுண டாககுமெனறு நீசொல்லில்? இதோதா சிரயமெனறுங குறறமு முடாம அஃதனறு,

தொடாசசியா லொனறுக கொனறு தொட டநாதி — இநதமுறையே கனமமு முடலுமொனறு க கொனறு காரணமாய்த தொடாநது தொ டாநது சநதாகதோறும வருகையா லிவை பிரவாகாநாதியாகும அஃதெனபோல வெ னனில்?

விதநி னிடத் தினின மரமரத தின வித்துமவந திடையு மாபோ ல். — விததினிடதது மரமுண்டாய் மரத்தின கண விததுணடா யிப்படி பொனறுககொ னறு காரணமாய் வநது தோனறுமாறு போல் எ - று

பிரவாகம எனப திடையறுமல் வரும் பெருக்கெனவறிக. பிரவாகாநாதி, அநாதியெனபதில் தலைக்குறைதத லாககி ஞர்.

இதர்குச சிநதியமும் பார்க்கியையு மெனவறிக. (கா)

## சிவாக்ரயோகியருரை வருமாறு.



உடற்செயல் கன்மமிந்தவுடலவந்தவா றென்னெனில்-உட லினாலே புண்ணியபாபங்கள் செய்யப்பட்டது, இந்தவுடல் புண்ணியபாபங்களினாலே வந்ததென்னில்? அன்னியோன்னி யாசிரயமாகுக்து, ஆகையால் தேகோற்பத்தியாதி யுற்பத்திகளுக்குக்கா ரணமேதென்னில்?— விடப்படு முன்னுடம்பின் வினையிந்த வுடல்வினைக்குந் தொடர்ச்சியா மொன்றுக்கொன்று தொன் றுதொட்டநாதி - முன்னேவிடப்பட்ட தேகத்தினாலே பண் ணினகருமமிந்த வுடலுண்டாகிறது, இப்படியே தொன்று தொட்டு ஒன்றுக்கொன்று ¶தவந்தமாய் பிரவாகாநாதியாயு ள்ளது எவ்வாறென்னில்?—வித்தினிடத்தினின் மரமரத்தி னின்வித்தும் வந்திரையுமாபோல் - ஒருபீசமானதிலே ஒருவிரு க்ஷமுண்டாகி அந்தவிருக்ஷத்திலே அநேகவிருட்சங் காரண மாக அநேகபீசங்களுண்டாம், அவ்வாறுகருமமானது பிரவா காநாதியாய் மும்மலத்தொன்றாய் புண்ணியபாபஸ்வரூபமா ய்அதத்துவரிஷ்டமாய் இருவினைகளுக்குக்காரணமா யிருத்தலா ல் இவ்வாறுதேகங்களுங் கருமங்களுமுண்டாம, *அன்னியோ ன்னியாசிரயதோஷமில்லை.

¶ தவந்தம-இரண்டு.

* அன்னியோந்நியாச்ரயம்-தன்னையறிய அதனறிவையும் அதைஅறியத்தன்னறிவையு மபேட்சிக்கிற ஒருகுற்றம



## ஞானப்பிரகாசருரை வருமாறு.



சரீர கன்மப் பிரபந்தம பிரவாகாநாதியென்று பேசுகி னறார்.

சரீராந்தரங் கன்மாந்தரம்,கன்மாந்தரஞ் சரீராந்தரத்து க்குக் காரணமாதலால், இதரேதராசரய தோஷமு மில்லை யென நிருத்தயம்

வெளிப பொருள்.



## சிவஞானயோகியருரை வருமாறு.

அங்ஙனம் உடலும் வினையும், வித்தும் மரமும்போலத், த ம்முட் காரண காரியமாய்த் தொன்றுதொட்டுப் பிரவாகா நா தியாய் வருதலின்,அவற்றிற்குத் தம்முண் முறைபிற்பாடு முடியா தெனபதாம்.

அற்றேல், வரம்பின்றியோடி அநவத்தையாம்பபோலுமெ னமலையற்க, அவ்விரண்டற்கும்மூலமாகிய சூக்குமவுடம்பு வே றுண்மையின.



## நிரம்பவழகியருரை வருமாறு.



கன்மங்களெல்லா முடலாலே யுண்டானது, இந்தவுடல் தான் ஏதாலே யுண்டானது என்றவனை நோக்கி; மேலருளிச் செய்கிருர்

உடற்செயல் கன்மமிந்த வுடல்வந்த வாறேதென்னில் - கன்மங்களெல்லா முடலிலே நின்று செய்யப்பட்டதா யிருக் தது, எனக்கு இந்த வுடம்புவந்து கூடினமுறைமை எப்படி யெனில்,—விட்டபடு முன்னுடம்பின வினையிந்த வுடல்வி ளைக்கும - முற்சந்ததில் விடப்பட்ட சரீரத்திலே நின்று செய் த கன்மம் இனிமேல் ஒருடலை யுண்டாக்கும். இப்படியே,—

தொடர்ச்சியாய் ஒன்றுக்கொன்று தொட்டு - ஆசையாலே ஒருதேகத்திற் செய்த கன்மம் ஒருதேகத்தை யுண்டாக்கப்பட்டு இப்படி தொண்டு தொட்டு வாராநிற்கும் அதென்போலவென வில்,—அநாதி வித்திலிட்டத்தின்ன மரம் மரத்தின விதைமயங் கிசையுமாபோல் - அநாதியே விதையினிடத்திலே மரமும அந்தமரத்திலே விதையுமவந்து தோன்றுகிறுபோல.

முன்னுடம்பு பின்னையிந்த வுடல்வினைக்கு, கன்மமென்ப தொன்றில்லையென்ற உலகாயதனை நோக்கி, கன்மமுளதென்று மறுத்து அருளிச்செய்ததெனக் கொள்க

அதாவது யோனிபேதங்களாகவும இந்திரியங்க ளேற்றக் குறைவாகவும சாதிபேதங்களாகவும இப்படி பலபேதப்பட்டு கன்மத்துக் கிடாகையால், கன்மமுண் டென்றதெனக் கொள்க.

இதற்குப் பிரமாணம பரபக்ஷம "ஐந்துநானகொரு மூன்றிரண்டொன்றதா யுடலங்களின், வந்திடாவுணர் விந்திரியங்களும் வன்பனையு மின்மையாம, புந்தியோடிய வன்னபோக குணங்களபூத புணர்ச்சிதான, றந்திடாதிவை பேதமாயிட வந்தவாவினை தந்தவா.

சித-பர-உல-மறு, ௯-செ.

தொடர்ச்சியாவொன்றுக் கொன்று தொண்டுதொட்டநாதி, இமையிற் செய்தது இமையிலே யனுபவிக்கிற தொழிந்து முன்புள்ள தல்லவென்றவனை நோக்கி மறுத்தருளிச்செய்ததெனக் கொள்க.

இதற்குப் பிரமாணம் பரபக்ஷம் "அநாதியே லனாதிவினரெனின மலமாயைகன்ம மனுச்சிய, மநாதிகன்ம மணுக்கள் செய்ய வறிந்துகன்ம முடற்செயா, வநாதிகாரிய மாமுடற்க

ளாசேதனமபன்னை யாவறிந்,தநாதியாதி யமைக்கவேண்டு மமைப் பிறேறு மநாதியே" என்னுந்தங் கண்டுகொள்க

சித-பர-உல-மறு, ச௮-செ.

இச்சூற சொல்லியது வித்திலிட்டத்திலே மரமுண்டானாற்போலவு மீளவு மரத்திலே வித்துண்டானாற்போலவும், கன்மத்தினாலே யுடலுண்டாயு மீளவு முடலினாலே கன்மமுண்டாயும், இப்படி சரீரமுங் கன்மமும் அநாதியே தொண்டு தொட்டு தொடர்ச்சியாய் வருமென்னு முறைமையு மறிவித்தது.

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

—o—

உடற்செயற்கன்மம் - தனுவினைச்செய்திபாற கன்மமுண்டாம்,— இந்தவுடல்வந்த வாறேதெனனில்-இந்தனுஉண்டாதற்குக் காரணமயாதெனில்,— விட்டபடு முன்னுடம்பினல்வினை-நீங்கப்பட்ட முற்றானுவினைகன்மம,— இந்தவுடல்விளைக்குமம-இந்தனுவைவிளைவிக்கும,— வித்திலிட்டத்தினின்மரம - வித்தினைக் கண்மரமும்,— மரத்தினவித்தும வந்திடையுமாபோல்-மரத்திலைக்கண்விததமம வந்துபொருந்து மாறுபோல,— ஒன்றுக்கொன்று தொடர்ச்சியாய் - தம்முடகாரணகாரியமாய்,— தொன்றுதொட்டநாதி-தொன்றுதொட்டுப பிரவாகாநாதியாய் வருதலினவற்றிற்குத் தம்முறமுற்பிறபாடு முடியாதெனபதாம

---

## மறைஞானதேசிகர் உரை.

இப்படி யுடலெடுத்துத் திரிகிறவனுக் காகாமி
யமேறுமா றுணர்த்துகின்றார்

முறசெயல் விதியைபிந்த முயறசியோ டனுபவி
த்தா, லிச்செயல பலிக்குமாறெ னிதமகி தங்கண்முன்

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

———o———

முற்செயல்விதியை யிந்தமுயற்சியோ டனுபவித்தா லிச்செயலியற்குமாறெனை-பூர்வத்திற்செய்த புண்ணியபாபங்களை யிந்ததேகத்தில் யத்தினத்தினாலே புசிக்கிறதேயானால், இதனால் மேல்கருமமேறுமபடி யெப்படியெனனில்?—இதமகிதங்கள-விருப்பு வெறுப்பாம,— முன்னாற்செய்யலானல்-பூர்வத்திலும் புசிக்கையில விருப்பு வெறுப்பா லாகாமிய மேறுகையால்,—இதகு மனைசெயினமேலகாகும்-இவ்விடத்து மந்தவிருப்புவெறுபபைபண்ணினால மேல்சநந்த்துக கேதுவாம,—பிற்செயா தனுபவிப்பதினறு-சிவா னுக்கிரகத்தினாலே ராகத்துவேஷ நிருமூசகனுககொழிய ஆகாமியமேறுதபடி புசிககிதகூடாது, ஆகையா லாகாமியம பொருந்த அனுபவிபபதில்லாமையால்,—பினெருடருஞ்செயகி - செய்யபபட்ட தொழிலானது புண்ணியபாவங்களால் சனம தொடர்ச்சியாய்வரும்

———

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

———o———

ஆகாமியம வந்தேறுமாறு கூறுகினறார்.

முற்செயல் விதியை - முற்சனனத்திற பண்ணின கன்ம பல சுகதுககங்களை,— இந்தமுயற்சியோடு - அந்தச சுகதுககங்களுககு முகற்காரணமாகிய போககிய கனம சுகதுககமாய்ப் பரிணமிததற்கு நிமித்தமாய்ச் சனகந் தாரகமாகி யந்த முற்செயலுட் டானே யிருககும் போசக கனம மிப்பிரயத்தனத்தையுணடாககி யதனோடு கூடியுண்டாகக, அந்தச் சுகதுக்கங்களை,—அனுபவித்தால் - புசித்தால்,— இச்செயல் பலிககுமாறெனை - இவ்வாகாமியம் வருதற்குக காரணமேது,—முற்செய

குத துணையாதன மாத்திரையே முயற்சியென்பதூஉ மொக்கு மாயினும், அவ்வாறு வினைப்பயனுக்கீடாக வருகின்ற முயற்சி மேலுடற் சேர்தற்குரிய வினையாமாறு யாங்ஙனமெனின்? நன்று சொன்னாய், முன்வினையெனப்படு மிதமகிதமாவன? முற்பிறவியின்வழி நிகழ்முயற்சியேயன்றி வேறின்மையான், அதனையுடம்பட்டாய்க்கு அநுபவம்பற்றி இவனுக்கும் முயற்சி நிகழ்ந்தால் அது மேலைக்கு வினையாமென்பது தானே போதரும் அற்றேல் ஒரோவழி முயற்சியின்றி யிருப்பார்க்கு மேல் வரக்கடவதொன்று இல்லைபோலுமெனின்? அற்றன்று, அனுபவமாவது முயற்சியைப் பொட்டியே நிகழ்வதொன்றாகலின் பிராரத்தவினையனுபவமுள்ளளவும் முயற்சியும் ஒருதலையானுண்டென்பது பெறப்படுதலின், அனுபவமுள்வழி மேலைக்கு வரக்கடவதொன்றில்லையென்றல் யாண்டையதென்றொழிக வென்பதாம்.

ஒருவினை செய்யாதோரு முடையரென்றதும் வருந்திச் செய்யவேண்டாது எளிதிற் பெறுவது நோக்கியே பிறிதன்றென்பது கருத்து.

மாங்கன் முதலியவற்றிற்கு தண்ணீர் முதலியவற்றை ஏற்றுக்கோடற்குரிய சூக்குமமுயற்சி யுண்டென்பது உணர்ந்துகொள்க

யாவரும் பிறழாமை யுணர்தற்கன்றே பிற்செய்யாதனுபவிப்பதின்று என எதிர்மறை முகத்தான் வரைசெய்து கூறினாரென்பது.

ஆருமென்பது தெளிவின்கண் வந்தது; காண்பவன் சிவனேயாரும் என்றாற்போல.

அற்றேல் ஒன்றன்பொருட்டு வந்தது மற்றொன்றன்பொருட்டாதல் கண்டிலமாதலின், இதமகிதங்கண் முன்னரச்செய

லாயவாறுதான் யாங்ஙனமெனின? அஃதுணர்த்துதற் கன்றே வருஞ்செய்யுளெழுந்ததெனபது.

---

## நிரம்பவழகியருரை வருமாறு

—o—

இதனுடலிலே புசிக்கிற கன்மமெல்லா முன்புள்ளதாகில் மேலைக்குக் கன்மமுண்டாகிறபடி யெப்படியென்றவனை நோக்கி மேலருளிச்செய்கிறார்.

முற்செயல் விதியைப்பிந்த முயற்சிபோ டனுபவித்தால் - முற்சந்தங்களிலாரச்சித்த புண்ணியபாவங்களை யிந்த சந்ததி லுடசாந்த னுடனே புசித்தால்,—இச்செயல் பலிக்குமயாறென - இப்பொழுது இங்கே புசிக்கச்செய்பதே யுண்டான கன்மங்கள் எங்கே பலிக்குமெனனில்?—இதமகிதங்கள முன்னரச்செயலாலும் - முறசந்தத்திற சுகதுக்கங்களை புசிக்கிற வவதாரத்திலே யுண்டான பிரியாப்பிரியங்கள இந்த சந்தத்துக்குச் சுகதுக்கங்களாய வந்து பொருந்துகையினாலே,—இங்கு மவைசெயின மேலைக்காகும் - ஆகைபால் இப்பொழுதும பிருரத்தம புசிக்கச்செய்தே யுண்டாகிற இதாகிதங்கள் வருகிற சந்தத்துக்கு ஏறவாகாநிற்கும்,— பிறசெயா தநுபவிப்ப தின்று - ஒருகாலத்திலும ஆகாமிய மேறுமற் புசிப்ப துண்டாகமாட்டாது,—பின்றொடருஞ் செய்தி-ஆகைபால் கன்மங்களா தொண்டுதொட்டு வாராநிற்கும்.

இதற்குப் பிரமாணம் முந்தின திருவிருத்தத்துக்கு இட்ட பிரமாணத்திலே கண்டுகொள்க.

இதனாற்சொல்லியது முற்சந்தத்தி லுண்டான வாகாமியமித்த சந்தத்துக்குப் பிராரத்தமாயும் இப்படியே சஞ்சிதம்

அநாதியே யிரண்டுந் தொடர்ந்து வருமென்னு முறைமையு மறிவித்தது.

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

முற்செயல்விதியினையிங்கு முயற்சியோடனுபவித்தால் - அறிவித்ததனையுங் கூறியவாற்றான் முன்செய்த கன்மமிங்கிவற்றிற் கேதுவென்பதூஉம், அவற்றையனுபவித்தற்குத் துணையாகு மாத்திரையே முயற்சியென்பதூஉம் பெறுதுமாயினும்,—இச்செயல் பவிக்குமாறென்னை - அவ்வாறு வினைப்பயனுக் கிடாகவருகின்ற முயற்சி மேலுடற் சேருதற்குரிய வினையாமாறு யாங்ஙனமெனின்? என்று சொன்னால்,—இதமகிதங்கள் முன்னர்ச்செயலாலல - முன்வினையெனப்படும் இதமகிதமாவன? முற்பிறவியி னவ்வாறு நிகழு முயற்சியேயன்றி வேறின்மையானதனையுடம்பட்டாய்க்கு அந்நயம்பற்றி,—இங்குரைவைசெயின் மேலைக்காகும் - இங்கு மம்முயற்சி நிகழ்ந்ததாவது மேலைக்கு வினையாமென்பது தானே போதரும் அற்றேல் லூழ்வழி முயற்சியின்றி யிருப்பார்க்கு மேல்வரக்கடவதொன்றில்லை போலுமெனின்? அற்றன்று,—பிறசெயா தனுபவிப்ப தின்றுசெய்திடினொன்றொடரும் - அனுபவமாவது முயற்சியையொட்டியே நிகழ்வதொன்றாகலின் பிராரத்தவினையனுபவமுள்ள அளவு முயற்சியு மொருதலையா னுண்டென்பது பெறப்படுதலின், அனுபவமுள்வழி மேலைக்கு வரக்கடவதொன்றில்லையென்றல் யாண்டையதென்றொழிக என்பதாம்.

---

## மறைஞானதேசிகர் உரை.

முற்கூறிய கன்மம் புசிக்குமிடத் துதாரண பூர்வமாகத் தொகுத் தனுவதிக்கிறார்

மேலைக்கு வித்துமாகி விளைந்தவை யுணவுமாகி,
ஞாலத்து வருமாபோல நாஞ்செயும் வினைகளெல்

பல நியதிசெய்தி பலமிவை கொண்டுகன்மம் பண்ணுவ துணபதா ஞல் — தத்துவமும், இவையிற்றின் றொழிலும், அத்தொழிலினுற் பலனும், இப்படியெண் விதமான கரணங்களைக் கொண்டு சிவ ஞானமாக்களைக் கனமஞ்செய்விப்பதுஞ் செய்த கன்மபலங்களைப் புசிப்பித்தலும்.

அஃதென்போல வெனவில்? "வினையே செய்பவன் செயப்படும்பொருளே-நிலனே காலங் கருவியென ருங்-கின்னதற்கிது பய னுகவென ஹு-மன்னமரபி னிரண்டொடுந் தொகைஇ - யாயெட்டென்ப தொழினமுதனிலையே" என்னு மிலக்கணத்தா னெருவன றெழில் செயயுமிடத் திவவாறு காணக.

வினையெனப தானமாக்கள செய்யுந தொழில்

செய்பவ ஞனமா.

செயப்படுமபொரு ளிருவினை.

நிலனெனபது அவாக ளிருக்கும்புவனம்.

காலமுககாலததையு முண்டாககுங் காலதத்துவம்.

கருவி முப்பத்தாறு ததுவம்.

இன்னதற்கெனப திருவினைப்பயன்களைப் புசிககவேண்டிய காரணம.

இதுபயனெனப திச்சுகதுக்கங்களைப் புசித்துத் கொலைத்தபின் கன்மக்ஷயம்பிறந்து மோக்ஷததையடைகையெனவறிக.

நில விடாவி மைதாஞ் சென று — இவை சடமாதலா லானமாவைச் சென்று தானே பொருந்தமாட்டாது.

வினை ந் துயிர் நிறுத்திக் கொள்ளாது — ஆன்மாவுந் தனககெனச் செயலில்லாதபடியாலே தாமிநக கன்ம மார்ச்சித்தற்குரியதல்லோவென் றறிந் தக்கனமங்களைக் கூட்டிக காரியப்படுததவு மாட்டான்.

அலகிலா வறிவனுணை யினைத் திமெருளி னலே. — என்ணிறந்த ஞானத்தையுடைய சிவன்றனதாக்கினு சத்தியாலே தனுவாதிகளையு மான்மாவையுங் கூட்டிப் போகங்களைப் புசிப்

பித்துத் தொலைப்பித்து மோட்சத்தை யடைவிப்பான. எ - று.

இதற்குப் பார்க்கியையிலு மறிக. (உஉ)

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

—o—

உலகு-காசியாதி புண்ணிய க்ஷேத்திரங்களிலே,—காலம் - சூரியோ†பராகாதி புண்ணியகாலங்களிலே,—உடல்-காயவியாபாரவசனாதிகளினாலே,—கரணம்-ஞானேந்திரியாந்தக்கரணங்களினாலே,—உறும - பொருந்தப்பட்ட,— பலநியதிசெய்தி-அநேகமாகிய அனுஷ்டானக்கிரியைகள்,—பலவினைகொண்டுகனமம்பண்ணுவனுண்பதானால் - இவை பலவயிற்றையும் புத்திபண்ணிக்கொண்டு கருமங்களைப்பண்ணி யந்தக்கருமபலங்களைப்புசிப்பதானால்,— நிலவிடா திவை தானுசென்று நினைந்துயிர் நிறுத்திக்கொள்ளா -இப்படிச்சொல்லிப்போந்த தேசமும் காலமும் தேகமும் கரணமும் தொழிலும் சடமாகையால் தானுசென்று பலமாய்ப்பொருந்தவறியாது ஆன்மாகிஞானுகை பூர்வஜனமங்களிலே செய்த கருமமிது அதற்குப்பலமிதுவென்றறிந்து கருமபலத்துக்குத் தேகாதிகளை மாயையிலேயுண்டாக்கி நிறுத்திக்கொள்ள வறியாதாதலால்,— அலகிலாவறிவனாணை யணைந்திடுமருளினாலே- சர்வஞ்ஞனாகிய பரமேஸ்வரனுடையகிரியாசத்தியானது,மாதாவானவள் பிள்ளைக்கு வியாதிவந்தகாலத்துக் கசப்பாதிகளையும், நின்ற காலத்திற் பால்முதலான மதுரபதார்த்தங்களையும், கிருபையுடனே கொடுக்குமாபோல; சுகதுக்கங்களைச் சேர்க்கும்.

†உபராகம் - கிரஹணம்.

—

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

———o———

கன்மத்துக்குச் சுவதந்திரம் இல்லாதிருந்தால், கன்ம கர்த்தாவாகியபுருஷனாலே பொருந்திப் புசிப்பனென்பதனை மறுத் துணர்த்துகின்றார்.

உலகு - புவனம்,—உடல் - தூலசரீரம்,—கரணம் - சூக்குமசரீரம்,—காலம் - நிகழ்காலம்,—உறும்பலன - திரவியமுதலியவும் சுகதுக்கங்களுமாம,—நியதி - சுகதுக்கங்களையுமிடமுதலியவற்றையும நியமிக்கும் நியதிதத்துவம்,—செய்தி - மனோவாக்குக்காயங்களினது தொழிலாகிய தூலகன்மம்,— பலவினை கொண்டு-இவ்விடமுதலிய வெகுசாதனங்களை கொண்டு,—கன்மம் பண்ணுவதன்பகாலை-புத்தி தத்துவத்தில சமஸ்காரரூப சூக்குமகன்மத்தை யுண்டாக்குவது. திரும்ப வந்து சுகதுக்கமாய்ப் பரிணமிக்க வேண்டிய புசிப்பதாகில்,—நிலவிடா வினை தானுசென்று - சுவர்க்க நரகங்களில போகம புசிக்கு மிடத்து, இடமுதலிய வினைகள தாமேயாய் உயிரேயுறுது,— உயிரும்,—நினைந்தவை நிறுத்திக்கொள்ளாது-சங்கற்பித்தவைகளை யுண்டாக்கி அவைகளோடு கூடமாட்டாது ஆகையால்,— அலகிலா வறிவனாணை யணைந்திடு மருளினாலே - சாவனுமாகிய சிவனது கிரியாசத்தி கிருபையினாலே சிருட்டித்துப்பொருத்தும்.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

———o———

வினைமுதற்காரணமாகிய வுயிர், ஏனையேழு காரகங்களுந் தனக்குத் துணையாகக்கொண்டு வினைகளை யீட்டலும் நுகர்தலு

முடைத்தென்பது எல்லார்க்குமொப்ப முடிந்தமையின்;உயிரை யின்றி யமைந்து தொழிற்படமாட்டாத சடமாகிய அக்காரகங் களாதல் அவற்றையின்றி யறியமாட்டாத சிற்றறிவுடைய அவ் வுயிராதல் தாமேகூடமாட்டாமையின், பாரிசேட வளவையா னே சுதந்திர வறிவனாகிய முதல்வனே தனதாணையாகிய திரு வருளால் அவற்றை யவ்வுயிர்க்குப் பொருத்திச் செய்விப்பனெ னபது பெறப்படுதலின், அச்செயலெல்லாம் அவன்பணியேயா மென்பதாம்.

ஆதலாலச்செயலெல்லா மவன்பணியேயென்பது குறிப் பெச்சம்.

ஈண்டு உலகென்றது உயிர்களை.

இன்னதற்காக இதுபயனாகவெனனும் இரண்டுகாரகங்க ளையும் நியதியெனபதனாற் றழீஇயினார்.

பண்ணுவ துண்பதெனனு மொருமைகள் அதுதொழின்மே னின்றது.

அற்றேல் அப்பணி னூனங்க ளதிகமாமாறு யாங்ஙன மெ னின்? அதுவருஞ்செய்யுளிற் பெறப்படும்.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

---

மீமாங்கிசன் கன்மமலமோ சடம், ஆன்ம வறிவல்லோ தானசெய்த கன்மத்தைத் தானறிந்து கூடிப் புசிக்கும், ஆகை யால் கர்த்தா வேண்டுவதில்லையென்று சொல்ல; கன்மத்தைச் செய்து கன்மத்தைப் புசிப்பிக்கையினாலும், ஆன்மா பாசசம்ப ந்தியா யிருக்கையினாலும், கன்மத்தை யறிந்து புசிக்கமாட்டா ன். கர்த்தாவே யறிந்து கூட்டவேணுமென் றருளிச்செய்கிறார்.

உலகுடல் கரணங்கால முறுபல நியதிசெய்தி பலவினை கொண்டுகனமம் பண்ணுவ துண்பதாலுல் - அந்தக்கன்மங்களு க்குத் தக்க புவனங்களும அந்தச் சரீரங்களும அந்தக் கரணங் களும் காலதத்துவமும பொருநதத தகக சாலவிஷையங்களு ம் கனமத்துக கிடாக வேருமல் குறைடாமல் புசிப்பிக்கிற நி யதிதத்துவமும் செய்யபபடட தொழில்களும் எனறு இபபடி பல இவையிறரையுங் கூடிநினறு ஆனமாக கனமங்களைச செய் து புசிப்பிபபதாலுல் இவை கூடுகிறபடியை விசாரிக்கில்,—நில விடா திவைதாஞ்செனறு - கன்மஞ் சடமானபடியாலே தா ஞகசசெனறு ஆனமாவைப் பொருநதமாடடாது. கனம மல மல்லோ சடம், ஆனம வறிவே ஆனமாவறிந்து இவை யிற்றைக கூடுமெனறு நீ சொல்லில?— நினைநதயிா நிறுத்திக் கொளளா - ஆனமா தனக்கெனன வறிவில்லாதபடியாலே தாஞக விவை நமககுள்ள தல்லோவென றறிநது கூடடிக் கொள்ளமாட்டாது. ஆஞலிவையிரண்டுங் கூடிக் காரியுப்படு கிற முறைமை யெப்படியெனனில்?—அலகிலா வறிவனுணை ய ணைதிடு மருளிஞலே - எணணிறநத ஞானத்தையுடைய சிவ னதாககினை யிவையிற்றைக் கூடடிக் காரியப்படுத்தும் தனது காருண்ணியத்திஞலே.

நிலவிடா திவைதாஞசெனறு நினைநதுயிர் நிறுத்திக்கொ ள்ளா வெனறது மீமாங்கிசன. இதற்குப் பிரமாணஞ் சிவஞா னபோதம் "அவ்வினையைச செய்வதனி லவ்வினைஞா தாஞ்செ ன்றங், கவ்வினையிற் காநத பசாசம்போ—லவ்வினையைப், பே ராம லூட்டும் பிரானி லுகாரோ, லார்தாமறிந்தணைப்பாராங் கு., எனனுமதுங் கண்டுகொள்க.

சிவஞானபோதம் - உ - சூ, கூ - வெ.

இதஞற் சொல்லியது கன்மஞ் சடமானபடியாலும் ஆ ன்மாத் தனக்கென்ன வோரறிவில்லாத படியாலும் இவை தா

னாக வொருசரீரத்தை யெடுக்கவுங் கன்மத்தைச் செய்யவு மா
ட்டாதாகையால் பரமேஸ்வரன் தனது காருண்ணியத்தி
லே இவையிற்றைக் கூட்டிக் காரியப் படுத்துவனென்னு முறை
மை யறிவித்தது.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

—o—

உலகு - வினைமுதற்காரகமாகியவுயிர்,—உடல் - இடமாகி
யவுடலும்,—கரணம் - கருவிகளாகியகரணமும்,—காலம் - மு
க்காலங்களுளொன்றாகியகாலமும்,—உறுபலம்-செயப்படுபொ
ருளாகிய பொருந்தியபலமும்,—நியதி - இன்னதற்காக இதுப
யனாகவெனப்படுவைகளாகிய நியதியும்,—செய்தி - செயலாகிய
செய்தியும்,— பலவினைகொண்டு - ஆகியவேழுகாரகங்களுந்
தனக்குத் துணையாகக்கொண்டு,— கன்மம்பண்ணுவ துணர்தா
னால் - வினைகளையீட்டல் நுகர்தலுமுடைத்தென்பது எல்லார்
க்கு மொப்பமுடிந்ததாமையின், — சென்றுநிலவிடா வினைதான் -
உயிராயினறியமைந்து தொழிற்படமாட்டாத சடமாகியஅக்
காரகங்களாதல்,—நினைந்துநிறுத்திக்கொள்ளாதுயிர் - அவற்
றையின்றி யறியமாட்டாத சிற்றறிவுடைய அவ்வுயிராதலுமே
கூடமாட்டாமையிற் பாரிசேடஅளவையானே,—அலகிலா அறி
வன் - அளவிட்டறிதற்கரிய சுதந்தர அறிவனாகியமுதல்வ
னே,—ஆணை அருளினாலே-தனதாணையாகிய திருவருளால்,—அ
னைத்திடும்-அவற்றையவ்வுயிர்க்குப் பொருத்திச் செய்விப்பனெ
ன்பது பெறப்படுதலி னவன்செயலெல்லாம் அவன்பணி
யேயாம்.

---

## மறைஞானதேசிகர் உரை.



ஆதலா லானமாககளுக் கனுககிரகஞ் செய்தற்பொ

ருட்டு நல்வினை யாரச்சிப்ப துணாதநகிறூர்

ஒழுககமன பருளாசார முபசார முறவுசீலம், வ ழுக்கிலாத தவநதானஙகள் வநதித்நல் வணஙகலவா ய்மை, யழுககிலாத் துறவடகக மயிவொடர்ச் சித்த லாதி, யிழுக்கிலா வறயகளாறு லிரஙகுவான பணியற ஙகள். (உகூ)

(இ - ள) ஒழுக்கம் — தத்தஞ் சாதிககேற்ற வாசாரத்தட னடததல். அஃதாவது, சாததுவிக பாவத்தையுடையது.

அன்பு — சிவனிடத்து வைதத பததி

அருள — எல்லாரிடததும வைதத கிருபை

ஆசாரம் — வேதாகமஙகளிற கூறியவற்றை யனுட்டித்தல்

உபசாரம் — பெரியோரிடத் தனககியனற யாதானுமோ ருபசாரஞ் செயல்

உறவு — பெரியோ ரிடததில் வைதத மிததிரபாவம

சீலம் — ஒருநெறிப்பட்ட நல்லறிவு "ஞானமுஞ் சீலமு நல்லறிவாகும்,,

வழுக்கிலாத்தவம் — இநதிரிய விடய மிவற்றினவழி செலுத்தாது கிருச்சிர சாநதிராயண முதலிய விரதங்களை யனுட்டிக்கை

தானங்கள் — சற்பாத்திரத திடத்திற் பொருளைச் செலுத்துவது.

உத்தமாதி பேதத்தான் மூவிதப்படும்.

அவையாவன?" பெரியோ ரிருக்குமிடந் தேடிப்போய்த் தன க்கியன்றது கொடுத்த லுத்தமம.

சற்பாத்திரத்தைத் தன்வாய்தலி லழைப்பித்துக் கொடு த்தல் மத்திமம்.

பாத்திரவான் றனனே வந்து கிட்டிக்கேட் டிருக்கையினு மின்று நாளையென்று கண்ணழித்துப் பின்பு கொடுக்கை யதமம்.

வந்தித்தல் — பெரியோர் முதலாயினுரைத் தோத்திரஞ் செய்தல்

வணக்கம் — தான வணங்குதற் குரியாரை வணக்கஞ் செய்தல்

வாய்மை — ஒருக்காலுந் தவறுசொல்லாது சத்தியமே சொல்லுதல்

அழுக்கிலாத் துறவு — "ஏந்திழையார் தஞ்சயனத் தெய்தித்தன மெய்தொடினுங், காய்ந்துவாதத லேதுறவுகாண" எனனுந் துறவு

அடக்கம் — தவங்குல நிலைமைகல்வி முதலியவற்று லுண்டாகுஞ் செருக்கறுத்தல்

அறிவோர்ச்சித்தல் — ஆகமத்தை யோதி யதனவழி தவருது பூசித்தல

ஊதி — அக்கினி காரியங் கபிலபூசை சிவாலயசேவை முதலாயின

இழுக்கிலா வறங்க ளானவிருக்குவான் பணியறங்கள் — இவைகளெல்லாங் குற்றமற் றிருக்குமாகிற் சிவனைக்குறித்துச் செய்யிற் சிவதன்மமேயா யவன தனுக்கிரகத்துக் கேதுவாம். எ-று. (உக)

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

—o—

ஒழுக்கம்-குலதருமம் வழுவாமை,—அன்பு-மாதாபிதாக்களிடத்தில பத்தி,—அருள்-சர்வபூததயை,— ஆசாரம்-வர்ணாச்சிர+மோசிதமான சௌசாசமநஸ்நாநாதிகள்,—உபசாரம்-அதிதி‡சத்காரம்,—உறவு-ஞாதிமுதலான பந்துக்களிடத்திலே சிநேகம்,—சீலம்-சாத்விகபாவம்,— வழுக்கிலாத் தவந்தானங்கள்-நியமித்த விரதம் விடாததபசு திரவியசுத்தியும் சிரத்தையுமுடையதானங்கள்,—வந்தித்தல் வணங்கல்-பெரியோர்களிடத்திலே §நைச்சியம் பகர்தல்,—வாய்மை-சத்தியமே சொல்லுகை,—அழுக்கிலாத் துறவு-மனம்பற்றில்லாத சன்னியாசம்,—அடக்கம்-குலதன வித்தி †யாதிக்கத்தால் லங்காரமன்றி ×விநயபரனாயிருக்கை,—அறிவோடர்ச்சித்தல் - பூசா ¶விதானத்தை நன்றாகவறிந்து பூசைபண்ணுதல்,— இழுக்கிலாவறங்களானவ்-இவ்வாறு குற்றமிலாத தருமங்களைப் பண்ணினால்,—ஆதி-பரமேசுவரன்,—இரங்குவான் பணியறங்கள் - நாமிட்ட பணியாகிய தருமங்களைப்பண்ணினுனென்று கிருபைபண்ணுவானென வறிக.

+ உசிதம் - தக்கது, ‡ சத்காரம் - பூசித்தல், §நைச்சியம் - தழுவு, † ஆதிக்கம் - மேன்மை, ×விநயபரன் - வணக்கமேபிரதானமாகவுடையவன், ¶ விதானம் - விதி.

—

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—o—

**தேவதாப் பிரசாதத்தினாலே சகலமும் வருவதென்று கூறுகின்றார்.**

ஒழுக்கம்-அகதந்த சாதியாசாரம் வழுவாது நடத்தல்,—அன்பு - மாதா பிதா குரு தேவதாபத்தி,—அருள் - சர்வான்மாக்களிலும் வைத்த விரக்கம்,—ஆசாரம்-வருணாச்சிரமங்களுக்கேற்ற சௌசாசமனாதிகள்,—உபசாரம் - அதிதி சமஸ்காரம்,—உறவு-ஞாதி முதலான பந்துக்களிடத்தி லே சினேகம்,—சீலம் - ஒரு நெறிபடப் பிறரையுபகரிக்குங் குணம்,—வழுக்கிலாத்தவம் - சாந்திராயண முதலிய நியம விரதம்,—தானங்கள் - சற்பாத்திரத்திற் றனதேடிய பொருளைச் செலுத்தல்,—வாழ்த்துதல் - குரு ஜனங்களை நமஸ்கரித்தல்,—வணங்கல்- பெரியோரிடத்தில் தாழ்ந்த தன்மை காண்பித்தல்,—வாய்மை - உள்ளது சொல்லுதல்,—அழுக்கிலாத் துறவு - சர்வசங்க பரித்தியாகம்,—அடக்கம் - குலங் கல்வி நிறைவாயிருந்தாலும் காயமடங்கியிருக்கல்,—அறிவோ டர்ச்சித்தல்-அவரவர் சாத்திர சூத்திரங்களின் படியவரவர் கொண்ட தேவதையைப் பூசித்தல்,—ஆதி-இவை முதலானவை,— இழுக்கிலா வறங்களானால் - குற்றமற்ற கன்மங்களாகச் சாத்திரங்கொண்டு நிச்சயிக்கப்படுமானால்,—இரங்குவானபணியறங்கள் - பரமேசுரன கற்பித்த புண்ணிய கன்மங்கள்,இவற்றிற்கு மாறாய் வருவன பாவகன்மங்கள்.

## சிவஞானயோகியருரை வருமாறு.

ஒழுக்கமுதலிய பதினாறும் மற்றுமவைபோல்வனவுமாகிய நன்மைகள் ஒருவனுக்குளவாயின, இரங்குவானது பணியாகிய அம்முயற்சி அறமாய் முடியுமென்பதாம்.

எனவே, இவ்வொழுக்க முதலியவற்றை மறுதலைத்த தீமைகள் ஒருவனுக்குளவாயின், அம்முயற்சி பாவமாய் முடியுமென்பதூஉம் பெற்றாம்.

ஒழுக்கமென்றது ஈண்டு உலகத்தோடொட்ட வொழுகுதலை.

ஈண்டுத் துறவென்றது எல்லாநிலையினுஞ் சேரற்குரிய பிறர்மனை விழையாமை, வரைவின்மகளிர்விழையாமைமுதலிய.

ஆண்டகைமையே யென்றுணாததுவார், அழுக்கிலாவென விசேடித்தார.

அறிவாவது தக்கனவுந் தகாதனவும் பகுத்தறிதல்.

"இனமலர் கையிற்கொண்டங் கிச்சித்ததெய்வம் போற்றி,, என முனவருதலின, ஈண்டுவந்திதகல் வணஙகல் ஆசசிதக லென்பன தனனின மூததார்மாட்டுச செய்வனவற்றை யெனக்கொள்க.

ஓடு எண்ணின்கண் வந்தது.

இவ்வொழுகக முதலியவெல்லாம் இயமநியமமென்னும் இருவகையுமடஙகி அறஞ்செப்வார்க் கெல்லாம் பொதுவகையான வேண்டப்படுமங்கமாகலின, இவற்றை வேறெடுத்தோதினார்.

---

## நிரம்பவழகியருளா வருமாறு

—0—

இப்படி சொல்லப்பட்ட புண்ணியபாவ மிரண்டிலும் புண்ணியததின் முறைமை யெப்படியென்ற மாணுககனுககு, புண்ணியம் சிவபுண்ணியமென்றும் பசுபுண்ணியமென்று மிரண்டாயிருக்கும்? இநத விரண்டிலுஞ் பசுபுண்ணியத்தின முறைமை யருளிச்செய்கிறார்.

எப்பொழுதுமோ ரொழுங்காய் நடக்கையும், பத்தியும், இருடையும்; அனாசாரங்களன்றி யாசாரமும், நல்லோர்க ளிடத்திருக

ருக

லுபசாரமும், அயிக்கமும், சாத்துவிகமான குணமும், தவறுப டாமல் எப்பொழுது மொருதன்மையாயிருக்கிற தவசும், சாத் திரஞ்சொன்ன முறைமையிலே கொடுக்கப்பட்ட தானமும், வழிபாடுசெய்கையும், சிவனடியாரை அட்டாங்க பஞ்சாங்க மாகத தண்டனை பண்ணுகையும், அசத்தியமின்றியே சத்தியஞ் சொல்லுகையும்; சற்றுங் குற்றமில்லாத துறவும், யானெனத ற் றிருக்கிற வடக்கமும, பிரஞையுடனே பூசிக்கையும் என்று சொல்லப்பட்ட விவைமுதலான குறறமில்லாத தன்மங்களை யிப்படி சொன்ன முறைமையிலே செயவனுகில், அது சர்வரிட த்திலு மனுக்கிரகஞ் செய்யபபடா நின்ற பரமேஸ்வரனாலே ய ருளிச்செய்யப்பட்ட சிவபுண்ணியமாம்

இதனாற்சொல்லியது, இங்ஙனஞ் சொல்லப்பட்ட வொழு க்கமுதல் சிவபூசை யீருக விந்தவாசாரத்தை யனுட்டிக்கிறது பரமேஸ்வரனாலே யருளிச் செய்யப்பட்ட பசுபுண்ணியமா மென்னு முறைமை யறிவித்தது.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

——o——

ஒழுக்கம் - உலகத்தோடொட்ட வொழுகுதலுடைமையு ம்,—அன்பு - யாவரிடத்துங் காதலுடைமையும்,—அருள் - யா வரிடத்துங் கருணையுடைமையும்,—ஆசாரம் - வேதாகமங்களி ன் விதித்தவாறனுட்டித்த லுடைமையும்,—உபசாரம் - தக் கோர்மாட்டுச்செய்யு முபசரிப்புடைமையும்,— உறவு - யாவரிட த்துங் கலப்புடைமையும்,—சீலம் - நற்குணமுடைமையும்,—வ ழுக்கிலாத்தவம் - வழுவுதலில்லாத வைம்பொறியடக்கல் விரத மகாத்தல் முதலியதவமுடைமையும்,—தானங்கள் - தக்கோர்

ரிடத்து வகையோடுசெய்யுந் தானங்களுடைமையும்,—வந்தித்தல் - தன்னின்மூத்தார்மாட்டு வழிபாடுடைமையும்,— வணங்கல் - தன்னினமூத்தார் மாட்டு வணங்குதலுடைமையும்,—வாய்மை - மெய்மையுடைமையும்,—அழுக்கிலாத்துறவு - குற்றமிலாத பிறர்மனையவாமை வரைவின்மகளிர் விழையாமைமுதலிய வாண்டகைமையுடைமையும்,—அடக்கம் - தீநெறிக்கட்செல்லாதடங்குதலுடைமையும்,—அறிவு - தக்கனவிவை தகாதனவிவையெனப் பகுத்தறிதலுடைமையும,— அர்சசித்தலாதி - தன்னின்மூத்தராமாட டர்சசித்தலுடைமையுமாகிய பதினொரு ம்,'ற்றுமவைபோல்வனவுமாகிய,—இழுக்கிலாஅறங்களானும்- குற்றமில்லாத நன்மைகள ஒருவனுக்குஙவாயின,— இரங்குவான்பணி - இரங்குவானது பணியாகிய வம்முயற்சி,—அறங்கள - அறமாய்முடியுமெனபதாம.

---

## மறைஞானதேசிகர் உரை.



மேற்றெருத்துபபோந்த சிவனை வழிபடவே, புத்தியு முத்தியு முண்டென றுணர்த்துகிறா.

மனமது நினையவாக்கு வழுத்தமந் திரங்கள்சொல்ல, வினமலர் கைபிற்கொண்டங் கிச்சித்த தெய்யவம்போற்றிச், சினமுத லகற்றிவாழுஞ் செயலற மானல்யார்க்கு, முனமொரு தெய்வமெங்கு செயற்குமுன் னிலையாமன்றே. (உச)

(இ-ள்.) மனம மனதானது வேண்டியதொரு வடிவை நினைய வா தியானிக்க, வாக்கானது தோத்திரஞ்செய்க்கு வழுத்த ய, மந்திரங்களை யுசசரிக்க,காயமானது கை

மந்திரங்கள் சொல்ல வினமலர் கையிற்கொண்டங் கிச்சித்த தெய்வம போற்றி — யிலே பலவாகிய மலரைக்கொண்டு தான்வழிபடுந தெய்வத்தையருச்சனைசெய்து,

சினமுதலகற்றி வாழுஞ்செயலறமானல் — காமக்குரோத முதலியவற்றை விட்டு,கா டோறும வழிபடவே, அபபொழு தஃதெல்லாஞ் சிவதனமமேயாப் போகமோட்சங்களை யடைவி லடைவிப்பிககுமானால்,

யார்ககு முனமொரு தெய்வமெங்குஞ் செயற்கு முனனிலையாமனறே. — சாயதேவாகளுககு மேலாய சர்வகர்த்தாவுமாயிருக்கிற சிவனே யாதொருவர் காமிதத பலஙகளைக் கொடுப்பதற்கு முனனிற்பன. எ - று.

யாதொருவன யாதொரு தெய்வத்தை யிட்டகாமிய பலத்தைக் குறிதது வழிபடுகையால்; இச்சித்த தெய்வமெனச் சிறப்பிததா ரெனவறிக. (உச)

---

## சிவாக்ரயோகியருரை வருமாறு.



மனமது நினைய வாக்குவழுதத மநதிரங்கள்சொல்ல வினமலர் கையிற்கொண் டங்கிச்சித்ததெய்வம் போற்றிச் சினமுதலகற்றி வாழுஞ்செயலறமானல் - காமக்குரோதம் முதலானவைகளைத் துவிர்கது,மனசிலே தியானித்து,வாக்கினலே மந்திரங்களைச் சொல்லிவாழ்த்தி,¶ சுவேதாதி புஷ்பங்களைமிச்சிரம்பண்ணுமல்† தத்தத்வர்க்கங்களையே கையிற் கொண்டு அவ்வி

டத்துத் தனக்கு இஷ்டதேவதையை பூசித்துவாழுந் தருமமி ரியைக்கு,—யார்க்கு முவமொரு தெய்வ மெங்குஞ்செயற்கு மு னவில்லாமன்றே - எல்லாத் தேவர்களுக்கு முனனேனாகிய ஒ ருவனே ருதிரனென்று வேதங்கள்சொல்லுமகாதேவனே § உ த்தேஸ்யனாக நின்று பலத்தைக் கொடுப்பன

¶சுவேதம் - வெள்ளை.

×ததத்வர்க்கம் - அந்தந்தகூட்டம்

†உத்தேஸ்ய - முககிரன.

சுவேதாதி புஷ்பங்களை மிச்சிரம்பண்ணுமலென்றதற்கு ச ம்மதி

காமிகே — ஸ்வேதபுஷ்பஞ்சதுர்வேதாநாம் ... [illegible]

ஞானப்பிரகாசருரை வருமாறு.

—o—

ஆகையாலவரவாகொண்ட தெய்வம் அவரவர் செய்யுங் கன்மங்கட்கு முனனிலையாய் நின்று பலங்கொடுக்கும், கன்மந் தானாய்ப் பலங்கொடாதென்று சாற்றுகின்றார்.

வெளிப்பொருள்.

சிவஞானயோகியருரை வருமாறு.

—o—

அவ்வொழுக்கமுதலிய நன்மைகளையுடையனாய் அவற்றை மறுதலைத்த தீமைகளை நீக்கியொழுகுவா னொருவனுக்குத் தன்

கருத்திற் கியைந்தொரு கடவுளை மனமொழிமெய்களான் வழிபட்டு வாழுஞ்செயலாகிய அறமுமுளதாயின, முன்னைப்பழம்பொருட்கு முன்னைப்பழம்பொருளாகிய சிவபிரானே அத்தெய்வத்தினிடமாக நின்று அச்செயலைபேற்றுக்கொண்டு பயனுதவுமெனபதாம்.

போற்றி வாழும செயலென வினையும்.

அகாறியெனபது பெயர்.

அகற்றிக்கென்று னானகனுருபு விகாரத்தாற் றொக்கது. சினமுதலகறறுதல் கூறவே ஒழுக்க முதலியன வுடைமை பெற்றும்

மேற்கூறிய வொழுக்க முதலிய வங்கங்கட்கு ஈண்டுகூறியவறம் அங்கியாகலின உடனெடுத்தோதினர்.

அற்றேல், வழிபட்டார்கரு வழிப்படப்பட்ட அவ்வத்தெய்வமே பயனகொடுக்கு மெனமுற்படும் இழுக்கெனனை யெனபாரை நோக்கியெழுந்தது வருளுசெய்யுளெனபது.

---

## நிரம்பவழகியருளா வருமாறு.

முனசொல்லப்பட்ட பசுபுணணியங்களு மனவாக்குக் காயங்களினுலே யுண்டானது, இபபொழுது சொல்லப்பட்டசிவ புண்ணியங்க ளுண்டாமபடி யெப்படியெனற மாணுக்கனுக்கு; அதுவு மனவாக்குக காயங்களினுலே யுண்டாமெனனு முறைமை யருளிசசெய்கிருர்.

**மனமது நினைய - மனமானது பரமேஸ்வரனுடைய திருவடியை நினைக்க,— வாககுவழுத்த மகதிரங்கள் சொல்ல - வாயானது தோத்திரங்களைச் செய்யவு மந்திரங்களை சபிக்**

கவும்,—இனமலர் கையிற்கொண் டங்கிச்சித்த தெய்வம்போ ற்றி - காயமானது பலதிருப்பள்ளித் தாமங்களைக் கரத்தினு லே யெடுத்துக்கொண்டு தாங்கள விருமபப்பட்டதொரு தெய் வத்தைப் பூசித்து,—சினமுதலகற்றிவாழுஞ் செயலற மாறு ல்-கோபமுதலான பொல்லாத தொழில்களெல்லாம் போக்கி கனமையுடனே கூடிககொண் டிருக்கிற முறைமைகளெல்லா ம் தனமமாகையினுல்,— யார்க்கு முனமொருதெயவ மெங்கு ஞ் செயற்கு மூனனிலையாமனறே - சாவாக்கும அநாதியே யொவவொரு தெய்வம எவவிடததிலு மவாகள தொழிலுக்கு முனனிலையாம்.

இக்குற சொல்லியது கோபமுதலாயுள்ள பொல்லாத தொழில்களை விட்டு மனவாக்குக காயங்களினுலே தஙகளுக குப் பிரியமான தொருதெய்வததை நினைததும வாழத்தியும் வணஙகியும் ஆராசிக்கவேணுமெனகிற பாககியததை யுடைய வர்களுககு, அவரவர் பககுவததுககுத் தககதாக ஒவவொரு தெய்வம் எவவிடததிலு மவநத முனனிலையாமெனனு முறை மையறிவிததது.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

—o—

சினமுதலசற்றி - அவ்வொழுககமுதலிய ஙனமைகளையு டையவு யவற்றைமறுதலைதத தீமைகளைநீககி பொழுகுவா ரொருவனுககு,—இச்சித்ததெய்வம் - தனகருத்துக் கியைந்த தொருகடவுளை,—மனமதநினைய - மனததாலினையவும்,—வா க்குவழுத்த மந்திரங்கள்சொல்ல - வாக்காற்றுதிக்கவும மந்தி ரங்கள்சொல்லவும்,—கையி னமலர்கொண்டு போற்றி - கை

களா லினமாகிய மலர்களைக்கொண் டர்ச்சித்து வணங்கியும்,— வாழுஞ்செயலறமாஞல் - வழிபட்டுவாழுஞ் செலாகிய அறமு முளதாயின,— யாதசுமுனமொரு தெய்வம்-யாவர்க்குமுன னைப் பழம்பொருட்கு முனனைப்பழம்பொருளாகிய சிவபிரா னே,— எமக்குஞ்செயற்கு முனனிலபாமனறே - அத்தெய்வத்தி னிடமாகநின்று அச்செயலையேற்றுக்கொண்டு பயனுதவுமென பதாம்

## மறைஞானதேசிகர் உரை.

பஞ்சராத்திரி யுரைத்துசிவன முத்திகொடுக்க வே
ணடுவதில்லை, எமது புருடோத்தமனே
யெனன, மறுத் துரைத்தறறு

யாதொரு தெயவங்கொண்டீ ரத்தெயவ மாகியங்கே, மாதொரு பாகனுர்தாம் வருவர்மற் றத்தெய் வங்கள், வேதனைப படும்மிறக்கும் பிறக்குமேல் வினை யுஞ்செய்யு, மாதலா லிவைபிலாதா னறிந்தருள் செய வனன்றே. (உரு)

(இ-ள்) யாதொரு தெய்வங்கொண்டீர் தெய்வமாகியங்கே மாதொரு பாகனுர் தாம் வருவர் — சிந்தாமணியான தொன்றாயிருக்க, யாதொருவன காமிதத்தையெல்லாம் கொடுக்கிறது போல, சாதகனானவனந்தெந்தத் தெய்வத்தை மனதினுகன் னினைத்துக்கொண்டு வழிபட்டான,அந்தந்தத் தெய்வமாகி யவவிடத்துப் டாரவதியாரை யொருபக்கத்திலே யுடைய தம்பிரானுர் தாமே யவர்களவர்க ளகோட்பாட்டுக் கேற்ற மூர்த்தியாய் வந்திருந்து பலங்களைக் கொடாநிறபர்.

இவர் கொடுக்கவேண்டுமோ அந்தந்தத் தெய்வங்களா ளே யவர்க ளவர்களுக்கேற்ற பலத்தைக் கொடாதோவென் னில்?

மற்றத் தெய்வங்கள் — வேறே தெய்வமுண்டென்று நீ சொல்லு கிற தெய்வங்களெல்லாம

வேகனைப் படு மிறக்கும் பிறக் கு மேல் வினையுஞ் செய்யும் — பிருகுமுனி சாபத்தினாலே நாசாவதார மெடுத்ததற்பொருட்டு சரீரத்தை யெடுத்து க் கிலேசமுற்றுப் பின்புஞ் சகாத்தை யெடு த்துக் கனமபலத் தொலைத்தவாறே மரணத் தையு மடைவே பொருந்தி மேலுமொரு பு ணணியங்களையும் பண்ணுகிற்கும.

ஆதலா லவை யிலாதா னறிந்து ளை புரிவனனரே — இப்படி சனித்து மரித்து வருகையினு லே தூறறத் தனக்கொன்று மில்லாத பர மேசுவரனை யறிந்து வழிபடவே சாவான மாகளுக்கு மனுக்கிரகியா நிற்பன. எ-று.

இதற்குக காமிகமனறிச சாவசுரோத சாரசங்கிரகந்து ங் காசிகபுராணத்து மறிக (உரு)

---

## சிவாக்ரயோகியருளாவருமாறு.

———o———

வேதத்தி லிந்திராதிபான அநேகதேவர்களை யர்ச்சிக்கச் சொல்லியிருகக இவ்விடத்து நீசிவனொருவனே உதகே ஸ்யனென்று சொல்லுவானேனென்று பண்ணுஞ் சங்கைக் கு த்தரம்.

யாதொருதெய்வங்கொண்டீர் ரத்தெய்வமாகி யங்கேமா தொரு பாகனுர்தாம்வருவர்-யாதொரு தெய்வத்தை உத்தேசி

த்துக்கொண் டர்ச்சிக்கிறீர் அந்ததெய்வத்தை சிவன்தம்முடைய சமவாயசத்தியினாலே அதிஷ்டித்துநின்று அந்தப்பூசையைக் கண்டு பலத்தைக்கொடுப்பர் அந்தபூசிக்கப்பட்டதெய்வமோ வெனனில்?— மற்றத்தெய்வங்கள வேகனைப்படு மிறக்கும் பிறக்குமேல்வினையுஞ் செய்யும் - பரமேஸ்வரனே யல்லாத தெய்வங்கள ஒவ்வொருகாலத்திலே துக்கங்களையும் அநுபவிக்கும், இறப்பதும பிறப்பதுஞ் செய்யும், பிறந்ததனமே லிருவினைகளையுஞ் செய்யும். ஆதலால்,— இவையிலாதா னறிந்தருள் செய்வனன்றே - ஆகையினாலே சுகதுக்கமும் பிறப்புமிறப்பும் புண்ணியமும் பாபமுமில்லாத பரமேஸ்வரனே இவன்செய்த பூசையை யறிந்து பலத்தைக் கொடுப்பன். அந்தபிரமேந்திராதி தேவர்களும சிவனையே யாசசிப்பார்கள். அந்தசிவனே பிரதமோதேஶ்யன.

தது³க்தம் [illegible] ஶிவகீ³தாயாம் —
ஸோஹம் தா⁴தா விதா⁴தா ச [illegible] ததா
[illegible] | [illegible] ||
[illegible] |
[illegible] ||
[illegible] |
[illegible] ||
[illegible] | ஸுக²ம் ஹி ஸர்வயஜ்ஞாநாம்
[illegible] || ஸர்வ [illegible]
[illegible] ஸர்வஸம்ஸித்³தி⁴ [illegible] |

தேவிகாலோத்தரே ச — [illegible]

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—o—

பரமேசுரன கர்ததாவென முனபடித் திப்போது பிரமா விஷ்ணு அருகதேவதை பௌளததேவதை இநதிரன சந்திரன சூரியன முதலுளளோரில, ஓரொரு காததா ஓரொருவர்ககுககுக கனம சாக்ஷியாயக கனமபலத்தைக கொடுப்பானென று சொல்லிபதேதெனன, ஏவுதற்காததா இயற்றுதற கர்ததா வென்னு முறைமையினுற் சொல்லியதென்று சொல்லுகின்றுர்.

வேதனைப் பசிம பிறககு மிறககு மேல்வினையுஞ செய்யும எனறது, பிரமாதிசளுககுத தாஙகளிருநத தானததுககு ஊர்த்துவகதியனறி யதோகதி யில்லாமையா லவர்ககு ளற்பதெய்வங்க ளொனறுபொருள்.

மற்றதுவெளிபபொருள்.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

—o—

நால்வகை யோனியுள் ஒருயோனிவாய்ப்பட்டுப் பிறப்பனயாவை, அவையெல்லாஞ் சேவர்க்கம். அவ்வாறு பிறத்தலில்ல

துயாத அதுபதிப்பொரு ளென்று மிதுவென்றே ஏனைச்செயல் களான வேறறுமையறிய வாராத வவ்விரண்டற்குந் தம்முள் வேற்றுமையறிய நிற்பகாகலின, ஏனைத தேவரெல்லாம் அங்ஙனம் பிறநதிறததல் கேட்கபபடுகலானும, சிவனொருவனே வினையததனுகலினறி அவவததேவரிடமாக நினறு உயிர்கட்கு அவற்றையறிந்து கூட்டவலலுவன, ஏனைததேவா அதுசெய்ய மாட்டாரெனபது தானேபோதருமெனபதாம.

மற்று வினைமாற்று

பொதுவகையானெடுத்துக காட்டிச் சிறப்புவகையாற் கூறினாராகலிற் பால்வழுவினமையுணர்க

அர்றேல ஒருவரை வழிபட மற்றொருவர் பயனகொடுத்தல் உலகத்திற் கண்டிலமெனபாரை நோககி அது காட்டுதரகெழுந்தது வருஞ்செய்யுளெனபது.

---

## நிரம்பவழகியருரை வாருமறு.

---o---

இம்படி சொல்லப்பட்டிருக்கிற தெய்வங்களைப் பூசித்தால் அந்தநந்தெய்வங்களதானே முத்தியைக்கொடுக்கும, பரமேஸ்வரன வேண்டுவதில்லை யெனற பஞ்சராத்திரியை நோக்கி யருளிச்செய்கிறா.

யாதொரு தெய்வங்கொண்டீ ரத்தெய்வமாகி யங்கு மாதொரு பாகனூர்தாம் வருவர் - எந்தெந்த தெய்வமாகிலும உங்களுக்குப பிரியமானதொருதெய்வததைக கர்த்தாவாக கொண்டு வழிபடுகிறவர்களே அநதநதத தெய்வங்களாகி, எல்லாவிடத்திலும் பரமேஸ்வரியை யொரு கூறாகவுடைய தம்பிரானூர் தாமே யெழுந்தருளி வாராநிற்பர். முன்சொல்லப்ப

ட்ட தெய்வங்களோ வென்னில்?—மற்றத் தெய்வங்கள் வேத னைப்படு மிறக்கும் பிறக்கு மேல்வினையுஞ்செய்யும் - முனசொல் லப்பட்ட வநதத் தெய்வங்களெல்லாமு கனமத்தக இடாகச் சுகதுக்க வேதனைகளையு மனுபவித்து சநநமரணங்களையு முடை த்தாய் மேலும் புண்ணியபாவங்களையு ம பண்ணுகிறதும் அநா தியே இந்தக்குற்றங்களை யுடைய தெய்வங்கள் தங்களை வழி பட்டவர்களுடைய பக்குவா பக்குவங்களை யறிந்து சநநமரண ங்களைப் போக்கமாட்டாது —ஆதலா லிவையிலாதா னநிந்த ருள செய்வனன்றே-அப்படி யிருக்கையினாலே யிங்ஙனஞ்சொ ல்லப்பட்ட குற்றங்களெல்லாந் தனக்கிலாத பரமேஸ்வரன ஆன்மாக்களுடைய பக்குவா பக்குவங்களைத் தானே திருவுள ளத்தை—த்து அனுக்கிரகஞ் செய்யாநிற்பன.

இதனுற சொல்லியதற்குப பிரமாணம காளததிபுராணம் "இவரோ மூன்றேவ ரெல்லார்க்கு மிக்கா, ரிவரல்ல வெனறிரு க்க வேண்டாங்—கவருமே, காதலித்தொன் றேத்துகிறோ காளத்தி யாளவாரீ, ராதரித்த தெய்வமே யாம்." என்னு மது ங் கண்டுகொள்க.

இதனுற் சொல்லியது ஆன்மாக்கள் தங்கள் தங்கள் போ தத்துக்குப் பொருந்தினதொருதெய்வத்தை வழிபட, அந்தத் தெய்வங்கள் தானேயா யங்கங்கே பரமேஸ்வர நிற்பனென்று ம், அந்தந்தத் தெய்வங்களுக்குச் சுகதுக்கவேதனையுஞ் சநநமர ணமு முண்டா யிருக்கையாலே தங்களை வழிபட்டவர்களை ய றிந்து அனுக்கிரகிக்க மாட்டாதென்றும், பரமேஸ்வரன் தன் னை வழிபட்டவர்களை யறியே மற்றுள்ள தெய்வங்களை வழி பட்டவர்களையு மறிந்து அனுக்கிரகஞ் செய்வனென்று முறை மையு மறிவித்தது.

—

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

(நால்வகையோனியு ளொருயோனியினவாய்ப்பட்டுப் பிறப்பனயாவை, அவையெல்லாஞ் சீவவாககம் அவவாறு பிறத்தலில்லாதது யாது, அதுபதிப்பொருளென்று மிதுவெனறே ஏனைச் செயல்களான வேறுபாடையறிய வாராத அவ்விரண்டற்கு நதம்முள்வேற்றுமையறிய நிற்பதாகலின)—மற்றத தெய்வங்கள்-ஏனைததேவரெல்லாம்,—வேதனைப்படும்-வேதனையுறுறு,—இறக்குமபிறக்கும-இறத்தலுமபிறததலும,—மேல்வினையுஞ் செய்யு மாதலான-வினைசெய்தலுங் கேட்கப்படுதலானும்,— இவையிலாதான-சிவனுககவையுனடெனபது யாண்டனுங கேடகப்படாமையானும்,—மாதொருபாகனுர்தாம-சிவனொருவனே வினையயத்தருகவினறி,—யாதொருதெய்வங்கொண்டீர் - நீரியாதொருதெய்வததைப் பொருளாககொளளினும,—அததெய்வமாகியாங்கே வருவர்,—அவவததேவரிடமாக நினறு,—அருளசெய்வனனறே - உயிர்சடகவற்றையறிநது கூட்டவல்லுவன.

ஏனைததேவரதுசெய்ய மாட்டாரென்பதுதானேபோதரும்.

---

## மறைஞானதேசிகர் உரை.

மேலதற்குக் காரணமிட டுணர்த்துகிருர்.

இங்குநாஞ் சிலர்ககுபபூசை யியற்றின் விவர்களோவந, தஙகுவான் றருவாரன்றே லத்தெய்வ மத்தன்மைககா,ணெஙகும்வாழ தெய்வமெல்லா மிறைவனுணை யினுனிற்ப, தஙகுநாஞ் செய்யுஞ்செய்திக் காணைவைப் பாலளிப்பன். (உசு)

(இ - ள்.) இங்குகாஞ் சிலர்க்குப் பூசையியற்றிஞ லிவர்களோவந் தங்குவான றருவா — யாஞ்சிலர்க் கிவ்விடத்துப் பூசைபண்ணிஞ லிவர்களல்லவே மறுமைக்கண் வந்து பலத்தைத் தருகிறவர்கள.

அன்றே லத்தெய்வ மத்தனைகாண் — இவர்களல்ல வாகையால் நீ சொல்லிய தெய்வமு மம்மரியாதிகாண.

எங்கும் வாழ தெய்வ மெல்லா மிறைவ ஞணையி ஞனிற்பது — எவ்விடத்து முண்டாய பிரமனமுதலிய முப்பத்துமுக்கோடி தேவர்க ளனைவோரு ம் காத்தாவி ஞுக்கினையாகிற சத்தனைய பொருந்தித் தங்கடங்கள் கிருத்தியங்களைச் செய்திருப்பர்கள

அங்கு நா ஞ செய்யுஞ செய்திக்கு ஆணை வைப் பாலளிப்பன. — ஆகலா லிம்மைக்கணனறி மறுமைக்கண்ணும் யாஞ்செய்யும வழிபாட்டுக்கேற்ற பதங்களி லுண்டாய போகங்களைத் தனது சத்தியாலே சிவன பயனைக் கொடுப்பனகாண். எ-று.

ஓகார மெதிர்மறை. (உசு)

---

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

—o—

மேலிதற்குதாரணம்.

இங்குநாஞ்சிலர்க்குப் பூசையியற்றிஞலிவர்களோவந் தங்குவான்றருவார் - இந்தபூமியின்கண்ணே நாம்பிரமஞதிகளுக்குப் பூசைபண்ணிஞல், இவர்களேயோ அந்தஸ்வர்கத்திலே

பலத்தைக்கொடுக்கிறவர்கள்—,அன்றே - அல்லவே. ஆகையா ல்,—அததெய்வமத்தனைககாண்-அநததெய்வங்கள் நாம்பண் ணும பூசையாகிய போகத்தை யனுபவிப்பார்களொருபலததை ககொடுககமாட்டார்கள்,— எஙகுமவாழ தெய்வமெல்லா மி றைவனுணையினுனிறபது-எஙகெஙகே யிருநது பூசை கொளளு கதேவாகளுமதேவஸ்வாமியாகிய சிவனுடைய அதிகாரசக்தி அதிஷ்டிதரா யிருப்பார்கள்,— அங்குநாளு செய்யுஞ் செய்திக் கானை வைபபாலளிப்பன-அவாகளுககு நாமபணணும் பூசைத தொழிலுககு பலததைத தனனுடைய அதிகாரசததியை அநத தேவதைக ளிடததிலே வைததிருககையால் சிவனேகொடு ப்பன.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

எல்லாச் செய்திக்குமசிவனே பரமகாரணமெனப துரை க்கினருர்.

இங்கு - இந்தலோகததில்,—சிலாக்கு - சில பிராமணருக் குச் சிலசஙகமாககு,—காம பூசை யியற்றினுல் - அனனபான தாம்பூலாதிகள் தானமபண்ணினுல்,—இவாகளோவக் தங்கு வானருவார் - இநதபிராமணர்கள சங்கமர்களோ சுவாக்க சிவலோகங்களைததருவார்கள்,—அனறேல் - அல்லவாமென்று சொல்லில்,—அத்தெய்வ மத்தனைககாண் - அநதத தெய்வங்க ளுந்தமரியாதி காண். அஃதெப்படிச் சொனனீர், இவ்வுலகத்தி ல் ஐயன் தர்க்கை கணங்கள் பூசை கொண்டு பலங்கொடுப்ப து கண்டோம், அவ்வுலகத்தும் பிரமேந்திராதிகள் பலங் கொ ப்டபது கேட்டோம். சத்தியம்!—எங்கும் வாழ் தெய்வமெல்

த்துவகையானறிக. கொள்வோர் கருத்துவகையானன்றுகலாற் செல்லாதெனவிடுக.

நிற்பதென்னுமொருமை அத்தொழின்மேனின்றது.

இவை நான்குசெய்யுளானும் ஈசனிடும்பணி நாஞ்செய்தலான நூன்வழிகமாமாறும், அவைமோசகிருசாவிசகுமாறும், பொதுவகையானுஞ் சிறப்புவகையானுந் தெரிந்துணர்த்தப்பட்டன.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

மீளவு முன்சொல்லப்பட்ட தெய்வங்களை வழிபட்டவர்களுக்கு, அவரவர்க்குத் தக்கபலன்களை யந்தந்தத் தெய்வங்களே தானே கொடுக்குமொழிந்து, சிவன் கொடுக்கவேண்டுவதில்லையென்று பஞ்சராத்திரி சொல்ல; அவனை மறுத்தருளிச்செய்கிறார்.

இங்ஙனாஞ் சிலர்க்குப்பூசை யியற்றினால் - இவ்விடத்திலே மூர்த்திகரித்து இருக்கிற மூர்த்திகள் சிலரை நாமர்ச்சனை பண்ணினால்,— இவர்களோவந்த தங்குவான் றருவார் - இந்த மூர்த்திகளல்லவே யவ்விடத்திலே வந்து நம்மைச் சுவர்க்கத்திலே வைக்கிறவர்கள்;— அன்றே லத்தெய்வ மத்தனைக்காண் - அப்படியல்லவாகையால், நீ சொல்லுகிற வந்தத்தெய்வங்களும் அதிகாரியென்றறிவாயாக. அப்படி யிருக்கையினால்,— எங்குமவாழ் தெய்வமெல்லா மிறைவனாணையினாலே நிற்பது - எவ்விடத்திலும் அவரவரிடத்திலே யிருந்து பூசைகொள்ளுகிற தெய்வங்கள் சர்வமும் பரமேசுரனுடைய வாஞ்ஞையாலே காணிப்பது. அப்படி யெங்கும் பரிபூரணனாயிருக்கிற சிவனுக்கு அ

ங்கங்கே யந்தந்தத் தெய்வங்களை வைக்கவேண்டின காரண
மேதுக்கெனவில்?—அங்கு நாஞ்செய்யுஞ்செய்கைக் காளவை
ப்பா லளிப்பன - ஆகையாலே அவ்விடங்களிலே நாஞ்செய்கி
ற பூசைகளுக்கெல்லாஞ் சனனுடைய யாஞ்ஞையாலே யவைவயி
த்துக்குத் தக்க பலன்களைத் தரவேண்டுகையினால், அந்தந்தத்
தெய்வங்களை யங்கங்கேவைத்தது, அதற்கதற்குத் தக்க பலனை
ப பரமேசுரன தருவன.

இதனறை சொல்லியது, இவ்விடத்திலே யானமாயசனுக்
காகச் சகளீகரித்த தொரு திருமேனியை யாசித்ததால், இந்த
திருமேனியல்ல வவ்விடத்தல் வந்து பூசாபலத்தைத் தருவது.
இத்தனமைபோல் எவ்விடத்திலு மிருந்து பூசைகொள்ளுந்
தெய்வங்களும், பரமேசுரனுடைய வாஞ்ஞையாலே யிருத்தகை
யினால, அந்தந்தத்தெய்வங்களை வழிபட்டவர்களுக் குரிய ப
லனகளையும பரமேசுரனே யறிந்து கொடுப்பனெனனு மு
றைமை யறிவித்தது.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

—o—

சிலர்ககிங்குநாம் பூசையிபற்றினுல்- பசுப் பார்ப்பார் கந
தை தாய்முதலாயினுளை இம்மைமக்கணவழி பட்டாரக்கு —இ
வர்களோவந் தங்துவான றருவாரனறேல்-அஃதின்று மறுமை
க்கண் பயனறருங் கடவுள வேறெனப தெல்லாக்கு மொப்ப
முடிந்தமையின,— அதுதெய்வமதனைக்காண் - ஈண்டுமெவ்வா
றுதலனையும் அற்றேல் தம்மை வழிபட்டார்க்கு அவ்வத்தேவ
ரோ வெதிர்தோனறினறு பயனகொடுத்தாரோனவும், ஆண்டா
ண்டு கேட்கப்படுதலின் வரு மதற்கு வல்லுவர்போலு மென

மலையற்க. அரசனாணையே யமைச்சர்முதலாயினோர் மாட்டு நின்று பிறர்க்களிக்குமாறுபோல,— இறைவனாணையினா லெங்கும் வாழ்தெய்வமெல்லாநிற்பது - முதல்வனே தனதாணையைத் தனேவல்வழிநிற்கும் அவ்வக்கடவுளர்மாட்டு வைத்து,— ஆங்கு நாஞ்செய்யுஞ்செய்திக்கு - அவ்விடத்து நாஞ்செய்யுஞ் செய்தியுள்,— ஆவன வைப்பாலளிப்பன - தக்கபயன்கொடுப்பன. அவ்வாறன்றித் தாமே வினைத்தொடக்கிற்பட்டுப் பரதந்திரமாயிருக்குங் கடவுளர் பிறர்க்குப் பயன் கொடுக்குமாறு யாங்ஙனமையுமென்பதாம்.

இவைநான்கு செய்யுளானும் மீளவிம்மைப்பணி நாஞ்செய்தலானாங்கு எதிர்மொழிமாறும், அவைநோக்கி நுகர்விக்குமாறு பொதுவகையானுஞ் சிறப்புவகையானுந் தெரித்துணர்த்தப்பட்டன.

---

## மறைஞானதேசிகர் உரை.



தனக்கொரு விருப்பமில்லாத சிவன், முற்கூறிய
அறங்களில் விருப்புடையனென்று வெளி
யிலீனமாக்களிடத்தில் வைத்த கிரு
பையதென் றுணர்த்துகிறார்

காண்பவன் சிவனேயானா லவனடிக் கன்புசெய்கை, மாண்பற மரன்றன்பாத மறந்துசெய் யறங்களெல்லாம், வீண்செய லிறைவன்சொன்ன விதியறம் விருப்பொன்றில்லான், பூண்டனன் வேண்டல்செய்யும் பூசனை புரிந்துகொள்ளே. (உஎ)

(இ-ள்.) காண்பவன் சிவனே யானு லவனடிக் கன்பு செய்கை மாண்பரம — காணொரு தெய்வத்தைக் குறித்துச் செய்யும் பூசைமுதலிய வழிபாடுகளெல்லாத்தையுமறிந் ததற்கேற்ற பலங்களைச் சிவனே கொடுப்பனெனாகில், அவனது திருவடியிற் பூசைபுரிதலே பரமமான தன்மம

அரனறன் பாதமறந்துசெய் பரங்களெல்லாம் வீண்செயல் — நீயரனது சீபாதங்களைக் கூடாது பிறதோரிடத்திற செய்யுமறங்களெல்லாம பயனற்ற செயல்களாம். ஆனால் பயனுள்ள திபாதோவெனில்?

இறைவன சொன்ன விதியறம் — சிவனருளிச்செய்த நியமவிதியாகமங்களின வழி நின்றறநடத்தலே சிவதன்மம.

விருப்பொன்றில்லான — தனக்கொரு விருப்பமுஞ் சிறிதில்லாதவன

பூண்டனை வேண்டல் செய்யும் — யாதாமொருவன் யாதொரு பலத்தை யிச்சித்துச் சிவனைப் பூசைசெய்வோனாகில் அதற்குத்தக்க பலங்களைக் கொடுப்பனாகலான.

பூசனை புரிந்து கொள்ளே. — ஆகையாலந்தச் சிவனையே பூசையைவிரும்பிச் செய்வாயாக எ-று (௨௭)

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

மேலான்மாக்கள் பண்ணுங் கருமங்களையெல்லா மறிந்து பலத்தைக் கொடுக்கிறவன் சிவனேயாகையால் சர்வகர்மமும் சிவனையுத்தேசித்தே பண்ணுவது புத்தியென்பது உணர்த்துதல்.

காண்பவன்சிவனேயாகி லவனடிக் கன்புசெய்கைமாண்பறம் - எவ்வழிப்பட்டதேவர்களை வழிபடினுமதைக்கண்டுபல

ங்கொடுப்பவன் சிவனேயாகையால், அந்தச்சிவனுடைய பாதா
ரவிந்தங்களிலே பத்திபண்ணுகிறதே சிறப்புடையதருமம்.—அர
னருள்பாதம் மறந்துசெய்யறங்களெல்லாம் வீண்செயல் - சிவ
னேபிரதானமாகவும், பிரமாதிதேவர்கள் அங்கமாகவும், சிவாஞ
ஞையால் x சௌராதி பூசைகள் பண்ணுகிறோமென்றும் பண்
ணாமல், சிவன்பரத்துவமென்பதை மறந்து தந்தாம்பூசைப
ண்ணும்தேவதைகளையே பரத்துவமென்று விசாரித்துப்பண்ணில்; ப
ண்ணின பூசாபலம் விபரீதமாம் —இறைவன்சொன்ன விதிய
றம் விருப்பொன்றில்லான் பூண்டன்ன வேண்டல் செய்யும்—
காத்தகாயானவன் விருப்புவெறுப்பு வொன்றுமில்லாதவனாயினு
ம் தான்சொன்ன வேதாகமத்தின்படி பூசையைச் செய்வோர
பத்தியைத்தரித்தக்கொண்டு. அதனால் பத்தர்கள் வேண்டிய போக
மோக்ஷங்களைக் கொடுப்பவனாதலால்,— பூசனைபுரிந்து கொள்
ளேல்யும் சிவபூசையைச்செய்து அபிஷ்டத்தை வேண்டிக்
கொள்வாயாக

† சௌரம் - சூரியசம்பந்தம்.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—o—

அநந்தத்திரமற்ற தேவதா பூசாபலத்தையுஞ் சிவனே
கொடுப்பவனாகையால், சிவ பூசாபலந் திரமாதலால், சிவ பூ
சையே செய்யவேணுமென்று செப்புகின்றார்.

காண்பவன் - பலமுண்டாக்குபவன்,— விருப்பொன்றி
ல்லான் - விருப்பில்லானாயினும்,—பூண்டன்ன வேண்டல் செய்
யும்-அனுக்கிரக நிமித்தியம் பூசைக்குட்பட்டவனாய விருப்பஞ்
செய்யும்

மற்றவை வெளிப்பொருள்.

## சிவஞானயோகியருரை வருமாறு.



இனி அவை நூனங்களதிகமாதற்கட் படும் விசேடங் கூறுகின்றார்.

இதனையுங் கூறியவாற்றால், ஏனைக் கடவுளர்மாட்டுச்செய்யும் வழிபாடுகளையும் ஏற்றுக்கொண்டளிப்பவன் சிவபிரானென்பது பெறப்படவே, அவனை வழிபடுதலே நல்லறமாம், அவனையன்றிச் செய்வனவெல்லாம் தீவினையென்பது போதருதலாலும்; புண்ணியமாவது வேதாகமங்களின் அவ்விறைவனால் விதிக்கப்படும் விதிப்பாணையாலும், ஒன்றினும் விருப்பிலனாயினும் உயிர்கண்மாட்டுக் கருணையானே விருப்பஞ்செய்யும் அவ்விறைவன் திருவடிப்பூசனையே ஒருதலையாகச் செய்யற்பாற்றென்பதாம்.

இல்லான் பூண்டனனென்பன முற்றெச்சங்கள்.

சிறப்பும்மை விகாரத்தாற் றொக்கது.

அற்றேல், வாக்குமனாதீத கோசரமாகிய இறைவன் திருமேனி கொண்டருளியவழியுஞ் சுதந்தரத்துவ புவனத்தினன்றி ஏனையவைக்கு இன்மையின், அவனை யிக்கண்ணோர் எங்ஙனங் கண்டு பூசிக்குமாறென்னின்? அஃதுணர்த்துதற்கெழுந்தது வருஞ் செய்யுளென்பது.

---

## நிரம்பவழகியருரை வருமாறு



முன்சொல்லிப் போந்த தெய்வங்களை யாசரித்தவர்களுக்கு அந்தந்தத் தெய்வங்கள் அதற்குத் தக்கபலத்தை யறிந்து கொடுக்கமாட்டாது, பரமேசுரனே யறிந்து கொடுப்பனென்னில்? அந்தத் தெய்வங்களை வழிபடுகிற தொழிந்து, பரமேசுரனை வழிபட வேண்டுவதில்லையென்று சொல்ல; அவனை மறுத்தருளிச்செய்கிறார்.

காண்பவன் சிவனேயாகி லவனடிக் கன்புசெய்கைமாண்பறம் - எவ்விடமும் அவனுடைய வாக்கினையா யிருக்கையினால் நாஞ்செய்கிற பூசைகளெல்லா மறிகிறவன சிவனேயானால், எவ்விடத்தும அவனுடைய சீர்பாதத்தை நினைத்துப பத்திபண்ணுகிறதே மாட்சிமையுடைத்தாயிருக்கிற சிவபுண்ணியம். சிவனை மறந்து செயயப்பட்ட புணணியங்க ளெல்லாம் புணணியமல்லவோவெனனில்?—அரனறனபாத மறந்துசெய் யறங்களெல்லாம பிணசெயல் - பரமேசுரன சீர்பாதத்தை மறந்து செய்யப்பட்ட புணணியங்க ளெல்லாம பிரயோசன மற்ற தொழில். தனமத்தைச் செய்கிறதெல்லாம நனமையல்லவோ வெனனில்? தனனமிட வந்தவனுக்குச் சுகபோசனமாக விட்டது ஒரு சிவஞானிக்குப் பிசைசயிட்டது ஒவவாது ஆகையால,—இறைவன சொனன விதிபறம - பரமேசுரன வேதாகமங்களிலே நியமித்ததே தனமமென்று சொல்லப்பட்டது.—விருப்பொன றில்லான பூசைடனன - ஆகையால் தானசொனன முறைமையிலே யிந்தத் தனமங்களைச் செய்தவாகளை யிரட்சிக்க வேணுமென்று தனக்கொரு விருப்பில்லாத பரமேசுரனுந் திருவுளளமபற்றிக் கொண்டிருந்து அநுக்கிரகஞ்செய்வன.—வேணடல்செய்யும பூசனை புரிந்துகொளளே—ஆகையாலே நாமவேணுமென்ற பிரயோசனங்களைத் தாராநிற்பன, பத்தியாலே யர்ச்சனையை விரும்பிச் செய்வாயாக.

இதனாற் சொல்லியது, எவவிடத்து மர்ச்சித்தவர்களுக்கு அதற்கதற்குத் தக்கபலனைப பரமேசுரனே கொடுக்கிறவனாகையால், அவனுடைய சீர்பாதத்தை நினைந்து அர்ச்சிக்கிறதே யர்ச்சனையென்றும், அல்லாதது அர்ச்சனையல்ல வென்றும், கான்விதித்தபடியே யர்ச்சித் தவர்களுக்குத்தப்பாம லதற்குற்ற

பலனைக் கொடுப்பனாகையால்; சிவனை யர்ச்சிக்கிறதே பய
னென்னு முறைமையு மறிவித்தது.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

——0——

காரணபவன் சிவனே பரதத்துவ - இதனையுங் கூறியவதனா
ல் ஏனைக்கடவுளர் மாட்டுச்செய்யும் வழிபாடுகளையுமேற்றுக்
கொண்டு அளிப்பவன் சிவபிரானென்பது பெறப்பட்டவே,—அய
னடிச்சனபுசெயலை-அவனைவழிப்படுமே,— மாணபுரிட்ட நல்ல
கோரமாம்.—அரனார் எனபர மறந்துசெய் யாகமெல்லாம்-
அவன திருவடியை மறந்து செய்திற அறமெல்லாம்,—வினை
செயல்-வினைபந்தபோதருகலாகும்,— அறம்-புண்ணியமாய
ஆசொன்ன இறையவரும் விதி - வேதாகமங்களினையவிறைவனா
ல் விதிக்கப்படுமே விதியாகலானும்,—விருப்பொன்றிலான -ஒ
ன்றிலும்விருப்பில்லாதியும்,— பூண்டனவேவனாடல்செயும்-உ
யிர்கணமாட்டுக் கருணைபூண்டு விருப்பனுசெய்யும்,—பூசனை புரி
ந்துகொள்வோ - அவ்விறைவனதிருவடிப பூசனையே யொருக்கல
யாகச் செய்யற்பாற் றென்பதாம.

---

## மறைஞானதேசிகர் உரை.



அச்சிவனை வழிபடுமிட முணர்த்துகின்றார்

தாபரஞ் சங்கமங்க ளென்றிரண் டுருவினின்று
மாபரன் பூசைகொண்டு மன்னுயிர்க் கருளைவைப்ப
னீபரன் றன்னைநெஞ்சி னினைவையே நிறைந்தபூசை
யாய்ப்பரம்பொருளைநாளுமர்ச்சிநீயன்புசெய்தே.(உஅ)

(இ-ள்) தாபர ஞ் சங்கம ங்க ளென் றிரண் டுருவினி ன்று மாபரன் பூ சை கொண்டு ம ன்னுயிர்க் கருளை வைப்பன் — மகத்தாகிய சிவன் சிவலிங்கத்தி னிடத்துஞ் சிவதீக்கையினையுடைய சிவபத்தர்களிடத்துமாக விரண்டிடத்து மதிட்டித்துக் கொண்டு நின்று தியொருமைப் பாடடையுடைய வான்மாக்களுக்கு அனுக்கிரகத்தைச் செய்வன.

இவ்விரண்டையும் வழிபடவேண்டுமோ, ஒன்றையே வழிபடவமையாதோ வெனின்? யாதாமொருவர்கள் தாபரத்திலே வழிபட்டுச் சங்கமத்தை வழிபடா தவமானஞ்செய்யில்; இவன் றுபரந்திறசெய்யுந் தும் பலிபாதென் றாகமங்களசொல்லுதலால், அவ்விரண்டையும் வழிபடவேண்டும்.

நீ பரன் றன் னைநெஞ்சி னினை வையேல் விறைந் தபூசை — அவ்விரண்டுமின்றி நீ பரமமான சிவனை யகவாரத்துள் தியானம் பண்ணிக்கொண்டிருப்பாயாகில், அவனுக் ககுவுமசத்தாகிய பூசையாங்காண்.

ஆபரமபொ ருளைநாளுமாசி ன்றியன்புசெய்கே. — ஆதலா லிவ்விடங்க ளொன்றை நீயாராய்ந்துகொண்டு சிவனை நாடோறும பத்தியுடனே பூசிப்பாயாக எ - று.

தாபர சங்கமமெனபது வடமொழி
இருக்கிறதே சீலமாகையாற் றுபரமென்றார்.
போசகுவரவை யுடைத்தாகையாற் சங்கமமென்றார்.
இதற்குச் சிவதனமத்தி லறிக. (உஅ)

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

—o—

**சிவன் தேஹேந்திரியாதி ரஹிதனாகையால் சிவனைப்பூசை பண்ணுவதெவ்வாறென்னை? மேலுத்தரங் கூறுகின்றார்.**

தாபரஞ் சங்கமங்க ளென்றிரண் டுருவினின்று மாபரன் பூசைகொண்டு மன்னுயிர்க் கருளைவைப்பன - சிவலிங்கமுதலாகிய அசலமூர்த்திகளிடத்தும், சிவபக்தராகிய சரமூர்த்திகளிடத்திலும் சாந்நித்தியமாகநின்று, பக்தர்கள்பண்ணும் பூசையையேற்றுக்கொண்டு, பூசைபண்ணினபேர்க்கு மனோரதவரம் கிருபைபண்ணுவார். — நீ பரன்றனை நெஞ்சினில்வைபேல் நினைந்துபூசை - அந்தச்சிவனை இருதயத்திலே தியானித்து மானசபூசை பண்ணுவாயாகில் பாஹ்யபூசைபோல ¶ நியூநாதிக்யங்களும் இரவையும் அசுசியும் சூதகாதிதோஷங்களும் காயக்லேசமுமில்லாத குறைவற்ற பூசையாம்.

தது³க்தம் ஶிவயோக³ரத்நே — ஸர்வோபசாரயுக்தஸ்ய ஸர்வாங்க³ஸ்யாபி பூஜநே । யத்ப²லம் லப⁴தே ஸம்யக் த்⁴யாநயஜ்ஞேந தல்லபே⁴த் । த்⁴யாநயஜ்ஞ: பரஶ்ஶுத்³த⁴: ஸர்வதோ³ஷவிவர்ஜித: ॥ தேந ஸம்ஸித்³தி⁴மாப்நோதி பா³ஹ்யைஸ்ஸம்பா⁴ரநாஶநை: । ஹிம்ஸாதி³தோ³ஷது³ஷ்டாஸ்து பா³ஹ்யயஜ்ஞா: ஶுசீதராஸ்ஸாமாந்யா: ॥ த்⁴யாநயஜ்ஞ: பரஶ்ரேஷ்டோ² வேதா³ர்த²ஸாரம் ப்ரசக்ஷதே.

இந்தமானசபூசை கூடாதிருக்கில்,—

ஆய்பரமபொருளோநாளுமாசகிந்யனபுசெய்தே-அந்தஞானபூசை கூடும்படிசகுவிசாரித்து சிவலிங்கத்திலிடத்தும்மஹேஸ்வரரிடத்தும் பக்தியுடனே நாடோறும்பூசைபண்ணுவாயாக.

¶ நியூநாதி - குறைநத்து.

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—0—

அருவாகிய சிவனைப் பூசிக்குமவகை போதிக்கின்றார்.

தாபரம்-இலிங்கம்,— சங்கமம்-சிவபத்தர்கள்,—என்றி ரண்டுருவினின்று மாபரன் பூசைகொண்டு மன்னுயிர்க் கருளைப் பயன்,—நேயரன்றனை நெருங்கினவையேய்-இருதயகமலத்தி லே மனசை விட்டு பொருந்திச் செய்யச் சத்திபால விளக்கப்பட்ட சிற்ச த்தியாகிய மனசிருந்து தியானம்பண்ணுமற்றியானம்பண்ணுவை யாகில்,—அதுவந்தரங்கபூசை-போகபூசையாதியாய், அது ஞா னபூசையுமாம் அதுவன்றி,—அப்பரம்பொருளை-சிவாகமவாக்கி யங்கொண்டு திரிபதார்த்த விவேசம்பண்ணி பசுபாசபதார் த்தத்தினின்றும் விலக்குவனாகத் தியான நிமித்தமறி, அது வும் நினைக்கப்பூசை அல்லாய்,—நாளுமாசச்சி நீயன்புசெய்யே- பத்தியோடுகூடி தினந்தோறுஞ் சொன்னவிதாரம் கிரியா பூசை யோக பூசை ஞானபூசைகளினுற சிவனைப்பூசை பண்ணு.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

—0—

சதாசிவதத்துவத்தினை வைகுமிறைவன் புறத்தே திருக் கோயிலுள்ளிருக்குந் திருமேனியுந் திருவேடமு மாகாரமாகக் கொண்டு நின்றும், அகத்தே சமிதிடமாகக் கொண்டுநின்றும்,எ ண்டிள்ளார் செய்யும் பூசைகொண்டருளுவனாகலான்; அச்சதி க் தவ்விடங்களின வழிபடுகவென்பதாம்.

---

## நிரம்பவழகியருளா வருமாறு.

—0—

இப்படி யெவ்விடத்திலும் நிறைந்துநிற்கிற பரமேசுரனைப் பூசிக்கிற முறைமை யெப்படியென்ற மாணாக்கனை நோக்கி, மேலு மருளிச்செய்கிறார்.

தாபரஞ் சங்கமங்க ளென்றிரண் டுருவினின்று மாபரன பூசைகொண்டு மனமாயிராந கருவினைவைப்பன-அசைவற்றுநிற்கிற சிவலிங்கப் பெருமானென்றும், அசைவுடனே கூடியிருக்கிற மயேசுரனென்றும் சொல்லப்பட்ட விரண்டு வடிவிலும், மகத்தான பரமேசுரன் எழுந்தருளியிருந்து பூசைகொண்டு, அநாதியே தன்னிடத்திலே நிலைபெற்று நிற்கிற ஆன்மாக்களுக்கு அநுக்கிரகத்தைச் செய்வன் இந்தப் புறப்பூசை யொழிந்து உட்பூசையுஞ் செய்படலாம அதெங்ஙனே யென்னில்—நீபரன் றன்னைநெஞ்சில் நினைவையேல் நிறைந்தபூசை - அந்தப் பரமேசுரனை யுன்னுடைய விருதயத்திலே தியானிப்பையாகில், அது அவனுக்கு மகாபூசையாம—அப்பரம பொருளை நாளு மர்ச்சித்தியன்புசெய்தே - ஆகையால் இப்படி யாராய்ந்து அறியப்பட்ட பரமேசுரனை நாடோறும் பத்தியுடனே பூசிப்பாயாக.

இதனாற் சொல்லியது, சிவலிங்கப் பெருமானிடத்திலு மயேசுரரிடத்திலும் பரமேசுரன் எழுந்தருளியிருந்து பத்தியுடனே பூசித்தவர்களை இரட்சிப்பனென்றும, அந்தப் பரமேசுரனைத் தங்க ளிருதயத்திலே தியானித்தவர்களை அதுதானே மகத்தான பூசையாக வங்கேநின்று இரட்சிப்பனென்று முறைமையு மறிவித்தது.

—

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

—o—

மாபரன - சதாசிவதத்துவத்தினகண வைகுமிறைவன்,—தாபர சஙகமங்க ளெனறிரணடுருவினறு - புறதகேதிருக கோயிலிலிருககுந திருமேனியுந திருவேடமுமாகிய விரண்டையு மாதாரமாககொணடுநினறு,—பூசைகொண்டு மனனுயிர்க்கரு ளைபபன-நிலைபெற்ற ஆனமாககளசெய்யுற பூசையைகசொண்டவருககருளசெய்வன,— நீபான்றனனைநெஞசில் நினைவையேல் - நீயவவிறைவனை யகதநேசிநதிபபையாயின,— நிறைநதபூசை - அவவிறைவ னவவகதநே யுயிரிடமாகக கொணடுநின்று அநநிறைநதபூசையைக் கொணடருளுவன ஆகலான,—ஆய்பரம்பொருளைநாளும - அங்கிறிநத பரம்பொருளை நாடோறும்,—நீயனபுசெய்தாசசி-நீ டவவிடங்களி லர்ச்சிததுவழிபடுவனபதாம.

---

### மறைஞானதேசிகா உரை.

—∞—

முற்கூறிய வன்புளளாா சிறபபும, அனபில்லாதாா சிறப்பினமையு முணாததுகிறார்.

அரனடிக கன்பர்செயயும் பாவமு மறமதாகும்
பரனடிக் கன்பில்லாதார் புண்ணியம பாவமாகும்
வரமுடைத் தக்கன்செய்த மாவேள்வி திமையாகி
நரரிணுட்பாலன்செய்த பாதகநன்ன.மயாயத்தே.(உகூ)

(இ-ள்.) அரன பதியுள்ளவர்கள சிவனிமித்தமாகப் பிரடிக் கன்ப மகத்தி செய்ததுந் தனமமாம.
ர்செய்யும்
பாவமு மறமதா
கும்

பரனடிக்கன்பிலாதார் புண்ணியம் பாவமாகும்

மேலான சிவனடிக் கன்பிலாதார் யாகாதிகன்மங்களைச் செய்தாரானாலும், அதுவு மிகுந்த பாவமாய்விடும் அஃதென் போலவெனனில்?

வரமுடைத் தக்கன்செய்த மாவேள்வி தீமையாகி நரரிற் பாலன்செய்த பாதகநன்மை யாய்த்தே.

தக்கப்பிரமாவு— டலைமையாகிய தக்கன் சிவனிடத் தன்பில்லாமையால் அவன்செய்த யாகம் பாவமாயிற்று, மானுடர்களுடைய டலைமை யாகிய பிராமணகுலத்திற் றோன்றிய சிறுபிள்ளையானவன் சிவனிடத்து வைத்த நேசத்தால் செய்த பிரமகத்தியும் தன்மமானவாறுபோல். எ-று

இஃதெதிர் நிரனிறை

இதற்கு வாயுவியத்திலுங் காந்தபுராணத்து சதருத்திர சங்கிதையினும் பிரமாணங் கண்டறிக (உக)

---

## சிவாக்கிரயோகியருரை வருமாறு.

—0—

இதற்கு முன்விருத்தத்திலே அரனடிக் கன்புசெய்கை மாண்பு, அவன்றன்பாத மறந்துசெய் யறங்களெல்லாம் வீணசெயலென்றதற்கு உதாரணங் கூறுகின்றது.

அரனடிக் கன்பர்செய்யும் பாவமு மறமதாகும் பரனடிக் கன்பில்லாதார் புண்ணியம் பாவமாகும் - சிவனிடத்திற்பத்தியினாலே பண்ணும்பாவமும் புண்ணியமேயாம், சிவனிடத்தில் பத்தியில்லாமற் பண்ணும் புண்ணியமும் பாவமேயாம் அதெவ்வாறெனனில்?—வரமுடைத் தக்கன்செய்த மாவேள்வி தீமையாகி நரரிற் பாலன்செய்த பாதகம் நன்மையாய்த்தே- பிரமாவினுடைய புத்திரனாகிய தக்கப்பிரசாபதிகளிலொருவனான

தக்ஷப்பிரஜாபதி, மஹாவிஷ்ணுமுதலான தேவர்களை கூட்டிப் புண்ணியங்களுக்கெல்லா மதிகமாகிய யஞ்ஞத்தை சிவனையறியப்பண்ண; அந்தயஞ்ஞமு மழிந்து † யஜமானனுக்குத் தலைபோய்,யஞ்ஞத்தி லிருந்த தேவர்களுக்கும் ¶ பராபவமும × அங்கச்சேதமும்வந்தது. மனுஷயரிலே பிரமசாரியா யுள்ள சண்டேஸ்வரநாயனார் சிவபத்தியினாலே சிவாபராதியாகிய தமமுடைய பிதாவை மழுவினாலே வெட்டப் பிதுருவதமும் பிரமஹத்தியென்கிற தோஷமும் பொருந்தாமல் அந்ததேகத்திலேயே சிவசாரூப்பியத்தைப்பெற்றார். இந்த § அந்வய + வ்யதிரேக திருஷ்டாந்தத்தினாலே சர்வகருமங்களும் சிவனையுத்தேசித்தே புத்திமான் பண்ணக்கடவன்.

† யஜமானன் - யாகஞ்செய்கிறவன்.

¶ பராபவம் - அவமானம்

× அங்கச்சேதம் - சரீரக்குறைவு.

§ அந்வயம் - உண்மை.

+ வியதிரேகம் - இன்மை

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

நிரீசுரவாதிபா யிருக்கின்ற மீமாம்சக முதலோர்க்கும் சத்தமுதற்றேவதை கன்மசாக்ஷியாதலால், சிவனைத் தான கன்மசாக்ஷியாய்ப்பண்ணிக்கொண்டு, சிவனுக்கு மாறுபாடு மனசி னினையாமல்,சிவனிடத் ததிகாரம்பெற்ற விஷ்ட தேவதாசாக்ஷியாகத் தான் பண்ணிக்கொண்டு பண்ணுத கன்மம், பலங்கொடாது. அப்படிப்பண்ணின கன்மம் பாவகன்மங்களைப்பாறு வும் பலங்கொடுக்குமென்பதற் குதாரணம்.

வெளிப்பொருள்.

## சிவஞானயோகியருரை வருமாறு.

—o—

அறம்பாவங்கள் பயனறருவது கொள்வாரது வனமைமெ ன்மைபற்றியனறிச செய்வாரது வனமைமெனமைபற்றியாகல செய்வினைகளது வனமை மெனமைபற்றியாதலனறெனபதாகு, உடம்பாட்டிறு மெதிரமறையினுந தக்கனுந தண்டிசநாயனுரு மேசானருகலானும; சிவபிரானையே அர்சசிசகற்பாறறெனப தாம.

இவை மூனறு செய்யுளாறும் நானங்களிகநோக்கி றுக ர்வித்தறகட் படும விசேடஙகூறப்பட்டது.

இததுணையும மீமாஞசகர் மதம்பற்றியாசங்கித்துட் பரிக ரித்து இருவினைகளதியல்பு கூறுமுகததாலும், அவை இறை ணிபாமாறு கூறுமுகததாலும், அவறறை நாஞசெய்யுமாறு கூ றுமுகத்தாறும,அவை பயனபடுமாறு கூறுமுகததாலு ம,'காமே மருவிடா வடிவுங் கனம பலஙகளு மறுமைககணே' எனறது னை வலியுறுததியவாறு.

---

## நிரம்பவழகியருரை வாருமாறு.

—o—

இங்ஙனஞ் சொல்லிப்போகத வுட்பூசையாகவும் புறப்பூ சையாகவும் பூசிததுப பரமேஸ்வரா சீபாதத்திலே பததியை யுடையவாகள பாவங்களைச் செய்தார்களாயினும் புணணியமா மென்றும்; பத்தியில்லாதவர்கள் புண்ணியஞ் செய்தாாகளாயி னும் பாவமாமெனறும் மே லருளிச்செய்கிறுர்.

அரனடிக் கன்பர்செய்யும் பாவமு மறமதாகும் - பரமே சுரனுடைய சீர்பாதத்திலே மிகுத்த பத்தியை யுடையவாகள

ஒவ்வொரு பாவங்களைச் செய்தார்களாமாகிலும், அதுவு மன்பாயேவிடும் — பரனடிக் கன்பிலாதார புண்ணியம் பாவமாகும் - அந்தப் பரமேசுரனுடைய சீர்பாதத்தி லேதுங்கும் பத்தியில்லாதவர்கள் புண்ணியங்களைச் செய்தார்களாயினும், அதுவு மகத்தான பாவங்க ளாகாநிற்கும் அதெப்படியெனில்?—வரமுடைத் தக்கன்செய்த மாவேள்வி தீமையாகி நாரிணிற் பாலனசெய்த பாதகம் நன்மையாய்த்தே - வரப் பிரசாதத்தையுடைய தட்சப் பிரசாபதி செய்யப்பட்ட பெரிய வேள்வியானது குற்றமாயவிட்டது மணிசரிப சிறுபிளளைசெய்த மஹாபாதகமும் புண்ணியமாய் விட்டது ஆகையால பத்தியுள்ளவர்களசெய்த பாவமும் புண்ணியமாம். பத்தியில்லாதவர்கள் செய்த புண்ணியமும் பாவ மாகாநிற்கும்.

பத்தியுள்ளவர்கள செய்த பாவமும் புண்ணியமாமென்றதற்குப பிரமாணம் தேவாரம். "கடிசேர்ந்த போதுமலராகைக்கொண்டு நல்ல, படிசேர்ந்த பால்கொண்டங் காட்டிடத்தாதைபன்டு, முடிசேர்ந்த காலையற வெட்டிட முக்கணனூர்த்தி, யடிசேர்ந்த வண்ண மறிவார்சொலக் கேட்டுமன்றே." என்றும், திருவாசகம். "தீதிலலை மாணி சிவகருமஞ் சிதைத்தானைச், சாதியும் வேதியன் றாதைதனைத் தாளிரண்டுஞ், சேதிபப வீசன் றிருவருளாற் றேவர்தொழப், பாதகமே சோறு பற்றி னவா தோணோக்கம்." என்னுமதுவ கண்டுகொள்க

திருக்களிற்றுப் படியார் ௪௯-செ. "பாதக மென்றும் பழியென்றும் பாராதே, தாதையை வேதியனைத் தாளிரண்டுங்—சேதிப்பக், கண்டீசர் தாமாம் பதியளித்தாய் கண்டாயே, தண்டீசர் தஞ்செயலாற் றான்." என்னுமதுங் கண்டுகொள்க.

சிவபத்தி யில்லாதவர்கள் செய்த புண்ணியமும் பாவமுமாமென்றதற்குப் பிரமாணம் திருவாசகம். "சந்திரனைத் தே

ய்த்தருளித் தக்கன்றன் வேள்வியினி, லிந்திரனைத் தோளெரி ந்திட் டெச்சன் றலையரிந்த, சந்திரனை செலஷு மலர்கதிரோன பற்றகர்த்துச, அக்கினி திசைதிசையே தேவர்களை யோட்டிச்ச து, செந்தாா பொழில்புடைசூழ் தென்னன பெருந்துறையா னை, மந்தார மாலையே பாடுதுங்கா ணம்மானாய" எனறும, திருக்களிற்றுப்படியார். ௬௩ - செ. "விட்டிலே சென்று வி னையொழிந்து நிற்றிடுமென, நாட்டிலே நவவினைகள் செய்தி டுமென—கூட்டிலவாட, சாத்திரமே நின்றிலையேற்றந்தகனறா வேள்விசெய்த, மாத்திரமே யாங்குமுண்டாய வந்து." என்றும ஆவ கண்டுகொள்க.

இன்னும் சொல்லப்படு பரமேசுரனிடத்தில் பத்தியுள்ளவ ர்கள் செய்த பாவமும் புண்ணியமாமென்றும், பரமேசுரனிட த்தில் பத்தியில்லாதவர்கள் செய்த புண்ணியமும் பாவமாமெ ன்றும், இப்படியானது சண்டேசுரநாயனார் பூசையினும் தக்க னவேள்வியினுங் கண்டோமென்று முறைமையுமறிவித்தது

---

## சுப்ரமண்யநேசிகருரை வருமாறு.

—0—

(அறம்பாவங்களபயன றருவது கொள்வாரது வன்மைமெ ன்மைபற்றியன்றி செய்வாரது வன்மைமென்மை பற்றியாதல் செய்வினைகளது வன்மைமென்மை பற்றியாதல் லன்றாகலின) அ ரனடிக்கன்புசெய்யும் பாவமு மறமதாகும்-முதல்வன திருவடி க்கு அன்புடையார் செய்யும் பாவச்செய்கையும் அறமாய்முடியு ம்,— அரனடிக்கன்பிலாதார் புண்ணியம்பாவமாகும்-முதல்வ ன திருவடிக்கு அன்பிலார்செய்யும் புண்ணியச்செய்கையும்பா வமாய் முடியுமென்பதற்கு,— வரமுடைத்தக்கன் செய்தமா

வேள்வி தீமையாகி - வரப்பிரசாதம்பெற்ற தக்கனசெய்த நன்மை பொருந்திய பெரியயாக முனதீமையாய் முடிநததாகிய உடனபாட்டாறும்,—நரரினிற்பாலனசெய்த பாதகம் நனமையாய்தசே - மாறுடைப்பிறவியிற் சிறந்த தண்டீசநாயனார் செய்தகொலைப்பாதகமும புணணியமாய் முடிதலாகிய எதிர்மறையாறும் அவ்விருவருமே சானருகலின, சிவபிரானையே யர்ச்சிக்கற்பாறறெனபதாம.

இவைமூனறு செய்யுளாறும் நானங்களுகேநோக்கி நுகர்விககப்படும விசேடஙகூறபபட்டது.

இததனையு மீமாஞ்சகர்மதம்பற்றி யாசங்கித்துப் பரிகரித்து இருவினைகள இயல்பு கூறுமுகததாறும், அவையிறைபணியாமாறு கூறுமுகததாறும், அவற்றைநாஞ்செய்யுமாறு கூறுமுகததாறும, அவை பயனபடுமாறு கூறுமுகத்தாறும், 'காமே மருவிடா வடிவும் கனமபலனகளு மறுமைக்கண்ணே' எனறதனைவலியுறுததியவாறு.

---

## மறைஞானதேசிகர் உரை.



விதிவாத முணர்த்துகிறார்.

மறைகளீ சன்சொலச்சொல் வழிவரா வுயிரா
வைகளுக், சிறைகொண்மா நிரயபிட்ட பணிசெய
வோர செல்வத்தோடு, முறையுமா பதிகளும்ப ருலக
ஙகள யோனிக்கெல்லா, மிறைவனு ணையினுவினைபதது
ன்பஙக ளியைவதாகும். (௯௰)

(இ-ள்.) மறைக ளீசன்சொல் — வேதாகமங்கள் சதாசிவநாயனு ரருளிச்செய்த திருவாக்கு. இது விப்பிரலம்ப வாக்கியங்கள் போன்றதன்று. அஃதெக்காரண

த்தாலெனில்? இராகத்துவேட மில்லாமற் சருவத்தையு மறிந்தவனாதலாலே!

அச்சொல் வழியரா வுயிரை வைக்குஞ் சிறை கொண்மா நிரயம — அந்த வேதாகமமாகிய விரண்டு நூலின் வழியினின்ற நனுட்டியாத வானமாக்களை யெரிவாய் நரககுழியிலகட் கொண்டுபோய்வைக்கும்.

இட்ட பணி செய்வோர் செல்வத்தோடு முறையுமா பதிகளும் ப ருலகங்களை — அந்தச் சிவவாக்கியத்தைப் பிரமாணித்து அதனவழி வழுவாதுநின்ற றனுட்டித்தவர்கள் செய்த பிரயாசத்துக் கீடாக, சுவர்க்க முதலிய வபரபோகங்களையு மேலான செல்வத்தையுடைய பரமுத்தியையு மடைவர்கள்.

யோனிச்கெல்லா மிறைவனை யினொலினபத் தூனபங்க ளியை வதாகும். — எழுவகை யோனியிற் றோற்றிய வானமாக்களுக்கெல்லாங் காதத்தனாகிய சிவன் றன் து சத்தி சாமர்த்தியத்தான் முறைமையிற சுகதுக்கங்களைப் புசிப்பிக்கும். எ-று.

சொல் - எழுவாய்.

வைக்கும் - பயனிலை.

இதற்குத் தந்திரசாரத்துஞ் சிதம்பர மகாமியத்துங் காந்தத்து மறிக (கூ0)

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

—o—

**மேல்வேதமார்க்கத்திலே நடந்தோரையும் நடவாதோரையும் ஸ்வர்க்கநரகங்களிலே சிவன்சேர்ப்பனென்னும் முறைமையுணர்த்துதல்.**

மறைகளீசன்சொ லச்சொல்வழி வராவுயிர்களைக்குஞ் சிறைகொண்மாநிரயம்-வேதங்கள் சிவனுடையவாக்கியம். அந்தச்சிவனுடைய வாக்கியமானவேதத்திலே செய்யச்சொன்னதைச் செய்யாமலும், தவிரச்சொன்னதைத் தவிராமலும் நடந்தஆன்மாக்களைச்சூழு சிறைச்சாலையில் நரகங்கள்,—இட்டப்பணி செய்வோர் செல்வத்தோடு முறையுமா பதிகளும்பருவங்கள்—சிவன் வேதத்தில் அநுக்கிரகம்பண்ணினபடியே நடந்த ஆன்மாக்கள், ஐசுவரியத்துடனேபொருந்தும ஸ்தலங்கள் இந்திரலோகாதிகள். கேவலம்பாவமே பக்குவமாயின் நரகமும், புண்ணியமே பக்வமாயின் சுவர்க்கமுமடைவார்கள் புண்ணியபாபங்கள் துவந்துவமாயினர்க்கு இம்மையிலேசுகதுக்கங்களைப் புசிப்பதாக யோநிஜாதராவார்கள்,—யோநிசெல்லா மிறைவனாணையினாலினபத் துன்பங்களிசைவதாகும்-யோநிஜாதகமாகிய மத்தியலோகத்தவர்க்கும் புரியஷ்டகரூபத்தினுண்டான யாதனாசரீரத்தை யுடைய நரகஸ்தருக்கும் சூக்குமதேகத்திலே நின்றும் பூதசாரசரீரத்தையுடைய கருமதேவர்களாகிய ஸ்வர்கவாசிகளுக்கு சுகமும,நரகவாசிகளுக்கு துக்கமும, மத்தியலோக வாசிகளுக்கு சுகதுக்கங்களும, ஈஸ்வராஞ்ஞையினாலே யுண்டாம்.

[illegible]

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—o—

வேதாகமங்கள் பரம்பரையினாலும் சாக்ஷாத்தாகவும் சிவபணி விதிவாக்கியம் ஆதலால், அதைப்பணி விதிவழி நடப்

போர்க்கும் கடவாதோர்க்கு நிக்கிரகமநுக்கிர மிதுவென்று நி கழ்த்துகினமுர்.

வெளிப்பொருள்.

## சிவஞானயோகியருரை வருமாறு.

—o—

இனி 'தரணிபோடு தராபதிபோல' என்ற உவமைப்பொரு ளாக தெரித்துணார்த்துகினமுரா.

மேற் கூறியவாற்றான் இருவினை முதலாயின அழிவெய்து வனவாகலாநும், இதமகிதங்களெல்லாஞ் சிவபிரானே ஏற்றுக கோடலாநும, அவனேயினபத துனபங்களையெனைபது போந் தது. அதுவன்றியும், வேதாகமங்களாவன? சிவபிரான கற்பித தருளிய வாய்மொழியே. நரகமாவது அம்மொழிவழி நடவா தாரைத் தண்டிததற்பொருட்டு அவனுலமைககபபட்ட சிறை ககளமே! துறககவுலகமாவது அம்மொழிவழி நடபபோரை வாழவிததறபொருட்டு அவனுலமைககப்பட்ட கோணகரமே யாகலானும; உயிாகட்கு இனபதுனபங்கள அவனுலாகது பாலனவேயெனபதாம

இயைவதெனனுமொருமை அததொழினமேனினறது.

## நிரம்பவழகியருரை வருமாறு.

—o—

'ஒழுக்கம்'என்ற திருவிருத்தமுதல் 'அரனடி'என்ற திருவி ருத்த மீறுக ஏழு திருவிருத்தமுஞ் சிவபுண்ணிய மருளிச்செய் து,மேல் பரமேசுர னருளிசசெய்யப்பட்ட வேதத்தின வழி ய

தூலமாயிருக்கிற தேகாதிப்பிரவஞ்சந் தோன்றாது: தூலத்திலே நின்றும் தூலமுண்டாகவேணும். அப்படிச் சொல்லுகிறது அர்த்தமல்ல. சூக்குமத்திலே நின்றுந் தூலந் தோன்றவேணும். அதெப்படியெனில்?—மரங்களவித்திற் கிடந்தெழும - வித்திலே நின்று மரங்களானது ஓங்கி யெழுகிற முறைமைபோல், சூக்குமத்திலே நின்றுந் தூலமுண்டாகாநிற்கும்; அப்படித் தோன்றில் இரண்டுஞ் சேரவழியும் அதெனபோல,—மரமும் வித்துங் கழியும் பின்னை யழியுஞ் சூக்கம - மரமும் விதையுஞ் சேர வழிந்துபோகையாலே ஸ்தூலமழிந்து போமபொழுது ஸூக்ஷுமமுஞ் சேரவழிந்து போங்காலும் ஸ்தூலமழியுமொழிந்து ஸூக்ஷுமம் அழியாது. அதெனபோலவெனவில்?—மதிகளெழு கலைகளைபோல; வருவதுபோவதாமே - சந்திரனுக்குக் காரணமாகிய கலையொப்தொருகலை யெப்பொழுது மழியாமல் நிற்க, காரியகலைகள் ஒவ்வொரு விடங்களிலே யொடுங்கிக் கூடுகிறமுறைமைபோலக் காரணமாகிய மாயை நிற்கவே காரியமான ஸூக்ஷுமதேகமென்று சொல்லப்பட்ட தத்துவங்க ளொடுங்கிக் கூடும், இக்கலையொழிந்த ஸ்தூலதேகங்களைபோல வழியாது ஆகையால் காரணகாரியங்களுக்கு அழிவின்றியே யிருக்கவே காரியப்பட்ட தேகங்களு நிலையிற்றலே யுண்டாகாநிற்கும்.

இதனுற் சொல்லியது, ஸூக்ஷுமமாகிய மாயையிலே நின்றுஸ்தூலமாகிய தேகாதிப்பிரவஞ்சம் பரமேசுரனுலே கன்மத்துக் கீடாகத் தோன்றுமென்றும், உருவத்திலே நின்று முருவந்தோன்றாமல் அருவத்திலே நின்று முருவந் தோன்றுமென்றும். அதுக்குவமை சந்திரனுக்கு ஒருகலை காரணமாய் நிற்க மற்றுள்ள கலைகள் ஒன்றுக்கொன்று ஸ்தூலமாகத் தோன்றியும் ஒடுங்கியும் வருகிற தன்மைபோலும் என்னு முறைமையும்; அறிவிக்கிறது.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

——o——

உருவரு மரங்கள்-உருவமாய் விளங்குகின்ற மரங்கள்,—வித்திற் கதித்தெழும் - தனக்கு முதலாகிய வித்தினின்றே தோன்றி யெழுதல்போல,— வினையால் விதிப்படி-வினைக்கேற்ப விரைவருவினையால்,— உரு - இத்தூலவுடம்புகள்,— சூக்குமத்தே வரும்-தனக்கு முதலாகிய ஸூக்ஷுமவுடம்பினின்றுத் தோன்றும்,—மரமும்வித்துங் கழியும் - மரமழிந்தவழி யதற்கு முதலாகியவித்து முடனழியக்காண்டலின்,—பின்னழியுஞ் ஸூக்ஷுமமெனின்-அதுபோலத் தூலவுடம்பு கெட்டவழி யதற்கு முதலாகிய ஸூக்ஷுமவுடம்பு மழியும்போலுமெனின்? அற்றன்று. ஸூக்ஷுமத்தின் றூலந்தோன்றுதன் மாத்திரைக் கொருபுடை யொப்புமையல்லது முற்றுவமை யன்மையான,— மதிக்கெழு கலைகள்போல வருவது போலதாமே-சந்திரனுக்குளவாகிய கலை பதினாறிற் காரணமாகிய வொருகலை யழியாதிருக்க மற்றக்கலைக டோன்றுதலு மொடுங்குதலு மாகுதலின், இங்கே வுருவமாக வுத்திட்டா,—மரந் தோன்றுதல் வித்தையின்றி யமையாதவாறுபோல வத்தூலவுடம்பு தோன்றுதலுந் தனக்கொரு முதலில்வழிக் கூடாதென்னு மருத்தாபத்தியா னஃதுண்டென்ப தறியப்படுமென்பதாம், ஸூக்ஷுமவுடம்புண்மைக்குப் பிரமாணங் கூறியவாறு.

இவை மூன்றுசெய்யுளானுஞ் ஸூக்ஷுமவுடம்பு முதற்காரண மாமாறுணாத்திக் தானபல பேதங்காட்டுதல் பற்றிச் சற்காரியவாதத்திற் கிழுக்கின்மை கூறப்பட்டது.

## மறைஞானதேசிகர் உரை.



**ஆன்மாக்க ளிச்சரீரத்தை யெடுக்குமிடத்து ஸூக்ஷுமமே காரணமோ, அஃதன்றிக் காரணம் பல**

உளதோவென்று வினவுமாயைமுதலெ
ன்றுக்கொன்று காரணமா யிருக்கு
மெனபதூஉங் குண்டலி சரு
வோபாதானமென்பதூஉ
முணர்த்துகின்றார்

தூலமா முருவினுக்குச் சூக்கும முதலதற்கு, மூ
லமா னதற்குமூல மோகினி யதன்முதற்றே, மேலதா
ம் விந்துசத்தி சிவமிவை மிசையாமெல்லாஞ், சாலவி
ன் றாகுமாணமாச் சிவத்தினைச் சார்ந்தபோது. (௯௦)

(இ-ள்) தூலமா முருவினுக் குச் சூக்கும மூலம். — பஞ்சபூத பரிணாமமான தூலசரீரத்திற் குப் புரியட்டதேகமான சூக்குமசரீரமே மூலம்.

அதற்கு மூல மான — அக்கூக்குமதேகத்துக்குக் காரணம் மூலப்பிரகிருதி.

அதற்கு மூல மோகினி — அப்பிரகிருதிக்குக்காரண மாயை.

அதன முதற் றே மேலதாம விந்து — அசுத்தமாயைக்கு மேலாய பரமமான வுபதானமாயிருக்குங் குண்டலி.

சத்தி சிவமி வை மிசையாம் — இதைக் குண்டலிக்கு மேலாஞ் சத்தி. இவையிற்றுக் கெல்லா மேலாய்ப் பரமகாரணமா யழியாமனிற்குஞ் சிவம்.

எல்லாஞ் சா லவின் றாகுமா ணமாச் சிவத்தி னைச் சார்ந்த போது. — ஆன்மா யாதொரு போது சகலவுபாதி வாச்சிதமான பிரமத்தைப் பொருந்தினபோது, இதைப் பேதங்களெல்லா தோற்றமில்லையாம். எ-று.

சூக்குமதேகத்திற்கு முதற்காரணம் பிரகிருதி. (தன்மாத்திரை ஐந்து, மனம் புத்தி அங்காரமுமாக எட்டெனும் வசனத்தாற் சூக்குமப் பிரகிருதி முதற்காரணம். எட்டுக்கொத்தென்று கொள்ளுமிடத்துப் பூதக்கொத்து, தன்மாத்திரைக் கொத்து, கன்மேந்திரியக் கொத்து, ஞானேந்திரியக் கொத்து, அந்தக்கரணக்கொத்து, குணக்கொத்து, பிரகிருதிக்கொத்து, கலாதிஐந்துமொருகொத்து, ஆக எட்டும் புரிகிற சூக்குமதேகத்தில் அட்டகம். புரியட்டகமென்று கொள்ளுமிடத்துப் பிரகிருதிமாயை இரண்டும் முதற்காரணமெனவறிக)— அதற்கு மூலமோகினி - அந்தப் பிரகிருதிக்கு முதற்காரணம் அசுத்தமாயை,—அதன்முதற்கும் மேலாம் விந்து-அந்த அசுத்தமாயைக்கு முதற்காரணம் உபரியனாயும் சுத்தமாயை,—சத்தி சிவாதிவை மிசையாம் - அந்தச் சுத்தமாயையைச் செலுத்தும் பராசத்தியும் பராசத்தியைச் செலுத்தும் பரசிவமும் மேலாய் விரியும்,—எல்லாம் - இப்போது சொல்லிய பிரபஞ்ச பிரபஞ்சமெல்லாம்,—ஞானமாச் சிவத்தினைச் சார்ந்தபோது - தனது சொரூபமாகிய சிவத்துவாபி வியத்தியைப் பெற்றபோது,—காலமின் றுகும் - பந்திப்பிக்கும் முறைமையை விட்டுருக்கும்.

மதங்க பாரமேசுரத்தில் சிவத்துவம் பெற்ற முத்தான்மாவைக் குறித்துச் சிவன் பிரேரகரல்லர், சிவனைக் குறித்து அவனும் பிரேரியனல்லனென்று பேசப்பட்டது.

"பச்சார்த்தத்தே சிவத்வேஞை, காரணத்வேந காரணம்;
நதம்பிரதிகதாசித்ஸ்யாத், ஸோபிகார்யத்வ கோசராத்;
அதீத. பரிபூர்ணச்ச ஸவதந்திரஸ் ஸசவதேமுக."

---

# சிவஞானயோகியருரை வருமாறு.

—0—

தூலவுடம்பிற்கு முதற்காரணஞ் சூக்குமவுடம்பு, அதற்கு முதற்காரணம் மூலப்பகுதி, அதற்கு முதற்காரணம் மோகினி, அதுவே பரம முதற்காரணமென்பபிற. ஏனைக் குண்டலி விசுத்தியோவெனின்? அது சுத்தமாய், இவையனைத்திற்குமவி யாபகமாய் நிற்கும் இவ்விருவகைப்பிரபஞ்சமும் ஆன்மாக்கள் சிவத்தினைச் சார்தற்கேதுவாகிய பக்குவகாலஞ் சார்தற்பொருட்டு இப்பெத்தகாலத் துளவாயனவென்பதாம்.

அதன்முதற்றென்பது அம்மூலப்பகுதிக்கு முதலாகிய தாயென இருபெயரொட்டுப் பண்புத்தொகையாய் மோகினியின்மேனின்றது.

அதன்முதற்றென்னாறுவதிக்து மேலதாமெனப் பரம முதற்காரணமாகக் கூறப்பட்டது.

இவ்வாறன்றி முதலென்றதனை எழுவாயாக வைத்துரைப்பார்க்கு, றகரவிரட்டித்தல் பொருந்தாமையுஞ் சித்தாந்தத்திற்கு ஒவ்வாமையுமுணர்க.

சிவமென்றது முன்னையது சுத்தமென்னும் பொருட்டு
சாலவாகுமென வினையும்.
சாலுதல் அமைதல்.
சார்தவென்னும் பெயரெச்சம் ஏதுப்பொருள்கொண்டது.
இதனானே மேலதனைக்கணிகமுமாசங்கை நீக்கி வருஞ்செய்யுட்குத் தோற்றுவாயுஞ் செய்யப்பட்டது

'இருவினையினபம்' என்னுஞ் செய்யுண்முதல், இதுகாறும் முதற்செய்யுளின் 'அலகிலாவுயிர்கள்கன்மத்தானையினணுகத் செல்ல' என்றவிரண்டாங் கூற்றை வலியுறுத்தியவாறு.

## நிரம்பவழகியருரை வருமாறு.

—o—

இப்படிச்சந்திரனுக்குக் காரணகாரியம் பலவாயிருக்கிறதன்மைபோல மாயாகாரணகாரியமும் பலவாயிருக்குமோ வென்றயைநோக்கி, அப்படிப் பலவாயிருக்குமென் றருளிச்செய்கிறார்.

தூலமாமுருவினுக்குச்சூக்குமம்முதல - தூலகாரியமான தூலதேகத்துக்குப் புரியட்டகமான சூக்குமதேகம் காரணமாயிருக்கும் — அதற்குமூலமான் - அந்தப்புரியட்டகதேகத்துக்குக் காரணமாயிருக்கு மூலப்பிரகிருதி — அதற்குமூலமோகனி - அந்தப்பிரகிருதிமாயைக்குக் காரணமாயிருக்கும் அதோ மாயை,—அதற்குமுற்றுமேலதாம் விந்துசத்தி - அந்தஅசுத்தமாயைக்கு முதன்மையாய் அதற்கு மேற்பட்டதுமா யிருக்கும் விந்துவென்றுசொல்லப்பட்ட சத்தித்துவம் — சிவமிவைமிசையாம் - இவையிற்றுக்கெல்லாம் சிவதத்துவமேலாயிருக்கும். இவைபாசமானவை ஒருக்காலும் விட்டுநீங்காவோ வெனில்?—எல்லாஞ்சொல்லின் முத்தமாமாச சிவஞானச் சாதகபோது - ஆன்மாவுக் கிருவினையொப்புமலபரிபாகமும் உண்டான வக்காலத்து ஆசாரியனாலே யுண்மையைப் பெற்று அந்தச்சிவத்துடனே யானபொழுது, இங்ஙனஞ்சொல்லப்பட்டவை யெல்லாம் விட்டுநீங்கி நேராக வில்லையாய்விடும்.

இதனாற்சொல்லியது தூலசரீரத்துக்குக் காரணஞ்சூக்குமசரீரமென்றும், சூக்குமசரீரத்துக்குக் காரண மவ்வியத்தமென்றும், அவ்வியத்தத்துக்குக்காரணம் காரணமாயையென்றும், அந்தமாயைக்கு முதன்மையுமாய் மேலுமாயிருக்கும் விந்து சத்தியென்றும், இவையெல்லாத்துக்கு மேலாயிருக்கும் சிவதத்துவமென்றும், இவையெல்லாம் நேராகவில்லையாய்ப்போம் ஆ

ரணம்யாதெனன்? அவனுக்கொருபிரயோ
சனநிமித்தமன்று, ஆன்மாக்களோமோ
க்ஷமடைவிப்பிக்கையேகாரண
மென்றுணர்த்துகின்றார்.

அரன்விதி யருளதென்றே யறைந்தன னதுமுன்னே
துரைதரு கருந்துறக்கந் தனுகரணாதி யெல்லாம்
வருவது செய்தநாதி மலங்களிம் மருந்தாறீர்த்துப
பரகதி யதுவுந்தந்து பாதபங்கயமுஞ் சூட்டும். (௫௧)

(இ-ள்.) அரன்விதி யருளதென்றே யறைந்தன னதுமுன்னே — முதற்சூத்திரத்திற் சிவஞானமாகக்களைக் குறித்துச் செய்யுஞ் செயல்களெல்லாம் 'நிக்கிரகங்கடானு நேசத்தால் ஈசன்செய்வன' என்றும் 'மன்னுயிர்களுயவிபாதி மருத்துவன்' எனவுவமித்து முன்னேயுணர்த்தனன்.

துரைதரு கருந்துறக்கந் தனுகரணாதி யெல்லாம் வருவதுஞ் செய்து — அரிதாகிய சொர்க்கமுதலிய மூவிடத்துக்குரிய தனுகரண புவனபோகங்களை யெல்லாமுண்டாகும்படிக் கற்பித்து,

அநாதி மலங்களிம மருந்தாறீர்த்து — அநாதியாய் வருகிற மலமாயாதியாகிய வியாதிடைய போகருகல் பொருட்டௌடதமாகிய சுவர்க்கநரகங்களிலுண்டான போகங்களைப் புசிப்பித்துத் தீர்த்து,

பரகதி யதுவுந்தந்து — மேலான சிவானந்தானுபூதியைக் கொடுத்து,

பாதபங்கயமுஞ் சூட்டும். — தனது காருண்ணியத்தாற் சீர்பாதகமலங்களை யிடைவிடாமற் பொருந்தியிருக்கும்படி சூட்டாநிற்கும். எ-று.

உம்மை - எண்
இசற்குக கிரணுகமம். (ருக)

---

## சிவாக்ரயோகியருரை வருமாறு.



மேல்காததா தநுகரணுங்களைக் கூட்டிப் புசிப்பித்து,மல பரிபாகத்தில அநுக்ரகமபண்ணி, மோக்ஷத்தைக் கொடுத்த லையுணாத்துதல.

அரனவிப்யருரெனறே முனனேயுரைத்தனன - சிருஷ்டியாதி கருத்தியஙகளை அரனுடைவாய்பணணுகிறது அருளினு லேயென்று முனனேசொனனோம — அதுவுநதவிர கருத்து ராககந தநுகரணுதிபெல்லாம வருவதற்குச்சேய அநாதிமலங்க ளும மருநதாறறிக்கும பரசத்தியதுவுநதது பாக்கியமுஞ் சூட்டும - அநதஅநாயதமம பூமியிலுமநரகத்திலும சுவாக்க ததிலும காமாநுகுணமாகப பொருநதுகிற ஆனமாககளுக்கு தேகததையும மனசுமுதலாகிய கரணஙகளையும புவனஙகளை யும போகஙகளையும இவையெல்லாங கூடியதாகப பணணி, அ நாதிமலமாகிய ஆணவம மாயை காமமகமெனறும ஆனமவி யாத்திகளை சுகதுககஙகளாகிய ஒளஷதத்தையும புசிப்பித்துப் போககி, முனனடைநத அதிகாமாககததையொழித்து, ஊர் தவமாயிருக்கிற ஞானமாாககததைப பிரகாசிப்பித்து, சாவக ஷ்ப்பாதமெனனு முறைமையாலே சிவன தனது சாயுசசியத்தையு ங்கொடுப்பா.

பாதபங்கயமெனறது ரூபகம.

பரமானநதாமிருதமாகியமதுவை ஜீவாத்மாவாகிய †ப்ர மரம் புசிக்கப்பண்ணுவரென றிதனபொருள †பரமரம்-வணடு.

மாயாகாாயமாகிய தநுகரணுதியால் காரண மாகிய

கர்மங்களுக்கு நாசமெவ்வாறென்னில்? காஷ்டத் தக்கினி, காஷ்டத்தை தகிக்குமாப்போல வெனவறிக

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

---0---

சுத்தமாயையி லசுத்தமாயை தோன்றுமென்றுஞ் சூக்கு மதேகத்திற் றூலதேகந் தோன்றுமென்றுஞ் சொல்லுஞ் சைவ பௌராணிக மதானுசாரிகளா யிருக்கின்ற வாசாரியாமத மனுவாதித்து, சுத்த சைவசித்தாந்தாசிரியர் சொல்லு மதானுசாரமாய்; சுத்தமாயை நித்தியமென்றும, முடிவி லஷ்டசமென்னுந் திருவிருத்தத்தாற் றூலதேகஞ் சாதாரணத்தனுவ புவனமாகிய முற்றகாரணத்தி னின்றுஞ் சூக்குமதேசத்தை நிமித்தகாரணமாகப் பண்ணிக்கொண் டுண்டாமென்று முதாகரித்தற் குபக்கிரமிக்கின்றார்.

அரனவிதி - பதிபஞ்சகிருத்தியம்,—அருளா லென்றே முன்னேயுரைத்தனம - அந்தச் சிவனது பஞ்சகிருத்தியம நிக்கிரக ரூபமாயிருக்கின்றது மனுக்கிரகந்தானே யென்று முன்பதி பரீக்ஷையிற் சொன்னோம, அப்படியே,— அதுவும் - அந்த வருளுந் தொழிலும்,—தரை நரகந் துறக்கந் தனுகரணாதி யெல்லாம் - தங்களது கலப்பிறுமேல் மட்டரிபாகத்தைப் பண்ணுஞ் சூக்கும தேகந் தூலதேக முதலிய மாயாகாரியங்களை,— வருவதுஞ்செய்து - மாயையினின்று முற்பத்திபண்ணி,—இம்மருந்தால - இந்தமாயாகாரியமாகிய ஔடதத்தால்,—அநாதி மலங்களதீர்த்து - மலமாயா கன்மங்களைப்போக்கி,—பரகதி யதவுந் தந்து - பரகதிலே போசித்து,—பாதபங்கயமுஞ் சூடும் - சிவத்துவாபி வியத்தியையுஞ் செய்யும்.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

———o———

இனி, இருபத்திரண்டுசெய்யுளான் முன்னுறக் கூறியனக ட்டபிம முறைமையெல்லாந் தெரித்துணர்த்துகின்றார்.

எல்லாஞ் சிவத்தினைச் சார்ந்தபோது சாலவினையுதலாகி ய வதுவும், இலயம் போகம் அதிகாரமென்னும் அவத்தைகளி னின்று இறைவன் செய்யுஞ் செயதியொன்றும், அது கருமரியவ யென்றும், தொகுத்தும் வகுத்தும் மேலே கூறியபோந்தாமா கலின், அத்தனுக்கிரகருத்திகள் மலகன்மங்களாகிய நோக்குருக் கராக அவலூமைக்கப்பட்டன அவற்றால் அநேகோய்த்தாக்கவ ழிப் பரஞானத்தை விளக்கிச் சிவானந்தப்பெருமபேறுய அவ் வாற்றாகப்படுமென்பதாம்.

சதியென்பது ஞானத்தினையுணர்த்தல் வடமொழிமதம

முன்னேயுரைத்தன ன்னறதனுல் அமர்ந்துசெல்க்க க

ஊஉனுகறசட்டப்படியியல்பெல்லாம் ஈண்டே கூறறபாலனவாயி னும், ஒவ்வொரியைப்புபற்றி ஆண்டாண்டு ஒருங்குவைத்த நோக்க ப்பட்டன; அவையெல்லம் ஈண்டுபத்துரைத்துக்கொண்டினாக வென்பதூஉமாயிற்று.

மாயாகாரியமெல்லாஞ் சிவத்தினைச் சார்தற்பொருட்டா மாறு யாங்ஙனமெனனுஉ ஆசங்கையை நீக்குதற்பொருட்டு, அ நாதிமலங்களிரண்டுநீர்த்தப் பரகதியதுவுதசந்து யாக பங்கயமுஞ சூட்டுமென்னுர்.

மலந்தீர்க்கு முகத்தால் அவை யங்ஙனமாமென ரவாமுயி ற்று.

"இலனென்றுதீயவை செய்யற்க" என்றாற்போல அனவீ று ஈண்டுத் தன்மைக்கண் வந்தது.

பித்து,—அநாதி மலங்க ளிம்மருக்காற்றீத்து-அநாதியே யுள்
ளவனே யுள்ள மலமாயா கன்மங்களை நரக சுவர்க்கமுதலாக
ச்சொல்லப்பட்ட இரக ஔஷதங்களாலே போக்கி, இப்படி
கன்மங்களைப் பூமியிலேயிருந்து ஆர்ஜித்தும் நரகசுவர்க்கங்
களிலேபோ யனுபவித்தும் தொலைந்து கன்மமொப்பு வந்தவ
வசரத்து,— பாசுதி யதுவுந்தந்து பாதபங்கயமுஞ் சூட்டும்-
மேலான மோட்சத்தையும் திருவுளமையறி சிரபாதமாகிய
தாமரைமலர்களையும் காட்டித்தரும்.

இந்நூற் சொல்லியது, பரமேசுரன் செய்கிற திருநடங்
களெல்லாம் ஆயுதமையிய காருண்ணியமென்றும், சொர்க்கநரக
முதலாகச் சொல்லப்பட்ட ஔஷதங்களாலே ஆன்மாக்களு
க்கு அநாதியேயுள்ள மலமாயாகன்மங்களைப் போக்கித் தனது
திருவடியையுங் கொடுப்பனென்று முறைமையுமறிவித்தது.

சூத்திரம் 'விதிப்படி' 'தூலமாமுரு' 'அரனவிதி' ஆகத்
திருவிருத்தம் நான்கு புக்கன.

'இருவினை' என்ற திருவிருத்தமுதல் 'அரனவிதி' என்ற தி
ருவிருத்த மீறாகத் திருவிருத்தம நாற்பத்தெட்டும் கன்மமலத்தி
ன காரணகாரிய மருளிச்செய்ததெனக் கொள்க.

---

## சுப்பிரமண்யதேசிகருரை வருமாறு.

—o—

அதுவும் - எல்லாஞ் சிவதத்தினைச் சார்ந்தபோது சால
வினமுந்லாகிய அதுவும்,— அரனவிதி-இலயம போகம அதி
காரம் என்னும் அவத்தைகளினின்ற இறைவனசெய்யுஞ் செய்
தியென்றும்,— அருளென்று-அது கருணையேயென்றும்,—அ
ரைந்தனன் முனனே-தொகுத்தும் வகுத்தும் மேலே கூறிப்
போந்தா மாதலின,—தரைகா சருந்துறக்கத் தனுகரணதியெல்

லாம்-பூமி நரக மரிய துறக்கம் முதலியவற்றிற்சென றப்பயனை யனுப்பவித்தற் கேதுவாகிய தனுகரணாதிகளை,—வருவதனைச்செய்து - உண்டாகச்செய்து,— அநாதிமலங்கள் - அநாதிமல கனமங்களாகிய நோய்களை,—இம்மருந்தாற்றீர்த்து - இத்தனுகரணாதிகளாகிய மருந்துகளினாலே தீர்த்து,— பரகதி யதுவுந்தந்து - பரஞானத்தைவிளக்கி,—பாதபங்கயமுஞ் சூடும - திருவடித்தாமரை சூட்டுதலாலாகிய சிவானந்தப்பெருமையையு மவனாற்றரப்படும்.

இதனானே மேற்கூறிப்போந்த தூல சூக்கும மான போகி வி விந்து வெல்லாம், மருத்துவனுக்கு மருந்துபோல மலவயித்தியனாகிய வரனுக்குப் பரிக்கிரக விபூதியாதல் கூறப்பட்டது.

---

## மறைஞானதேசிகர் உரை.

இங்ஙனங் கூறிய மாயாகாரிய மான்ம போசத்தை
மறைக்கும் தொழிந்த மலங்களைப் போக்கவற
றேவென றைக்கவாதிகூற, இத னுவா
தி யசுத்தமாயினு மஃதில்லாவிட்டு
து மோட்சத்துக் கேதுவின
றென றுதாரணபூர்வமா
க வுணர்த்துகிறார்.

எழுமுடல் கரணமாதி யிவைமல மலமலத்தாற்,
கழுவுவ தென்றுசொன்ன காரண மென்னையென்னி
ற், செழுநவ வறுவைசாணி யுவர்செறி வித்தழுக்கை,
முழுவதுங் கழிப்பன்மாயை கொடுமல மொழிப்பன்மு
ன்னோன். (௫௨)

| | |
|---|---|
| (இ-ள்.) எழுமுடல் கரணமாதியிவை | மாயையினக ணுண்டாகிய தனுவாதிக ளெல்லா மலசம்பந்தமாதலான மலமெனப பெறும். |
| மலம் | |
| மலமலததாற கழுவுவனென றுசொனன காரணமெனனை யெனனில் | ஆணமாவுக சிகந மாயாமலததைக் கூட்டி மூலமலததைப போககுவனெனறு நீர் சொனனதெனனெனில்? |
| செழுநவ வறுவைசானி யுவர் செறிவித தழுககை முழுவதுவககழிப்பன | மேனமைபொருநதிய புதுமையினையுடைய புடைவையை, கோவினது மலமாயிருககிற சாணக முவர் காரமுதலியவாருற காருவாக னவைகளிற சேர்நது நினமலமாக் காநிற்பன. அதுதனமைபோல, |
| மாயை கொடுமல மொழிப்பன முனனேர்.ன. | மலினமாயிருக்கிற வானமாவைச சிவனுங கலாதியாகிய மலினததைக கூட்டிதத னது கிரியாசததியால் அதனைப் போககாநிற்பன. எ-று. |

இதற்குக் கிரணுகமம். (நிஉ)

---

## சிவாக்ரயோகியருரை வருமாறு.



மேலுதாரணம்.

எழுமுடல்கரணமாதி யிவைமல மலமலத்தாற் கழுவுவனென்றுசொனன காரணமெனனையென்னில் - உண்டாகப்புட்டதேகமும் மனஇந்திரியாதிகளு மிதகளெல்லாம் அஞ்ஞான

ம. அஞ்ஞானத்தை அஞ்ஞானங்கொண்டே போக்குவனென்று எதுபோலெனனின்?— செழுந்தவராகியவை சாணியுவா செறிவித்த அழுக்கை முழுவதுங் கழிப்பன மாயைகொடு மலமொழிப்பன் முன்னோன்- இவ்விடத்தாக + காருவானவன் அழுகியகோடிப் புடைவையிலே சாணியு முவாமண்ணுந் தோய்த்து மிகவுங் கறுத்துப்போகச்செய்பவனேனினும், முன்னேயிருந்த அழுக்கையுங் கூடவிடுவித்து மிகவும் வெண்மையாக்குவன் அப்படிப்போலக் கர்த்தாவானவன் மாயாகாரியங்கொண்டே ஆன்மாக்களுடைய அஞ்ஞானத்தைப் போக்குவனென்றிதன்பொருள்.

+ காரு - வண்ணான்.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

———0———

மாயாகாரியத்தால் மலத்தைப் போக்குமெனப்பட்டதெ ன்னை வடுக்குமென றுரைக்கின்றார்

எழுமுடல் கரணமாதி யிவை மலம் - மாயையினுண்டாகிய சரீரகரணாதிகளெல்லாம் அழுக்கு—மலமலத்தால் கழுவுவனென்று சொன்னதாராலென்னையெனின் - ஆணவமலமாகிய அழுக்கை மாயாமலமாகிய அழுக்கினாற் போக்குவனென்பது எங்ஙனேயெனின்?—செழுந்தவராகியவை சாணியுவா செறிவித்து - அழுகிய கோடிப்புடைவையிற் சாணியுவாமண் முதலியவற்றைப் பிசறி,—அழுக்கைமுழுவதுங் கழிப்பன- புடைவையின் முன்னிருக்க தோஷத்தோடாகந்துக தோஷமுற்றுங் காருவானவனீக்குவன்,அப்படி,—மாயைகொடு-மாயாமலத்தினால்,— முன்னோன் - சிவன்,— மலம்-ஆணவமலத்தை,—ஒழிப்பன.

## சிவஞானயோகியருரை வருமாறு.

—0—

அழுக்கைக்கொண்டு அழுக்கை நீக்கவேண்டுதலின், மாயேயமலமே ஏனை மலங்கட்கு மருந்தாகக் கூறப்பட்டனவென்பதாம்.

மலம் அழுக்கு என்பன ஒருபொருட்கிளவி.

இதனுண்மை மேலதுவலியுறுத்தப்பட்டது.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

—0—

இப்படி நீர் முன்சொல்லப்பட்ட மாயாகாரியங்கள் ஆன்மபோதத்தை மறைக்கும் தொழிந்து, மலங்களெல்லாம் போக்குமென்று நீர் சொன்னதெப்படியென்ற ஐக்கவாதியை மறுத்தருளிச்செய்கிறார்.

எழுமுடல கரணாதி யிவைமலம்-உண்டாகப்பட்ட தனு கரண புவனபோகமென்று சொல்லப்பட்ட இவையெல்லா மாயாமலம்,—மலமலத்தாற கழுவு வென்றுசொன்ன காரணமென்னையெனனில் - இந்த மாயாமலத்தைக் கொண்டு ஆணவமலத்தைப் போக்குவனென்று நீர் சொன்னபடி யெப்படி யெனனில்?—செழுநவ வறுவைசாணி யுவர் செறிவித்து அழுக்கை முழுவதுங் கழிப்பன - வாப்பமும் புதுமையும் பொருந்தியிருக்கப்பட்டின்ற புடைவையை சாணத்தையும் உவரையுங் கூட்டி யதனுடைய வழுக்குக்களெல்லாததையும் ஒருதன போக்காநிற்பன அத்தன்மைபோல்,—மாயைகொடு மலமொழிப்பன் முன்னோன் - பரமேசுரன் மாயையிலே யுண்டான தனு கரண புவன போகங்களைக் கொண்டு, ஆணவமலத்தினது விருத்திகளைப் போக்காநிற்பன.

இதனாற் சொல்லியது, மாயையும் மலம், ஆணவமு மலம். ஆனால் ஒரு மலத்தைக்கொண்டு ஒருமலத்தைப் போக்குவனென்றதெப்படியென்ன? புடைவையி லுண்டான வழுக்கை சாணத்தையு முவரையுங் கூட்டி யதனுடைய வழுக்குக ளெல்லாத்தையும் ஒருத்தன் போக்குந் தன்மைபோல, பரமேசுரனு மாயாமலத்தைக்கொண்டு ஆணவமலத்தைப் போக்குவனென்னு முறைமையு மறிவித்தது.

---

## சுப்பிரமண்யதேசிகருரை வருமாறு.

எழுமுடல் கரணமாதி யிவைமலம் - எழுகின்ற தனுகரண முதலியனவு மலமாம்,— பலமலத்தாற் கழுவுவனென்று சொன்னகாரணமென்னை யெனின் - மலத்தைமலத்தா னீக்குவனென்று சொன்ன காரணமியாதெனில்?— செழுநவுறுவை - செழிப் கோடிவஸ்திரத்தில்,— சாணியுவர்செறிவித்து - சாணமுவர்மண்முதலிய வழுக்கைக்கொண்டு,— அழுக்கை முழுவதுங்கழிப்பன் - அழுக்கை முழுவதுங் கெடுக்குஞ்செய்யும் வண்ணான்போல,— முனிவோனுமாயையொடு மலமொழிப்பன் - முதல்வன் மாயையமலத்தினை மருந்தாகக்கொண்டு வினைமலங் களைந்திடப்பனென்பதாம்

இதனானே மேலது வலியுறுத்தப்பட்டது

---

## மறைஞானதேசிகர் உரை.



இங்ஙனங்கூறிய கன்மத்தான, மாயாதனுவிற் போகம் புசிப்பிப்பனென்றீர், அஃதொசரும மாயவி லக்கணம் யாதென? மேலுணர்த்துகிறார்.

நித்தமா யருவாயேக நிலையதா யகிலத்துக்கோர், வித்துமா யசித்தாயெங்கும் வியாபியாய விமலனுக்கோர், சத்தியாய்ப் புவனபோகந் தனுகரணமுமுயிர்க்காய, வைத்ததோர் மலமாயமாயை மயக்கமுஞ் செய்யுமன்றே. (ருக)

| | |
|---|---|
| (இ-ள்) நித்தமாய | பிரபஞ்ச சங்காரத்தில் இலீனமுற்றான மீளவு மிதனையுண்டாக்குமதற்கோ ருபாதானமில்லையாதலாலே யிதற்கநித்தியத்துவங் கூடாதபடியினாலே நாசமில்லாததாய், |
| அருவாய் | ஆன்மாக்களைச் செய்த கன்மத்துக்கீடாகப்பிரவிருத்தியிற்றோன்றிய பதார்த்தங்களைப் புசிக்கும்படி யிச்சையைப்படைத்திருக்கவுந்தான் றோன்றாததாய், |
| ஏகநிலையதாய் | அநேகமென்கிறதிற் பிரமாண மில்லாதபடியா லொன்றாதாய், |
| அகிலத்துக்கோர் வித்துமாய் | சகலசகத்துக்குங்காரணமாய், |
| அசித்தாய் | காரியஞ் சடமாயிருக்கையினாலே தானுஞ்சடமாய், |
| எங்கும் வியாபியாய் | எவ்விடத்துங் காரியங் காணப்படுகையினாலே வியாபகமாய், |
| விமலனுக்கோர் சத்தியாய் | நின்மலனான சிவனுக்குப் பரிக்கிரக சத்தியொன்றாய், |
| புவனபோகந் தனுகரணமுமுயிர்க்காய் | ஆன்மாக்களுக்கு மாயேயமான தனுவாதிகளை யுண்டாக்குவதாய், |

| | |
|---|---|
| வைத்ததோர் மலமாய மாயைமயக்க முஞ் செய்யுமன்றே. | ஆணவ மாயை கன்மமென மூவகைப்பட்ட மலங்களில் ஒன்றெனறுசொல்லுமதாய், மாயையான தானமாககளை மயககததை யுஞ்செய்யாநிற்கும—எ-று. |

எல்லாசகததையு மயசகததைப பணணுகையான மாயையெனறா (௺௩)

---

## சிவாக்ரயோகியருரை வருமாறு.



மேல் மாயாலக்ஷண முணாததுகல்

நிதநமாய் - காரிய காரண மிரணடிம அநிததியமெனனும் பௌதகமசு §நிராசாாததமாக,—அருவாய்-ரூபமாயிருக்கிற பரமாணுவேகாரணமெனறுமதையாயிகமதநிராசாாததமாக,—ஏகநிலையதாய்-வேதாநதைக தேசியைபபோல் பிரதிபுருஷ நிய தமாக மாயையுண டெனபதனறி சகலராகிய ஆனமாககளுககுச சாதாரணமாக மாயையொன்றேயெனறது,—அகிலதது ககோா விததுமாய் - பிரபஞசம சூனயோபாதாந மெனனும் மாததியமிகமதமபோலனறிச சாகோபசாகாதிகளையுடைய விருக்ஷததுககு சூக்குமமாகய விததுப்போல ஸ்தூலமாகிய பிர பஞசததுககு சூககுமமாகிய மாயையுணடெனறது,—அசிததாய் - சிற்சத்தியே ஜகதுபாதாந காரணமெனனும் அததைவ தவாதி நிராசாாததமாக் ஜடமெனறது,—எங்குமவியாபியாய் - ஸ்வகாரியமாகிய முபபதகொரு தத்துவஙகளிலும் தத்கா ரியமாகிய தாததுவிகஙகளிலும வியாபிதது நிற்பதாய்,—விம லனுககோா சததியாய் - நினமல சிவனுககொரு பரிககிரக சததி யாய்,—புவனபோகக தனுகரணமு முயிர்க்காய்-ஆனமாக்களு

[illegible Grantha verse]

குணத்திரய சாமியாவஸ்தா ரூபமாயிருக்கிற அவ்யக்த மென்றும் பிரதானகாரணமென்னப்பொருந்தும் மாயையென்று மன்றிவ [illegible] குணங்களானது மூலகாரணமாகாது.
† தார்க்கிகர்களிலே குண சாமியாவஸ்தையல்லாமல் பரி ணக்காக பிரகிருதியில்லையென்று சொல்லுவார்கள், அது பிரமா ணிக்கல்ல குண சாமியாவஸ்தைக்கு பரப்ப பிரகிருதியெ ன்பதே சித்தாந்தம் ஆகையால் அதுமூலகாரணமல்ல

† தார்க்கிகர்-வேறு சித்தாந்தம். சாமியம்-சமானம்.

[illegible Grantha verse]

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

---

இதனால் அசுத்தமாயையினிலக்கணமேதெனவிசைக்கின்றார்.

நித்தமாட — காரிய காரணங்களிரண்டுமே அநித்தியமெனனும் பௌத்தர்க்குப்போல அநித்தியமின்றி,—அருவாய்-உருவாகிய பரமாணுவே காரணமெனனுமையாயிகர்க்குப்போ லுருவமன்

றி,—ஏகநிலையதாய்-மாயை யனந்த மென்றும் சத்தெனறுஞ் சொல்லும் வேதாந்தைத்தேசிகரும் சுத்த வேதாந்திகட்கும் போல முறைமையி னநேகமின்றி சதசனறி,—அகிலந்தங்கோர் விதமாய்-சூனியோபாதானம் சூனியம் பிரபஞ்சமெனனும் பக்ஷத்தைச்சதேசிகருப்போலச் சூனியமின்றி,—அசித்தாய்-சித்பிரமோபாதானத்தினின்றும் சடசித் தாபத்தியாமென்று பரிணாமவேதாந்திகரும் நாராயணபிரசாதத்தினின்றுஞ் சடசித்துண்டாமென்னும் பாஞ்சராத்திரிகரும்போலச் சித்தன்றி,—எங்கும் வியாபிதாய்-கணுத்தொற்றிப் பூதவகாரணமென்னு மூலாகாயத்னுக்குப்போல அவ்வியாபியன்றி,—சிவனுக்கோரசத்தியாய்-சிவனுக்குச் சமவேத சிற்சத்தியொன்று பரிக்கிரக சத்தியிரண்டு ஆக மூன்றினுளொன்று பரிக்கிரக சடசத்தியாய்,—புவனபோகந் தனுகரணமு முயிர்க்காய் வைத்தகோசாமலமாய்-பிறபோக்கியப்பொருள்களையும் தூலசரீரத்துக்குச்சரீரங்களையு மிலக்கணையா லவைகளாலுண்டாகிய சிறப்பினையுங் கொடுத்த மாயாமலமாய்,—மாயை மயக்கமுஞ்செய்யுமன்றே-மாயையானது அந்தச்சிறப்பினைப்பற்றி நானசுகி நான துக்கியென்றுவரும் விபரீதஞானத்தையு முயிர்க்குப்பண்ணுந்தானே.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

—0—

இனி, அம்மாயைமாயேயங்களது இயல்பாவது என்னையென்பார்க்கு, அதனை வகுத்துக் கூறுவான்றொடங்குகின்றார்.

உலகிற்கு முதற்காரணமெனப்படும் மாயையாவது, நித்த மாதன் முதலிய இலக்கணங்களை யுடைய தென்பதாம்.

மாயையின் சொரூபங்கூறுவார், புவனபோகந் தனுகரண முமுயிர்க்காயென்றும், அதுவும் மாத்தமிகர் மதம்பற்றிச் சூனி

யத்திற் செல்லாமைப்பொருட்டு உலகத்திற்கோர் வித்துமாயெ
ன்றும், அதுவுங் கணிகவாதிகள் மதம்பற்றிச் சார்பினிற் செல்
லாமைப்பொருட்டு நித்தமாயென்றும், அதுவும் உலோகாயதர்
மதம்பற்றிப் பூதங்களிற் செல்லாமைப்பொருட்டு அருவாயென்
றும், அதுவும் வைசேடிகர் முதலியோர் மதம்பற்றிப் பரமாணு
களிற் செல்லாமைப்பொருட்டு எங்கும் வியாபியாயென்றும்,
அதுவுஞ் சாங்கியர் மதம்பற்றி முக்குணங்களிற் செல்லாமைப்
பொருட்டு ஏகநிலையதாயென்றும், அதுவும் பாற்கரியர் மதம்ப
ற்றிப் பிரமத்திற் செல்லாமைப்பொருட்டு விமலனுக்கோர் சத்
தியாயென்றும், அதுவுஞ் சிவாத்துவிதர் மதம்பற்றிச் சிற்சத்தி
யிற்செல்லாமைப்பொருட்டு அசித்தாயென்றும், அதுவும் மாயா
வாதி மதம்பற்றி அநிர்வசனத்திற் செல்லாமைப்பொருட்டுவை
த்தோர் மலமாயென்றும், இத்தன்மைத்தாகிய மாயை, ஆண
வமலம்போல மயக்கமே செய்யுமென்னுஞ் சைவருளொருசாரா
ரை மறுத்தற்பொருட்டு, மயக்கமுஞ் செய்யுமென்றுங் கூறினார்.

செய்யுளாகலின் முறை பிறழ வைக்கப்பட்டன.

ஈண்டு மயக்கமென்றது விபரீதவுணர்வை.

மயக்கமென்னும்மை, அது தனியியல்பன்மை யுணர்
த்தி நின்றது.

---

## நிரம்பவழகியருரை வருமாறு

—o—

இப்படிச் சொல்லப்பட்ட மாயையினுடைய இலக்கணம் எ
ப்படியென்ற மாணாக்கனை நோக்கி; மாயையினிலக்கண மருளிச்
செய்கிறார்

(அசுத்தமாயையானது) நித்தமாய்-அழியாததாய், —அரு
வாய் - ஒருவர்க்குந் தோன்றாததாய்,—ஏகநிலையதாய் - ஒன்று

விருக்கிற நிலைமையினையுடைத்தாய்,—அகிலத்துக்கோர் வித்து மாய் - பிரபஞ்சத்துக்கொரு காரணமுமாய்,—அசித்தாய் - அசேதனமுமாய்,—எங்கும்வியாபியாய் - எவ்விடத்திலும வியாபகத்தையுமுடைத்தாய்,—விமலனுக்கோர் சத்தியாய்-மலரகிதனாயிருக்கிற பரமேசுரனுக்கு தானொருசத்தியுமாய்,— புவனபோகதனுகரணமு முயிர்களுக்கா -ஆன்மாக்களுக்குத் தனுவுங்கரணமும் புவனமும போகங்களுமாய்,—வைத்ததோர்மலமாய்-மூன்றுமலங்களிலே வைத்தெண்ணப்பட்டதொருமலமுமாய்,—மாயைமயக்கமுஞ் செய்யுமன்றே - மாயையானது ஆன்மாக்களுக்குப் பொய்யைமெய்யாகவும் மயக்கத்தையுஞ்செய்யும்

நித்தமாய் எ-து தன் காரியமாயுள்ள முப்பத்தொன்று மழியுமிடத்துந் தன் காரணத்துக்கு அழிவில்லையென்றதெனக்கொள்க.

அருவாய். எ-து. காரணத்திலொழிந்த காரியப்படுமிடத்திலுந் தோன்றுதென்றதெனக்கொள்க

அசித்தாய். எ-து இதனாலே ஆன்மபோதத்தைச் சேர்ந்தசாமாயினும் சடமென்றதெனக்கொள்க.

எங்கும வியாபியாய். எ - து தன்னுடைய காரியமாயுள்ள முப்பத்தொன்றுக்கும எவ்வளவு வியாத்தமுடையது,அவ்வளவுந் தனக்கு வியாத்தமுடையதென்றதெனக்கொள்க.

புவனம் எ-து உலோகங்கள்

போகம் எ-து. அன்னமுதலானவையிற்றை.

தனு. எ-து. உடல்.

கரணம். எ-து. அந்தக்கரணமும் புறக்கரணமும்.

வைத்ததோர் மலமாய். எ-து. எண்ணப்பட்ட மலங்களிலொன்றுயென்றதெனக் கொள்க.

இதனாற்சொல்லியது, அசுத்தமாயை நித்தியமென்றும்,

அருவமென்றும், ஒன்றாயிருக்குமென்றும், பிரபஞ்சத்துக்குக் காரணமென்றும், சடமென்றும், எங்கும் வியாபக முடைய தென்றும், பரமேசுரனுக்குச் சத்தியாயிருக்குமென்றும், ஆன்மாக்களுக்குத் தனுகரண புவனபோகங்களுமா யிருக்குமென்றும், மூன்று மலங்களிலே ஒன்றாயிருக்குமென்றும், ஆன்மாக்களுக்கு பொய்யை மெய்யாக மயக்கத்தையுஞ் செய்யுமென்னு முறைமையு மறிவித்தது.

---

## சுப்பிரமண்யதேசிகருரை வருமாறு.

மாயை - உலகிற்கு முதற்காரணமெனப்படு மாயையானது,—நித்தமாய் - நித்தமாகியும்,—அருவாய் - அருவாகியும்,—ஏகநிலையதாய் - ஒன்றாகியும்,—அகிலத்துக்கோர்வித்துமாய் - உலகமுண்டாதற் கோர்வித்தாகியும்,—அசித்தாய - சடமாகியும்,—எங்கு மேவியாபியாய் - எவ்விடத்தும் வியாபகமாகியும்,—விமலனுக்கோர் சத்தியாய் - முதல்வனுக்கோர் பரிக்கிரகசத்தியாகியும்,—புவனபோக தனுகரணமுமுயிர்க்காய் வைத்ததோர் மலமாய் - புவனமும் போகமும் தனுவும் கரணமுமாக வுயிர்களின்பொருட்டு விரிந்ததோர் மலமுமாகியும்,—மயக்கமுஞ்செய்யுமன்றே - மயக்கத்தினையும் செய்தலாகிய இலக்கணங்களையுடையது.

---

## மறைஞானதேசிகர் உரை.

இந்த மாயையிற்றோற்றிய காலமுதலிய தத்துவங்களினது தோற்றமும், காலதத்துவத்தினது வியாபாரமு முணர்த்துகிறார்.

ல சங்கையினைப் பண்ணி

டாகிய போகங்களைப் புசித்தற்குத் துடிலவ நிமேஷமுதலிய காலங்களை யுண்டாக்கி அங்கங்குள்ள வானமாகக நெடுங்காலம் புரியாநின்றே மெனனைப்பண்ணி; அக்காலஞ் சடமாகலாற முனைப்பட்டதைக்கொடுக்கவறாதேயெனின்?

நாயகனுடைய யாலே நடத்துமென்று சகத்தை யெல்லாம

சிவன் றனதாகிய சத்தியாலே பிரபஞ்சமெல்லாத்தையு மிப்படி நடத்தாநிற்பன்.

அசுத்தமாயையிற்றோற்றிய காலமானது சுத்தமாயா புவனவாசிகளுக்குச் சிருட்டிமுதலிய கிருத்தியங்களையு மதிலுண்டாகும் போகங்களையுஞ் செய்வதெங்ஙனமெனில்? சுத்தமாயையிலுண்டாகிய சுத்தகாலந்தானே யந்தப் புவனவாசிகளுக்குச் சிருட்டி போக முதலியவற்றையுண்டாக்கிப் புரியாநிற்கும்.

இதற்கு மதங்கத்திற் சுப்பிரபேதத்தும் பௌஷ்கரத்து மறிக. (௫௪)

---

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

—o—

மேல் நாலுவிருத்தத்தால் மாயையிற் கலாதிதத்துவங்கள் தோன்றும் படியும், தத்கிரியைகளுங் கூறுகின்றது.

அசுத்த மாயையினாலே அநந்தேஶ்வர சத்திக்ருத க்ஷோபத்தினாலே முதல் காரியமாயையுண்டாம். மேல்-*போகாவதி பரிச்சேதகமாய் பூதபவிஷ்யத் வர்த்தமானாத்மகமாயிருக்கிற காலந்தோன்றி, சிருஷ்டிகாலமென்றும் ஸ்திதிகாலமென்றும்

சம்ஹாரகாலமென்றும் திரிவிதமாய், சாதாரணமாகவும் அசா
தாரணமாகவும் பிரதிபுருஷநியதமாய், தத்தத சரீரோற்பத்தி
யாதிகளுக் கேதுவாய், சர்வலோகநாயகராகிய ஈச்வரசத்தி
யான ஜநநிரோதயித்ரி ஆரிணியெனும் சதுர்தசநியதா திஷ்
டானத்தினாலே ஜகதுற்பத்தியாதிகளைப் பண்ணும்.

* போகாவதிபரிச்சேதகம் - போகமுடிவை யளவிடுகை.

இதற்குக் காலவாதி காலமானது ஏகமுமாய் விபுவுமாய்
பிரவாஹநாதி காரியங்களுக்கெல்லாம் ஏதுவாயிருக்கையால் நி
த்யமாயிருக்கிற காலத்துக்கு உற்பத்தியாதிக ளெப்படியென்னி
ல்? பூர்வாபர ¶ ப்ரதீதியுண்டாகையினாலே காலமநேகமும்
அநித்யமுமாம்.

¶ பிரதீதி - அறிவு

அந்த பூர்வாபர ப்ரதீதியானது ஸூரியகதியாதி யுபாதியி
னாலே வருவதல்லது, காலத்துக்கு பேதம் வாஸ்தவமல்லவெ
ன்னில்? அந்த வுபாதியினாலே தானே காலவ்யவஹாரம் வரு
மாகில், காலமே யில்லாதேபோகத் திரியும்.

காலமொன்றேயாகில், இன்னகாலத்திலே யின்னதாம் இ
ன்னகாலத்திலே யின்னதாகாதென்றும், அந்தவ்யவஹிதிநேசமுங்
கூடாது. இதன்றியும், நிகடிகாதிகளுக்குச்சூரிய கதியாதி யு
பாதியல்லது ‡ லவ × த்ருடி யாதிகளுக்கு இல்லையாகையால் கா
லபேத † மௌபாதிகமல்ல, ஸ்வபாவிகமென்று சித்தம்.

‡ லவம் - கணமெட்டுக்கொண்டது, × த்ருடி - நொடிப்
பொழுது, † ஔபாதிகம் - உபாதியாலுண்டானது.

கடாதி பதார்த்தங்களிலே பூதபவிஷ்யத்வியவகாரமொ
ழிந்து வர்த்தமான வியவகாரமில்லாதிருக்கையால் வர்த்த
மானகாலமே யில்லையென்னில்? கடநிருமாணத்திலே யிருத்

பிண்டாவஸ்தை பூதகாலமாம் * ஜலாஹரணயோக்கியகால
ம் பவிஷ்யத்காலமாம். சகரத்திலே கபாலாதியவஸ்தையாயி
ருக்கிறகாலம் வர்த்தமானகாலம் ஆகையால் காலத்திரயமு மு
ண்டு ஆகையால் ஜடமுமநேகமுமான தற்கு நித்தியத்வங்கூடா
து நித்தியமில்லாத வஸ்துவுக்கு விபுத்வங் கூடாது ஆகையால்
காலமநேகம் அநித்யமென்பது சித்தம்.

* ஜலாஹரண - ஜலங்கொண்டுவருகை

ஆக இந்தக்கால முற்பத்தியாதிகளுக்கு ஏதுவாமென்னில்.
இந்தகாலோற்பத்திக்குக் காலமுண்டோ இல்லையோ? காலமு
ண்டென்னில்? — அநவஸ்தையாம். இல்லையென்னில்? காலமேயு
ண்டாகாது என்னில்? இந்தக் காலம் ¶ஸ்வயவியதிரிக்தத் தந்து
வத்தாந்துவிகங்களுக்கு ஏதுவல்லாது தன்னுடைய உற்பத்திக்கு
த்தானே ஏதுவல்ல. காலாதீதரான ஈஸ்வரன் சுவேச்சையி
னாலே காலத்தையபேக்ஷியாமலே காலத்தை +யுற்பாதிப்பார்?

— அநவஸ்தை - முடிவின்மை, ¶ ஸ்வயவியதிரிக்த - த
னக்குவேறான, + உற்பாதித்தல் - உண்டாக்குதல்

இந்தக் காலம் அசுத்தமாயா ஜந்யமாகையினாலே சுத்தமா
யாகாரியோற்பத்தியாதிகளுக்குக் காலமேதென்னில்? சுத்தமா
யையிலுமிவ்வாறு சுத்தகாலமுண்டு.

ஆகில் காலோபசங்காரத்துக்குக் காலமேதென்னில்? இ
ந்தக் காலாபேக்ஷை சதாசிவாதிகள் பண்ணுங் கிருத்தியங்களு
க்கே. காலாதீதரான சத்தர் காலத்தையபேக்ஷியாமல் ஸ்வேச்
சையினாலே பஞ்சகிருத்தியங்களையும் பண்ணுவார்.

இன்னும் இந்தக்காலமானது ஒன்றுக்கு பூதகாலமும் ஒன்
றுக்கு வர்த்தமானகாலமும் ஒன்றுக்கு பவிஷ்யத் காலமுமாயி
ருக்கையினாலே பூதபவிஷ்யத் வர்த்தமானகாலமாக ஒருபடித்
தாயிராதாகையால், பதார்த்த†வச்சேதககாலம் திரிவிதமெ

ன்பது கூடாதென்னில்? காலமும் திக்கும் ப்ரதிவஸ்து நிய
தமாயிருக்குமாகையால், முதலே ப்ரதிவஸ்து நியதகால
மென்று சொல்லுகையினாலே நீசொன்ன தூஷணங்கூடாது.
நித்தியகாலாநுவாதித்தவாத ஆத்மா நித்தியனே? காலம
நித்தியமாகில் ஆத்மாவுக்கு நித்தியத்துவமெப்படியென்னில்?
காலாநவச்சிந்நத்வமே. நித்தியத்துவமெப்படி கூடுமென்னில்?
காலாநவச்சின்னத்வமே நித்யத்வமாகையால், பூர்வோக்த தூ
ஷணமில்லை † அவச்சேதகம் - அளவிடுகிறது.

[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]

[illegible]
[illegible]
[illegible]

சுத்தகாலப் பிரளயாந்தரத்திலும் சத்தா சூக்குமமாயை யுடைய பஞ்சகிருத்தியத்தைப் பண்ணுமென்பதற்குச் சமாதி.

[illegible]
[illegible]
[illegible]
[illegible]

பின் நித்தியகலாதி தோன்றாது தோன்றியென்பது †சாகாங் க்ஷாபத மாகையால், சேஷம் மேல்விருத்தத்திலே கூறுகின்றது.

† சாகாங்க்ஷாபதம் - வினையோடு கூடினபதம்.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

மாயையினின்றும் தத்துவங்களின் தோற்றமும் தொழிலுமுரைக்கின்றார்.

மாயையிற்காலமோடு நியதியின் கலாதிதோன்றும் - சுத்தமாயையிற் சிவன் சிருஷ்டித்த காதபகத்தின் பின் பந்தமாயனந்தேசுரசத்தி கலக்கிய மாயையினின்றும் காலதத்துவம் நியதித்தத்துவம் கலாதத்துவம் பிறக்கும் (ஆதியென்றதனாற் புருடதத்துவமுமுண்டாம்.) முன் மானதப் பிரத்தியக்ஷப் பிரஸ்தாபத்திலே தத்துவங்களின் வியாபாரக்கிரமம் விஸ்தரிக்கப்பட்டது; இப்போ துற்பத்திக்கிரமமாசாரியர் தாமே யுரைக்கின

ரூர்.—ஆயவக்காலம் - சூக்குமதேகத்துள்ளசாதாரணமாயிரு
க்கும் காலதத்துவம், (புறம்பிற்சாதாரண காலதத்துவத்தினை
ஆவிர்த்தித்து துடி முதலிய கலைகளை முன்னிட்டுக்கொண்டு போ
க்கியப் பொருளிற போகத்தினை பொருட்டியினோச செலுத்திம
காப்பிரளய பரியந்தமிருக்கும் புறம்பிற சாதாரண காலம்)—
மூன்றுயாக்கியுமளித்துமபோக்கி-போக்கவந்தி பரிச்சேதகமாய்த்
துடி லவம் காட்டாதி காரியகலாபேதத்தினாலே செல்காலம
வருகாலமிரண்டின மத்தியத்தி னிகழ்காலமாயும், சரீர முதலி
ய தாத்துவிகப் பொருள்களின் தோற்றல் நிற்றல் நிமித்
தமாய் நிற்கும் காலதத்துவத் தோற்றத்திலும் காலம் வேண்டி
லன. அவத்தைவருமாதலால தத்துவத்தோற்றத்திற காலநிமித்
தமன்று திதியை நியமிக்கும் காலதத்துவம் போலச் சங்காரத்
தை நியமிக்கும் கலையித்திரி பெண்கின்ற சங்கார சத்தியே தத்
துவத்தோற்றத்தில் நிமித்தியமாய்,—காமமோடுலக்குக்கெல்லா
ம-தனுகரண புவனபோகங்கட்கு,--காலசங்கையினைப்பண்ணி-
ஏகமுதற் பரார்த்த பரியந்த கால வெண்ணிக்கையையுண்டாக
கி,—நாயகனாணையாலே-சிவாஞ்ஞையினாலேவைப்பட்ட காலதே
வதையினாலே யதிஷ்டிக்கப்பட்டு,—நடத்திடுஞ் சகத்தையெல்
லாம-சடசித்துக்க ளனைத்தையு முற்பத்தி யோக்கியத்தை யுற்
பத்தி பண்ணிச் செலுத்தும.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

அத்தனைமைத்தாகிய மாயையினின்றுங் காலமுதலிய தத்
வங்களுளவாம. அவற்றுட் காலமாவது முதல்வனாணையான்
முத்திறப்பட்டுத் தனக்குக் கீழுள்ள காரியப்பிரபஞ்சமனைத்தை

யுங் கால வரையறையிற் படுத்திக் கன்மத்தை வரைசெய்து நிற்குமென்பதாம்.

என்னும்மை முன்னருஞ்சென் றிடையுட.

நாயகனாணையாலே யென்பதனைத் தத்துவார்த்தகாண்டமுழுதி முய்த்துரைக்க.

---

## நிரம்பவழகியருளா வருமாறு.

—ப—

அசுத்தமாயாகாரண மருளிச்செய்து, காரியமான தத்துவங்களினது தோற்றமு மவைகாரியப்படு முறைமையு மருளிச்செய்கிறார்.

மாயையிற் காலமோடு நியதிபின் கலாதி தோன்றும் - அதோமாயையிலே காலமும் அதன்பின்பு நியதியும் அதன்பின்பு கலையும் தோன்றும்,— ஆயவக் காலமூன்றாய் - இப்படியான காலத்தத்துவந்தான் செல்காலம் வருகாலம் நிகழ்காலம் என மூன்றாய,— ஆகியுமளித்துமே போக்கி - இறந்தகாலத்தை நிலையுமாய வருகிறகாலத்திற் புதுமையும் நிகழ்காலத்திற் பலத்தையும் உண்டாக்கி,— காயமோ டுலகுக்கெல்லாங் காலசங்கையின்பான் - தேகாதி பிரபஞ்சங்களுக்கெல்லாங் காலவெல்லைகளையுமுண்டாக்கி, இது தானுகப் பிரபஞ்சத்தைக் காரியப்படுத்துமோ வெனவில்?— நாயகனாணையாலே நடத்திடுஞ் சகத்தையெல்லாம் - பரமேசுரனுடைய வாக்கினாலே இப்படிக் காலதத்துவம் பிரபஞ்சத்தையெல்லாம் நடத்தும்

நாயகனாணையாலே நடத்திடுஞ் சகத்தையெல்லாம் - கிரியாசத்தி சத்தித்துவத்தை யெழுப்ப, சத்தித்துவங் காலத்தையெழுப்ப, காலம் ஆன்மாவுக்குள்ள கன்மத்தைக் கூட்டுமென வுணர்க.

இதனாற் சொல்லியது அசுத்தமாயையிலே காலமு நியதியுங் கலையுந் தோன்றுமென்றும், சத்தி தத்துவத்தாலே காலத் தத்துவங் காரியப்படுகிற முறைமையு மறிவித்தது.

---

## சுப்பிரமண்யதேசிகருரை வருமாறு.

—0—

மாயையில் - அதற்கனன்மயாகிய மாயையினின்றும்,—காலமோடு - காலதத்துவத்தோடு,—நியதி - நியதித்தத்துவமும்,—பின்கலாதிதோன்றும் - பின்கலைமுதலியனவு முறையேதோன்றுவனவாம்.—ஆம் அக்காலம் - அவ்வாறுளதாகிய காலதத்துவமாவது,—நாயகனாணையாலே மூன்றாய் - முதல்வனாணையால் முத்திறப்பட்டு,—ஆக்கியுமளித்தும்போகக் காயமோடுலகுஞ் செல்லா - தோற்ற நிலை யிறுதியென்னு முத்தொழிலுடைய வினைசமுகத்துள்ள காரியப்பிரபஞ்சத்தினையும்,—காலசங்கையிற் பண்ணி - காலவரையறையிற்படுத்தி,—சகத்தையெல்லா நடாத்தும் - இவ்வு[illegible]த்திற் கன்மத்தைவரைசெய்து நிற்குமென்பதாம்.

---

## மறைஞானதேசிகர் உரை.

மேலிறுத்த முறையானே நியதிகலையின் காரியப்பாடுங் கலையிற்றோற்றிய வித்தையினது காரியப்பாடு முணர்த்துகிறார்.

நியதியின் றோன்றிக் கன்ம நிச்சயம் பண்ணிநிற்கு, மபாவிலாக் கலையினறோன்றி யாணவ மொதுக்கிச் சித்தினை, செயல்புரி கிரியாசத்தி தெரிவிக்குங் கிம்

பொருந்தினபோது சுகதுக்கபோகமே ரூபமாகவருகிற பலங்க ளைப் புசிக்கச் சத்தரூவனுதலானு மயர்விலாத கலையெனச் சி தபயித்தார.

இதற்குப்பௌஷ்கரத்து மிருகேந்திரத்துங்காண்க.(ருரு)

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

——o——

நியதியினருென்றிக கனம நிச்சயம்பண்ணிநிற்கும்-காலத் துவத்துக்குப்பின்பு மாயையிலேநின்றும நியதித்தத்துவமான துதோன்றிக கர்ம +நியமனத்தைப்பண்ணி ஒருவர்பண்ணின காமபலத்தை ஒருவாபுசியாதபடியும, விஷய சௌந்தரியத் திலேல அதிகப்ரவிருத்திகள வாராதபடியும, பிராப்தமான பாபபலபோகம அநிஷ்டமெனறு விடாதபடியும், பரிபகு வமான காமபலத்தை முனபினருக புசிககவொட்டாமலும், ஈசுரசத்திப்பிரேரணையிருல் ராசாஞையானதுபோல ; நிய மனஞசெய்து புசிப்பிக்கும.

\+ நியமனம - ஏற்பாடு.

ஈஸ்வரசத்தியே நியமனத்தைப்பண்ணுதோ! நியதி தத்து வமெனறொன்றை அங்கீகரிபபது கற்பநாகௌரவமெனனில்? ஈ ஸ்வரசத்தி நினமலையாகையினாலே நியதி *வியவதாரமனறித் தானே பண்ணுமபொழுது அதுமுதலியையேபண்ணும.

* வியவகாரம்-மனாவு

காமந்தானே தத்தந கர்த்தாக்களுக்கு நியமமாகபலத்தை கொடாதோ வெனனில்? காமமானது க்ருஷியாதிகளைப்போ லத் தொழிலாகையினுல் நியாமகம்பண்ணமாட்டாது.ஆகில் ஒ ருவர்பண்ணின கருஷியாதிபலங்களை ராஜாவுமிருக்கையிலே ஒ ருவர் புசிக்ககாண்கிறோமே யென்னில்?டஞ்ஞத்திலே *ரு

த்விக்குகள் பண்ணின கருமபலத்தை யஜமானன்புசிக்குமா போல, ஏவினவன தொழிலசெய்தவனுடையபலத்தைப் புசிப்பன

× ருத்விக்கு - யாகஞ்செய்துவைக்கின்றவன

அவ்வாறு ஏவினவனும ஏவலசெய்தவனுமன்றி, ஒருவன தான ஒன்று பண்ணின க்ருஷியாதிபலத்தை ஒருவன புசிக்கக்காண பானேனென்னில்? அதுவும் ஜன்மாந்தர சம்பந்தமில்லாது வாராது ஆகையால ஈச்வரசத்தியுங காலமும கர்மமுமன்றி நியதித்தத்துவமென்பது ஆன்மாக்களுடைய போக +நியாமகமாக வுண்டாகவேணும —

+ நியாமகம - ஏற்பாடு

ததுக்தம் பௌஷ்கரே — [illegible]

க்ரியாஶக்திரேவாஸ்ய க்ரியாதிகா ॥ ஸத்த்வம் ந ஶாஶ்வதம்
கிந்து நியதிவ்யவதாநத꞉ । தத்ஸம்பந்தாச்சிவேச்ச
ரதுரேவ வேஷ்டியதிப்ரதி ॥ நகலா ஸ்வ ஸ்வம் பு
ஸ்த்வம் ஸாமர்த்யாதிமேதி । கலாஸ்யாத் கார்யஸித்
த்யாதிரகலா நியாமகம் ॥ கலைர்யாதி கார்யகலா
கார்யாத்ரம் தஸ்மாத்தேயத் । தஸ்கலா கர்த்ரீ ந
வ்யாப்தம் த்ருஶ்யதே க்ஷிதிர்ஹ்வர꞉ ॥ வாதிபத்ம்வி ராகா
ஜா த்ருஷ்டா ஞானாவித்ஷ்டாஸாத꞉ । தேச ப்ரயோஜ்ய க
ர்மேணா ஹாஜேத் கார்யம் ஸம꞉ ॥ கார்ய கர்த்தா
ரக்ஷாத வாகஸ்ய ப்ரகாஶயதே । யதாயத்ய கர்
தாயாமோ யஜாநஸமாவஸ꞉ ॥ தஸாதேத்வ்ருத்
கர்த்ராஸ்தா நப்ராகத்ரிஷ்ணம் । பக்ஷபா
தவிநிர்ஸுக்தா ராஜாஜ்ஞா யத்ரவிஹ்யதே ॥ தத்ரவஸ்
ஜேதஸ்கதர்மாவ்யாப்தம் தஸ்கார்யஜம்ஸம꞉ । கிந்து
த்ருஷ்டாந்திகம் கலா விஹ்யதே பலவத்தரம் ॥ ஸம் தத்
நஸாலேண ஸாஜேத தே ஜநீஸ்வரா꞉ । தஸ்மா
ஞ்ஞியதி தஸ்மாத் பஞ்சஸாம் லோகமியாஜகிதி ॥

அயர்விலாக்கலை பின்னொன்றிச சிறிதேயாணவ மொதுக்கிச் செதுதின செயல்புரி கிரியாசத்தி தெரிவிக்கும் - சோம்புதலற்ற கலாதத்துவம் பிறகுண்டாய், ஆணவத்தைச்சிறிது நீக்கி ஆன்மஞானவியாபாரசத்தியை விளங்கப்பண்ணும்.

சித்ரூபமாயிருக்கிற ஆன்மாவை கலாதத்வம் பிரகாசிப்பிக்கவேணுமோவெனவில்? ஆன்மாக்களநாதியே ஆணவத்தி

ஆன்மாவுக்கு விஷயதரிசனத்திலே யாதொன்று¶ கரணம் அ
துவித்தை.

† அபிமுகம் - எதிர்நோக்கினது, × கலுஷிதம் - கலக்கப்
பட்டது, ✻ஜடத்வம் - அறியுந்தன்மை, — கிராஹ்யம் - விஷ
யம், ¶ கரணம்-உதவி.

விஷயதரிசனத்திலே புத்தி கரணமாகாதோவெனனில்;
புத்தியு மானமாவிலே கிரகிக்கப்படுகையால் கடகுடாதியம்போ
லசடமே, புத்தி ஆன்மாவுக்கு கிராஹ்யமாகையிலுலே சக்ஷு
கரணமாக ரூபங்களைகிரகிக்குமாடபோல, இந்தபுத்தியையும் கி
ரகிக்கிறதுக்கு வித்தைகரணம் அசுரேவந-ரசேம சாரதிநா ×ப
ந்தாநவகச்சதி எனகிற நியாயமாக, கிரமத்திலே சக்ஷுராதி
த்துவாரா கரிசிக்கப்பட்டுப புத்தியிலுலே விஷயமானது நிச்ச
யிக்கப்பட்டுள்ளவில், வித்தையிருலே புருஷருனவன அந்
த விஷயத்தை கிரகிப்பன.

×பந்தாநங்கச்சதி-வழிநடக்கிறுன

இந்தவிஷயத்தை கிரஹிக்கிறதுக்கு புத்தி ஞானமென
கையால், புத்தியேகரணமாகப போருமெனவில்? உள்ளது. ச
க்ஷுராதியிந்திரியங்களைபபோ லன்றி புத்தியாதி கரணாந்த திர
வங்களும மனதுசமசயத்தையும், அகங்கார மபிமானத்தையு
ம, புத்திநிச்சயத்தையும் பண்ணுகையால், பகார்த்ததரிசனத்தி
லே சூரியாவலோகனம்போல, விஷயதரிசனத்திலே யிவைகள்
வித்தைக்குச் சஹகாரியாயிருக்கும். ஆகையாற் கலையானது ஆண
வத்தைச் சிறிதநீக்கிஞானக்கிரியைகளைப் பிரகாசிப்பிக்க, இத்தவி
த்தை ஞானத்தை தக்கலுஷிதம்-ண்ணி விஷயதரிசனத்தைப் பண்
ணுவிக்கும். இத்தவித்தை ஆன்மாக்களுக்கு இரண்டாம்பந்தம்.

[illegible]

[illegible]

[illegible]

[illegible]

[illegible]

[illegible]

[illegible]

[illegible] இதி.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—o—

*நியதிமூலவி பதினொ ரொழிந் நிச்சயிக்கினருர்*

*நியதி யென்றேறன்றி-யென்பு மாயையினின்றும் நியதிதத்துவமுண்டாய்,— கன்ம நிச்சயம்பண்ணி நிற்கும்-தனது கன்மபலமாகிய சுகதுக்கங்களைப் பிறிதொரு சம்பந்தி பிறர் புசியாமற் பிறரவைகளைத் தனது சம்பந்தியாயிருக்கின்றவான்மாப் புசியாமல் வரையறைபண்ணி நிற்கும்,—அயர்விலாக கலையென்றேறன்றி யாணவமொதுக்கிச் சித்தின் செயல்புரிகிரியா சத்தி சிறிதெரிவிக்கும் - என்பு பிரகாசமான கலாதத்துவம் மாயையினுண்டாய் ஒரு பிரதேசத்திலே மலசத்தி வியாபாரத்தை மறைத்து ஆன்மாவினது புறப்பொருளறிவாகிய ஞானக்கிரியாசத்திவியாபாரங்களைக்கிரியாதிகமாய்ச் சிறிது விளக்கித்திரும்பித் தற்பொருளறிவாகிய சத்திமத் கர்த்தாவைப் பொருந்திக் கர்த்திருகாரகமென்று பேர் பெற்று நிற்கும்.— வித்*

தை யுடர் கலை யதனிற்றோன்றி யறிவினை யுதிக்கப் பண்ணும் - பின்பு வித்தியா தத்துவங் கலா தத்துவத்தி லுண்டாய்க் கலையினாலொரு பிரகாரம் விளக்கப்பட்ட ஞான சத்தி வியாபாரத்தை மலவாசனைபோக்கி விளக்கிப் புறப்பொருளறிவாகிய சத்தி கரணத்தைப்பொருந்திக் கரண காரக மென்று பெயர் பெற்று நிற்கும்

## சிவஞானயோகியருரை வருமாறு.

—o—

நியதி தத்துவம் அக்காலத்தின் பின்னாக மாயையினின்று தோன்றி, அவரவர் செய்த கன்மம் அவரவரே நுகருமாறு நியமிக்கும். அதன்பின் அம்மாயையினின்றே கலை தோன்றி ஆணவத்தை யேகதேசத்தினீக்கி, ஆன்மாவின் கிரியாசத்தியை விளக்கி வினைக்கீடாக வரும் போகத்திற் செலுத்தி நிற்கும். அக்கலையினின்றும் வித்தை தோன்றி அவ்வான்மாவினது ஞானசத்தியை ஏகதேசத்தில் விளக்கி அதன்கட்செலுத்தி நிற்குமென்பதாம்

## நிரம்பவழகியருரை வருமாறு.

—o—

மேல் நியதிதத்துவமுங் கலையுங் காரியப்படுகிற முறைமையும், கலையிலேவித்தைதோன்றிக் காரியப்படுகிற முறைமையு மருளிச்செய்கிறார்.

நியதியின்றோன்றிக்கன்ம நிச்சயம்பண்ணி நிற்கும்-நியதித்தவமானது காலத்தின் பின்புதோன்றி ஆன்மாக்கள்செய்த கன்மத்தினளவானன்றி யேறக்குறையப் போகாதபடி யநுபவி

ட்டு நிற்றதும்,—அயர்விலாக்கலேபினறேறனறி யாணவமொது க்கி - மயக்கமில்லாத கலையானது நியதிக்குப்பின்பு தோன றி, ஆணவமலத்தைச் சற்றேநீக்கி,—சித்திவசெயல்புரிகிரியாச த்தி தெரிவிக்கும் - ஆன்மாவினுடைய சேட்டையையுண்டாக்கி ற கிரியாசத்தியைத் தோற்றுவிக்கும்·—சிறிதேவித்தை யுயாக லேயதனிற்றேன்றி யறிவினையுதிக்கப்பண்ணும் - வித்தையென றதத்துவமானது மேலானகலேயின்—றதுலேதோன்றி ஆன்மா வுக்கு அறிவையுண்டாக்கா நிற்கும்.

இந்தத்தத்துவங்கள் தாருக்ககாரியப்படவற்றோ வென வில்? கிரியாசத்தி சதிநத்துவத்தையெழுப்ப, சத்தித்தத்துவம் நியதியையுங் கலையையுமெழுப்ப, இந்தத்தத்துவங்கள் ஆன்மா வுக்குள்ள கன்மத்தை நியதிநிச்சயித்தும, கலே யாணவ மலத் தைச் சிறிதேநீக்கி ஆன்மாவைத்தொழிற்படுத்தும் ஞானசத்து சுத்தவித்தையையெழுப்ப, சுத்தவித்தை வித்தையையெழுப்ப, வித்தை யான்மாவுக்கு அறிவையுண்டாக்குமெனக்கொள்க

இதனாற்சொல்லியது வித்தியாதத்துவத்தில் நியதியுங்கலே யும், இக்கலேயிலே தோன்றினவித்தையும், இந்தமூன்றுதத்துவ முங்காரியப்படுகிற முறைமையுமறிவித்தது.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு·

—o—

நியதிபினறேன்றி - நியதித்தத்துவம் அக்காலத்தினபினனு க மாயையினின்றுகதோன்றி,—கனமநிச்சயம்பண்ணி நிற்கும- முதல்வனுணையா லவரவாசெய்த கனம மவரவரே றுக்குமாறு நியமிக்கும்.—பின் அயர்விலாகலேதோன்றி - அதனபினனும் மாயையினினறே யயர்ச்சியில்லாதகலேதோன்றி,— ஆணவஞ்சி

றிதேயொதுக்கி-ஆணவத்தையேகதேசத்தினீக்கி,—சித்தின்செயல்புரி கிரியாசத்தி தெரிவிக்கும் - ஆன்மாவினது கிரியாசத்தியை விளக்கி முதல்வனாணையால் வினைக்கீடாக வரும் போகத்திற் செலுத்திநிற்கும்.—உயர்கலையதனில் வித்தைதோன்றி - உயர்ந்த அக்கலையினின்றும் வித்தியாதத்துவந்தோன்றி,—அறிவினைச் சிறிதே யுதிக்கப்பண்ணும் - அவ்வான்மாவினது ஞானசத்தியை யேகதேசத்தில்விளக்கி முதல்வனாணையானதனைக்கட்செலுத்திநிற்கும்.

---

## மறைஞானதேசிகர் உரை.



அந்த வித்தியா தத்துவத்தி னிராக தத்துவந்
தோன்றிக் காரியப்படு முறைமையும், புரு
டதத்துவத்தினையு முணர்த்துகின்றார்.

விச்சையி னிராகந்தோன்றி வினைவழி போகத்
தின்க, ணிச்சையைப் பண்ணிநிற்குந் தொழிலது விச
சைமுன்றும், வைச்சபோ கிச்சாஞானக் கிரியைமுன்
மருவியான்மா, நிச்சயம் புருடனென்பப் பொதுமையி னி
ற்குமன்றே. (௫௬)

(இ-ள்.) விச்சையி னிராகந் தோன்றி வினைவழி போகத்தின்க ணிச்சையைப் பண்ணிநிற்கும் — வித்தியா தத்துவத்திலே யராகதத்துவந் தோன்றி, ஆன்மாக்கள்செய்த கன்மத்துக்கீடாகப் பிரகிருதியினின்றும் பிறக்கத்தக்க சுகானுபவங்களை மேலுமேலும் புசிக்கையின்பொருட்டிச்சையைப் பண்ணிநிற்கும்.

தி யர்த்தமாக, வித்தியாதத்துவத்திலே நின்றும் ராகதத் துவந்தோன்றி கனமாநுகுணமாக விஷயேச்சையைப்பண் ணும்.

‡ பிரவிருத்தியாதகம் - பிரவிருத்தியின் பொருட்டு

ராகதத்துவமென்னென்றுதோன்றி விஷயேச்சையைப்ப ண்ணவேணுமோ! ஆன்மா இச்சா ஞானக்கிரியாவானுகையா லந்த விச்சைதானேபோருமெனனில்? சாக்கிரத்திலே யந்த இ ச்சாஞான க்கிரியைகளிருக்கையிலும் † அநாசக்தனான புருஷ னுக்கு போகமில்லாமலிருக்கையினாலும் சக்தனான புருஷனுக்கு அசுத்தமாயிருக்கிற போகங்களைப்புசிக்கையிலே அமைவுபெரு மலிருக்கையினாலும் இந்தராகதத்துவமுண்டாகி போகநாவுக் கு உபகாரத்தைப்பண்ணும்.

† அநாசக்தன - விருப்பில்லாதவன்

காலமானது பூர்வவிஷியத வர்த்தமான மாகிய துன்னுடைய விருத்திகளினாலே புசித்தபோகத்தை விடவு ம், ஒருபோகத்திலேநின்று புசிக்கவும், ஒருபோகத்தை ¶ யு த்பாதிக்கவும், நிமித்தமாய்நிற்க, நியதியானது காமபலத்தி லே நியமனம் பண்ணி, காமமானது ஒருவாபலம ஒருவ ருக்குவராமல் அவாகளவாகளே புசிக்கிறதுக்கு சஹகாரியாய்நி ற்க, கலையினாலும வித்தையினாலும போகோன்முகமான புரு ஷனுக்கு ராகமானது சடிதிப்பிரவிருத்தியை யுண்டாகப்பண் ணும். ராகமில்லாதவன புசியானுகையாலே புத்தியிலே அவை ராக்கியமெனகிறராகமிருக்கிறதேபோரும், கலாஜந்யமாக வொ ருராகத்தை யங்கீகரிப்பது கற்பனாகௌரவமெனனில்? வித் தையினாலும் ராகத்தினாலும் கலங்கியிருக்கிற ஆன்மசிற்சத்தி யானது இச்சைவடிவாய் புத்திதருமமான ராகத்துடனேகூ டிப்பிரகிவிஷயம் § பின்னராகமாய் அசாதாரணமாயிருக்கும்.

¶ உத்பாதித்தல் - உண்டாக்கல், § பின்ன - வேறு.

கையினாலே சிவனுடையசத்தியிலே ஒருசத்தியை மலமென்று ம் சொல்லுவர்க ளெனறும், இந்த ஐந்துமலங்களு மான்மாவை ப்பொருந்திநிற்குமென்னு முறைமையு மறிவித்தது.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

—o—

(வேறுமிருமலமெனப்படுவன) மாயையின்காரியத்தைமா யேயமலமெனறும்- அச் சுகதுக்க விளைவுகட்கெல்லா மிடமா ய்நின்று வியாபகமாகிய ஆன்மாவி னறிவிச்சையைசெயல்களை யே கதேசப்படுத்துவதென மேற்கூறிப்போந்தமாயாகாரியமும்,— ஏயுமும்மலங்கள் தத்தம்தொழிலினை யியற்றவேவும்-பொருந்தி ய அவ்வமலங்களை யவ்வத்தொழிலிற்படுத்திப் பாகம்வருவிக்கு ம்,—திரோதானகரியதா யுயவனறனதோர் சத்தியென்றுமாய் வர் - மறைத்தலைச்செய்வதாகிய சிவசத்தியுமாமெனறு கூறுவர். அவற்றுள் மாயாகாரிய மாயையி னடங்குமாயினும் பந்திக்கற் கட்படும் வேற்றுமைபற்றி மாயேயமலமென வேறுவைத்தெண் ணப்படும் அம்மலங்கட் கனுகூலமாய் நின்றுஞ்செய்யுஞ் சிவச த்தி பராசத்தியி னடங்குமாயினும் தொழில்வேற்றுமை பற்றி யுபசாரத்தாற்றிரோதமலமென வேறுவைத்தெண்ணப்படும்.— இம்மலங்களைத்தம் அணுக்களையணைத்து நிற்கும் - இவ்வா றிவ் வைந்து மலமு முயிர்தோறுநின்று செய்யும்,அந்த வேறுபாடு க ண்டு கொள்க.

---

## மறைஞானதேசிகர் உரை.

இங்ஙனஞ்சொல்லிய பஞ்சமலங்களுடனுன்
மாபொருந்திச் சகலாவத்தை யுறுமா
றுணர்த்துகிறார்.

மலமாயை கன்ம மாயேயந்திரோ தாயிமன்னிச்,
சலமாரும் பிறபிறப்பிற் றங்கியித் தனைகீழ்மேலும் நி
லையாத கொள்ளிவட்டங் கறங்கெனநிமிடத்தின்க,ணல
மாரு மிறைவனாணை யாலுயிர் நடக்குமன்றே. (அஅ)

(இ-ள்.) மலமாயை கன்ம மாயேயதிரோதாயிமன்னி — ஆன்மாவை யனுசமபந்தமாகிய வாணவ மலமும், ஆன்மாக்களறிவை யியக்குமாயையும், ஆன்மாக்கடொழிலைசெய்கையிலுண்டாய கன்மமும், மாயையின் காரியமாகிய மாயேயமலமும், ஆன்மாக்களறிவை மயக்குந் திரோதாயியும், ஆகப் பஞ்சமலத்தையும் பொருந்திநின்று;

சலமாரும்பிறப்பிற் றங்கியித்தனை கீழ்மேனு நிலையாத கொள்ளி வட்டங் கறங்கென நிமிடத்தின்க ணலமாரு மிறைவனாணையா லுயிர் நடக்குமன்றே. — போக்குவரவையுடைத்தா யிருக்கப்பட்ட நின்ற சனன மரணங்களையடைந் திந்தப் பூமிமுதலிய மூன்று லோகத்தினக ணின்றுழன்று, அஃதெனபோலவெனிற் றனகொரு நிலைமையின்றி யிருக்குங் கொள்ளி வட்டங் காற்றாடி யொரு நிமிடத்திலநேகம்பிரகாரஞ் சுழலாநிற்கும். அதுபோலவான்மாவுநன்மை பொருந்திய கர்த்தாவினுடைய திருவாணையாற் கன்மானுகுணமாக மேல்கீழ் நடுவிற் பொருந்தாநிற்கும்.

இதற்குச் சிந்தியத்தறிக. (அஅ)

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

—o—

மேற்சொல்லிப்போந்த மலங்களைத் தொகுத் துணர்த்தல்.

மலமாயைகன்ம மாமாயைத்திரோதாயி மனனி யுயிர்சல மாரும்—ஆணவமலம் அசுத்தமாயை கன்மம் சுத்தமாயை திரோதானசத்தி இவ்வைந்து மலமும் பந்திக்கையினாலே விபுவாய்ப் போக்கு வரத் தில்லாம லிருக்கிற ஆன்மா வேகதேசத்தையடைந்து போக்கு வரவுண்டாம். போக்குவர வுண்டாகவே,— இறைவ னாணையால் பிறப் பிறப்பிற் றங்கி யித்தனை கீழ மேலும நிலையாக கொள்ளி வட்டங் கறங்கென நிமிடத்தினகணி யல் பாரும் நடக்குமென்றே - சிவாஞ்ஞையினாலே கன்மாநுகுணமாக சனன மரணங்களைப் பொருந்திப் புண்ணிய பாபத் துவய பரிபாகத்தினாலே பூமியிலும், கேவல பாபத்தினாலே நரகத்திலும், கேவல புண்ணியத்தினாலே சுவர்க்கத்திலும் பொருந்தி; சுகதுக்கங்களையும் சுகத்தையும் துக்கத்தையும் புசிக்கும். புசிக்குமிடத்து பஞ்சேந்திரியங்களிலும் கொள்ளிவட்டம் போலும் காலிதழுகாற்றுடி போலும் நிமிஷத்திலே எல்லாவிந்திரியங்களிலும் ஒக்கநிறைந்து நிறைந்து போலச் சுழன்று செல்லுமென் றிதன்பொருள்.

—

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—o—

இப்படி யான்மா பஞ்சமலத்தோடு பொருந்திச் சம்சாரத்திற் பிரமிப்பனென்று பேசுகின்றார்.

வெளிப்பொருள்.

## சிவஞானயோகியருரை வருமாறு.

—o—

மேற்கூறிப்போந்த பிறப்பிறப்புக்களெல்லாவற்றிற்குங் காரணம் இவ்வைவகை மலங்களுமாமெனபதாம்.

மன்னி யலமாறுமென்பது மழைபெய்து குளநிறைந்த தெண்ணீர்போலக் காரணகாரியப் பொருட்டாய் நின்றது.

அலமரும் அசமாறுமென நீட்டும்வழிநீட்டல்.

இறைவனாணையா லுயிர்கட்குமென ஈண்டுங் கூறியது அவ்வவமலங்களை நீக்கும் வாயிலுணர்த்துதற்பொருட்டு.

அது முன்னர் வகுத்துக் கூறப்படும்.

இவை மூன்றுசெய்யுளானும், மலங்களிந்தனையவென்பதூஉம், அவை பந்திக்குமாறுங் கூறுமுகத்தான் ஆணவமலத்தானாகிய பொல்லாமை கூறப்பட்டது.

—o—

## நிரம்பவழகியருரை வருமாறு.

—

முன்சொல்லிப்போந்த பஞ்சமலங்களுடனே ஆன்மா கூடி சனனமரணப்பட்டுத் திரிகிறமுறைமை யருளிச்செய்கிறார்.

மலமாயை கன்மம் மாயேயந் திரோதாயிமன்னி - ஆணவமாயை கன்மமாயேயந்திரோதாயியென்று - சொல்லப்பட்ட பஞ்சமலமாய்ப்பொருந்தி,—சலமாரும் பிறப்பிறப்பிற் றங்கியித்தளைசேர்ம்மேலும் - சலிப்பை யுடைத்தாயிருக்கப்படாநின்ற சனனமரணங்களை யடைந்து இக்கப்பூமியிலும் பாதாளத்திலும் சுவர்க்கலோகத்திலும்.—நில்லாத கொள்ளிவட்டங் கறங்கென - நிலையில்லாத கொள்ளிவட்ட மென்ன காற்றாடி யென்ன,—நிமிடத்தின்

கண் - இமைத்து விழிக்கிறமாத்திரத்திலே, — மலமாருமி றைவ ஞானையா லுயிர்கடக்கும் - சனனமரணப்பொருந்தி யிருக்க ப்படாநின்ற கருத்தாவினுடைய வாக்கினையாலே யான்மாக்கள் செல்லாநிற்கும்.

இதற்குப் பிரமாணம் சித்தாந்தவிண்ணப்பம்-உக-செ. "மல ங்களைகார்சுழலவன றயிரிற்பொருமத்துறவே என்றும்" இரு நசௌளணம்-அ-செ. "றெங்கோலை போல்வதோர் காயப் பிறப்போ டிறப்பென்னும்" என்னுமதுங் கண்டுகொள்க.

இதனாற் சொல்லியது ஆணவா பஞ்சமலங்களையும் பொரு ந்தி சனனமரணப்பட்டுப் பூலோகத்திலும் பாதாள லோகத் திலும் சுவர்க்கலோகத்திலும் கர்த்தாவினுடைய வாக்கினையா லே கொள்ளிவட்டம்போலவும் காற்றுடிபோலவும் இமைத்து விழிக்கிற மாத்திரத்திலே சுத்திவருமென்று முறைமையு மறி வித்தது.

'மும்மல' 'மாயையின்' 'மலமாயை' இம்மூன்றும் பஞ்சம லத்தின தொகை சொல்லியது.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

—o—

உயிர் - ஆன்மாவின் கண்,—மலமாயை கன்ம மாயேயத் திரோ தாயிமனனி-ஆணவமலம் மாயாமலம் கன்மமலம் மா யேயமலம் திரோதானமலமுமாகிய விவ் வைவகை மலன்களும் காரணமாகி யில்பெறுதலால்,—இறைவனாணையாற்சலமாறும்- முதல்வ னாணையினாலே போக்குவரவுடைத்தாதற் கேதுவாக,—பிறப்பிறப்பிற்றங்கி - மேற்கூறிப் போக்கு பிறப்பிறப்பிற் ப ட்டு,—இத்தரை மேற்மேலும் - இவ்வுலக நிலையங்களிற் சென்

று,—நிலையாத கொள்ளிவட்டங்கறங்கென - நிலையுதலிலவாகிய கொள்ளி வட்டமும் காற்றாடியும் போல,—நிமிடததினகணல மாரு நடக்குமனறே - நிமிடத்திற் சுழன்று செல்லும்.

இவை மூன்று செய்யுளாலு மலங்க வித்துணைய வெனப தாம் அவை பதத்கு மாறங் கூறுமுகத தாவரண மலததாலாகிய பொல்லாமை கூறப்பட்டது.

---

## மறைஞானதேசிகா உரை.

மேலெழுவகை யோனியுட்பட்ட நால்
வகையின ரோற்றக தொகுத
துணாத்துகிருர்.

அண்டசஞ் சுவேதசங்க ளுற்பீசஞ் சராயுசத்தோ,
டெண்டரு நாலெண்பத்து நானகுறா ருயிரத்தா,யுணடு
பல் யோனியெல்லா மொழித்து மானுடத்துதித்தல், க
ண்டிடிற் கடலைக்கையா னீந்தினன் காரியங்காண் (அகூ)

(இ-ள்.) அண்டசம் முட்டையிற் ரோற்றுவன

அஃதாவது பரவை பாம்பு கமடம் முதலை மச்சிய முதலான.

சுவேதசம் வேர்வையிற்ரோற்றுவன

அஃதாவது கிருமி கிடம் பதங்க முதலாயின.

உற்பீசம் நீரு நிலனும் வித்துடன் கூடிப் பூமியைப் பிளக்து தோற்றுவன

அஃதாவது புல்லு சிறுபூடு தாவரமுதலாயின.

சராயுசத்தோ பையிற்ரோற்றுவன

அஃதாவது நரர் மிருக பசுமுதலாயின

எண்டரு நா லெணபத்து நா னகு நூறாயிரத் தா யுண்டு பல் யோனி — அண்டசமுதலான நால்வகையினு மூண்டாகப்பட்ட வெண்பத்து நான்கு நூறாயிரமாகிய பேதங்களைப்பொருந்தி யெழுவகை யோனியையு மடைந்து

எல்லா மொழித்து — முதற்கட் டாபர யோனியிலுண்டாய் வருவினைகளையும் புசித்துத் தொலைந்தவாறே யதனைவிட்டுக் கிருமியோனியை யெடுத் தாண்டுள்ள துபவித் ததனையும் விட்டுப் பறவையுருவையெடுத் ததனையும் விட்டு மிருகயோனியை யெடுத் ததனையும்விட்டுப் பசுயோனியெடுத் ததனையும்விட டிப்படி யெல்லாப்பிறப்பிலும் பிறந்திளைத்து.

மானுடத் துதித்தல் கணடிடில் — காலாந்தர வசத்தினாலே புண்ணியமேலீட்டினாலே மானுடப்பிறப்பிற் றோற்றி மோட்சத்தை யடையக் கருதுமதனை விசாரிக்கில், அஃதெத்தன்மைக் கொக்குமெனில்?

கடலைக கையா லீந்தினன காரியங்காண் — இலக்கயோசனை யகலத்தையுடைய லவணசமுத்திரத்தைக் கையாணீந்திக் கரையேறினவன் காரியத்துக் கொக்கும். எ-று.

இதற்குச் சப்பிரபேதஞ் சிவதருமோத்தரத்து மெனவறிக.

“தோற்றியிடு மண்டசங்கள் எண்பத்துநான்கு நூறாயிரமென்றெடுத்தே” எனச் சார்புநூலினுமறிக. (அ௯)

## சிவாக்ரயோகியருரை வருமாறு.



மேல்மனுஷ்ய தேகம் வருமருமை யுணர்த்துதல்.

முட்டையிலே தோற்றுவனவும் கசிவிலே தோற்றுவன
வும் வித்திலே தோற்றுவனவும் பையிலே தோற்றுவனவு மா
கத்தொகை யெண்பத்து நான்கு நூறாயிரம் யோனிபேதமுண்
டு இவ்வாறுள்ள யோனிகளுக்குள்ளே இதரயோனிக ளெல்லா
ற்றையும் போகத்தினாலேயும் பிராயச்சித்தாதிகளாலேயு நீக்கி
மனுஷ்ய சன்மத்தில்வரு மருமை விசாரித்துப் பார்க்கில்,சமுத்
திரத்தை கைநீந்தாக நீந்திக் கரையேறினதை யொக்குமெ
னவறிக வென றிதனபொருள்.



## ஞானப்பிரகாசருரை வருமாறு.



சூக்குமதேகத்திற் றூல தேக முண்டாமென்று சொல்
லுஞ் சைவ பௌராணிக மதானுசாரியர்கள் மதம் பூர்வபக்ஷமா
க மறுத்து, சாதாரண புவன விகாரத்திற் சூக்குமதேக நிமி
த்தமாக வுண்டாந் தூலதேகமென்னுஞ் சுத்தசைவ சித்தாந்
தாசாரியர் மதம் உத்தர பக்ஷமாக வங்கீகரிக்கின்றார்.

அண்டசம் - முட்டையிலுண்டாகும் பக்ஷிமுதலியன,—சு
வேதசம் - வேர்வையி லுண்டாகும் பின்பினிமுதலியன,—உற்
பீசம் - விரைகளை மேற்பிளந் துண்டாகும் மர முதலியன,—
சராயுசம் - கருப்பையிலுண்டாகும் மானுடர்முதலியன,—நீந்
தினனகாரியங்காண் - கடந்தவன் செய்திபோல்.

மற்றைய வெளிப்பொருள்.



## சிவஞானயோகியருரை வருமாறு.

—o—

நால்வகைத்தோற்றத் தெழுவகைப்பிறப்பி னெண்பத்து நான்கு நூறாயிரம் யோனிபேதத்தினையும் விரித்த பேதங்கள் அளவினறியுள்ளன. அவற்றுள் மானுடப்பிறவியே அவ்வலமரலை நீக்குதற்கு வாயிலெனபதாம்.

—

## நிரம்பவழகியருரை வருமாறு.

—o—

மேலிந்த மானுட சனனத்திலே சனிக்கிற வருமை யருளிச்செய்கிறார்.

அண்டசஞ் சுவேதசங்க ளுற்பீசஞ் சராயுசத்தோடு-முட்டையிலே தோற்றுவன வேர்வையிலே தோற்றுவன வித்திலே தோற்றுவன பையிலே தோற்றுவன ஆகக்கூட்டி,—என்றுநாலு-இப்படிஎண்ணப்பட்டநாலுவகையாலும்,—எண்பத்துநான்கு நூறாயிரத்தா யுள்ள பல்யோனி - அண்டச மிருபத்தொரு சுவேதசம்பத்து உற்பீசம்பதசொன்பது சராயுச முப்பது ஆக எண்பத்து நான்கு நூறாயிரமாய் வெகுவித மாயிருக்கத்தக்க யோனிக ளெல்லாம் ஆன்மாக்கள் கன்மத்தாற் கிடாகவுண்டாயிருக்கும்,—எல்லாமொழிந்து - மானுடயோனி ஒழிந்த மற்றுள்ள யோனிகளையெல்லா நீக்கி,—மானுடத் துதித்தல்- மானுடசனனத்திலே சனிக்கிறது,—கண்டிடிற் கடலைக் கையால் நீந்தினன் காரியங்காண் - விசாரித்துப்பார்க்கில் சமுத்திரத்தைக் கையாலேநீந்தினவன் காரியத்துக்கொக்கும்.

இதனாற் சொல்லியது நால்வகைத் தோற்றத்திலுமுண்டான எண்பத்து நான்கு நூறாயிரம் யோனிக்குள்ளும் மானு

டயோனியிலே வந்துதோன்றின வருமையை பார்க்கில் சமுத்திரதகைக் கைநீச்சாக நீந்திக கரையேறினவனுக் கொக்குமெ னனுமுறைமை யறிவித்தது.

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு·

அண்டசஞ் சுவேதசங்க ளுற்பிசஞ் சராயுசத்தோடு-முட்டை வேர்வை வித்து பையுடனே,—எண்டரு நாலெண்பதது நானகு நூறுயிரத்தா யுண்டு-நால்வகைத் தோற்றத் தெழுவகைப்பிறப்பி னெண்பத்து நான்கு நூறுயிரம யோனிபேதத்தினினுறும் விரிகக பேதங்க ளளவினறி யுள்ளன,—பல்யோனி யெல்லாமொழித்து - அவற்றுட் பலவகைப்பட்ட யோனி பேதங்களொழிகது,—மானுடத் துதித்தல் கண்டிடில் - அவ வலமரலே நீககுதற் கேதுவாகிய மானுடப்பிறவி யெய்கப் பெற்றிடின,—கடலைக் கையானீநதினன் காரியங்காண் - சமுதகிரதைக கையானீநதிக கரையேறினவன் காரிபத்தோடொகக்கும்.

---

## மறைஞானதேசிகர் உரை

மேலதனிற சிறப்புவிதி யுணர்த்துகிறுர்.

காரபமி றேயந்தன்னி னுன்மறை பயிலாநாட்டில், விரவுத லொழிந்துதோன்றன் மிக்கபுண் ணியந்தானுகும், தனையினிற் கீழைவிட்டுத் தவஞ்செயசா திபினில்வந்து, பரசம யங்கட்கெல்லாப் பாக்கியம் பண்ணுறுதே. (கூ0)

(இ-ள்) காரபமி கவதிலை புடைத்தாயிருக்கிற பாரதக றேயக் தன் ண்டத்தி லிந்திரத்தீவுமுதலியவெட்டு மிலே

விஞ்ஞான்ம றை பயிலாநாட்டில் விரவுத லொழிந்த தோனறனமிகக புண்ணியந்தா ஞரும

தனையினிற் இழைவிடுதுதவ ஞசெய் சாதியில் வந்து பரசமயங்கட்கெல் லாப் பாக்கியம் பண்ணுளுதே.

ச்சர் சஞ்சரிக்கும் தேசமாகையால் அந்தப் பூமியினகண் வந்துதோன்றுமல், வேதாகம புராணங்கள் யாகாதிகள்வழங்கும்பூமி குமரித்தீவாதலின் அதிற்சனிக்கப்பெறின் அவர்கள் மிகுந்த புண்ணியபலத்தால் வந்தவர்களெனவறிக. இதனிலுஞ்சிறப் பியாதோ வெனில்?

இந்தப் பூமியினகண்வந்த அதோசாதியிற் பிறவாம லுத்தமமான பிராமணர்முத ஞலுவருணத்திற் சனனதனையெடுத்து, சதகனமதனதை யனுட்டிததற குரித்தல்லாத உலோகாயதன முதலிய பரசமயங்களிற புகாம லிருக்கில் அவர்களே புண்ணியவானகள். எ-று.

ஏகார மீற்றசை

இதற்குச் சுப்பிரபேதத்துஞ் சிவதருமோத்தரத்து மறிக.

(கஎ)

## சிவாக்ரயோகியருளா வருமாறு.

—o—

மேற் பரசமயங்களிற் செல்லாமற் சைவநெறியில் வருவ தருமையெனப தணர்த்துதல்.

மனுஷயசனமதநில வகது மலையிலும் வாநத்திலும் குறவ ரிருளரைப்போ லாகாமல், பிராமணாதி நாலு சாதியர்களும் நிறைந்திருக்கும் தேசத்திற் பிறப்பதுபுண்ணியம். அதிலும் வேதோக்தாசாரம் நடவாத மிலேச்ச தேசமொழிந்து புண்ணிய தேசத்தில் ஜனிப்பது மிகுந்த புண்ணியம். அதிலும் பூமியிலே ஈனசாதியாக ஜனியாமல் பிராமணாதி சமயத்தில் வருவது

* அதியுக்தமான புண்ணியம். அதிலும் பரசமயங்களிலே போகாமல் சிவனைப் பரதத்துவமென் றறிந் தடையும் சைவ சமயமாவதற்குப் புண்ணிய மிவ்வளவென்று சொல்லப்போகா தென் றிதனைபொருள.

* அதியுக்தம்-மிகுதியாகச் சொல்லப்பட்டது.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

மனுடர் சன்மிக்கும் பூமியில்வந்து பிறந்தாலும் வேதாகம மார்க்கமில்லாத தேசத்துப் பிறவாது உள்ளதேசத்து உற்பவிப்பது மிருகத அறம். அதிலும் தாழ்ந்த ஜாதியைவிட்டு வேதாதி மார்க்கிகளாய்ப் பிறந்து பாஷண்ட மதங்களிற் பரிசயம் பண்ணாத புண்ணியம் பண்ணுதல் அரிதென்று பாஷிக்கின்றார்.

வெளிப்பொருள்.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

மானுடப் பிறவியினும் உத்தம சமயத்துக் குரித்தாய் உத்தம நாட்டிற் பிறக்கு முத்தம ஜாதியே அதற்கு வாயிலெனப தாம்.

---

## நிரம்பவழகியருரை வருமாறு

முன் சொல்லப்பட்ட மானுடசன்ன மெடுத்தாலுந் தவஞ்செய் சாதியிலேவந்து தோன்றுதற்கு அரிதென்று முறைமை யருளிச்செய்கிறார்.

நேர்பயில் தேசந்தன்னில் - மானுடர்நெருங்கின தேசத்தி ல்,—நான்மறைப் பயிலாநாட்டில் விரவுதலொழிந்து தோன் றல் மிகசபுண்ணியத்தாலுகும் - வேதாகம புராண சாத்திரங் கள் வழங்காத நாட்டிலே சென்று பொருந்தாமல், இவை வழ ங்குகிற தேசங்களிலே வந்து ஜனிக்கிறது மிகுந்த புண்ணியங்க ளாலே யுண்டாகாநிற்கும். இதுவன்றியும்,—தாழ்வாயினீற் றிழை விட்டுத் தவஞ்செய்சாதியினில் வந்து-இந்தப் பூமியிலே அகோர ஜாதியில் செல்லாமல் தவத்தைக் குறித்தான நல்ல ஜாதியிலே வந்து தோன்றி; இப்படி வந்து தோன்றினாலும்,—பரசமயங்க ட்கெல்லாம் பாககியம் பண்ணொணாதே- சிவனைக் கர்த்தாவாக க்கொள்ளாத புறச்சமயங்களிலே செல்லாத சிவபுண்ணியம் பண்ணுதற்கு அரிதாம்.

இதனாற் சொல்லியது, வேதாகம புராண சாத்திரங்கள் வழங்குகிற தேசத்திலேவந்துபிறக்குகைக்கும், அகோரஜாதியை விட்டுத தவஞ்செய் ஜாதியிலேவந்துபிறக்குகைக்கும், அப்படிப் பிறக்க விடத்தும் சிவனே தெய்வமென றறியாத பரசமயங் களிலே செல்லாதிருக்குகைக்கும், சிவபுண்ணியம பண்ணுதற்கு அரிதென்று முறைமை யறிவித்தது.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

—0—

நேர்பயில் தேசந்தன்னில் - அம்மானுடப் பிறவியினுமானு டர் வாழ்கின்ற விவ்வுலகத்துள்,—நான்மறை பயிலாநாட்டில் விரவுதலொழிந்து தோன்றல் - வேதாகம வழக்கு மிக்குடைய வுத்தமநாட்டில் தோன்றுதல்,—மிக்கபுண்ணியத்தாலுகும் - மிகுந்த புண்ணியத்தாலுண்டாம்,—தாழ்வாயினீற் றிழைவிட்டு,

தவஞ்செய் சாதியினில்வந்து- அவ்வுத்தம நாட்டில் தோன்றி யிழிகுலத்தில் தோன்றாது உத்தம குலத்திற் றோன்று தல் செய்தும்,—பரசமயங்கட் கெல்லாப் பாக்கியம டைவொ ணுதே - அவ்வுத்தம குலத்திற் றோன்றினும் புறச்சமயங்களி ற் செல்லா தலமரவொழிதற்கு வாயிலாகிய வுத்தமசமயத்திற் புரிந்தாதலாகிய நன்மை யொருவனுக் குண்டாத லரிதெனவு தாம்

---

## மறைஞானதேசிகர் உரை.



மேலதனினுஞ் சிறப்புவிதி யுணர்த்துகின்றது.

வாழ்வெனு மையல்விட்டு வறுமையாஞ் சிறு மைதப்பித், தாழ்வெனுந் தன்மையோடுஞ் சைவமாஞ் சமயஞ்சாரு, மூழ்பெற லரிதுசால வுயர்சிவ ஞானத் தாலே, போழிள மதியினனைப் போற்றுவா ரருள பெற்றோ. (கூக)

(இ-ள்.) வாழ்வெனு மையல்விட்டு வறுமையாஞ் சிறுமைதப்பித் தாழ்வெனுந் தன்மையோடுஞ் சைவமாஞ் சமயஞ்சாரு மூழ்பெற லரிது 'தல சுக்குமமாகிய விருவகைச் சரீரங்க ளிற் செல்லாமற் றனமிகுதியா லுண்டாகிய மயக்கத்தையும் விட்டு, தாரித்திரமாகிய சிறுமைச் சமுத்திரத்திலும் வீழாமற் சாத்துவிதத்தா லுண்டாகிய வெண்வகைப் பத்தியுடனே பொருந்திச் சன்மார்க்கதபோபலத்தா லுண்டானதாய சன்மார்க்கப் பிரமாணமான சைவ சமயத்தின்கண் வந்து பொருந்தி நிற்கப் பெறுவது மரிது.

சால வுயர்சிவ ஞானத்தாலே போழிளமதியி னானைப் போற்று வா ரருள்பெற்ரோ.

அச்சமயத்தின்கண் வந்தவரோ மிகவுமே லான ஞானத்திலே யர்த்தசந்திரனையுடைய சிவன தருளைப்பெற் றனவரதமு மவனை யனுசந்தானம் பண்ணி யிருப்பர்கள் எ-று.

இதற்குச் சிந்திய விசுவ மெனவறிக. (கூ)

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

—o—

மே லிதவும் சிவனையே வழிபடுமவர்கள் மோக்ஷத்தை யடைவாகளென ப துணர்த்துதல்.

வறுமையாஞ் சிறுமைதப்பி வாழ்வெனு மையல்விட்டு-தரித்திரமானது மிகவுங் கஷ்டமென்று மிகநச் சிறுமையிருலே ஐஸ்வரிய மதிகமென்று அபேக்ஷித்தும் ஐஸ்வரியம்வந்த காலத்து அந்த ஐஸ்வரிய + பரவசனுயிருந்தானுகில் அதினு ‡லஞ்ஞானுக்கிராந்தமா யிருக்கிற ஞானத்தை யுடையனுவன. அஞ்ஞானத்தினுலே ஞானம் † திரோகித மாகிறபொழுது சாதவிக ராஜசகுணங்கள் கீழ்ப்பட்டுத் தாமச மேலிட்டுக காமமோகிதனுய்ப பதிவ்ருதா ஸ்திரீ ளிடங்களிலும் அபிலாஷையுடையவனுய் பரஸ்திரீ பரத் திரவ்யாதி ¶ லோலுபாதிய தருமப்பிரவர்த்தனு யதினுலே நரகத்தை யடைவன். ஆகையால் தரித்திரம் வந்தகாலத்து சிறுமையென்று துக்கப்பட்டு ஐஸ்வரியத்தை யபேட்சியாமல்,ஐஸ்வரியம் வந்தகாலத்திலும் அதி லத்யந் × தாபி நிவேசம் பண்ணும லிருக்கவேணும்.—

+ பரவசன் - ஒன்றுக்கு வசப்பட்டவன். ‡ அஞ்ஞானுக்கிராந்த - அஞ்ஞானமேலிட்ட. † திரோகிதம் - மறைக்கப்பட்

ட்டது. ¶ லோலுப - ஆசையுள்ள. × அபிநிவேசம் - மனது நன்ருய்ப் பற்றுதல்.

தத்த்வம் பராபரம் - ஶைவே ஸ்வயஸ்யாதிகம் கஷ்டம்
ஸ்வயம் ஸந்த்யேதவாஞ்சி | தஸ்மிந் த்ருஷ்டே பரஸ்மிந்
ஸ்வேச்சயா ஸ்ரீகண்ட்ய ஸாமாந்யவிஶேஷணே: || ரஜஸ்ஸ்வ க்ஷீர ஸ்காரா
த்ருஷ்டா ஶைவஸ்ய ஷ்டபுத்ர: | தஸ்ய ஸதீஷ்டம் ஸ்வர்க்க
மோக்ஷாதிகம் ஸாம்ஸாரிகம் ஸ்ருதி ||

தாம்வெனுந் தன்மையோடுஞ் சைவமாஞ் சமயஞ்சாருமூழ் பெறலரிது சால வுயர்சிவஞானத்தாலே போமினமறியிருளைப் போற்றுவா ரருள்பெற்ருரே-சிவன § ஸ்வதந்த்ரன † நாம்பரதந்த்ரர், • சிவனைகொடுக்க நாம்புசிப்பவர், சிவனுக்குஞ் சிவபக்தர்களுக்கும் நாமடிமையென்னு மியல்புடனே சைவசமயத்தில் சார்வதற்குப் புண்ணியம் பெறுகிறது மெத்தவரிது. சிவஞானத்தாலே சிவனை வழிபடுமவர்கள் சிவனருளாலே சிவசாயுச்சியத்தை யடைவர்களென் றிதனபொருள்.

§ ஸ்வதந்த்ரன் - சுவாதீனன். † பரதந்த்ரர்-பராதீனர்.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—o—

வேதவிரோத மதங்களைத் தபபி வேதாதிக்கருகமாய் வந்து பிறந்தாலும் வேதசார சைவசமயஞ்சாருதலரிதென்று சாற்றி, சார்ந்தவர்களுக்குட் சிவசமாதிஞான பூசையினுலே சிவனைப் பூசிப்போர் சதர்த்த சிவதீக்ஷாவான்களென்று சாற்றுகின்றூர்.

வெளிப்பொருள்.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

—o—

உயர்ந்த சாதியினும் உயர்ந்த குடிப்பிறப்பே யதற்கு வாயி லாம். அவ்வுயர்ந்த குடியிற் பிறந்து சைவத்திறனெய்திச் சித் தாந்த நெறியுணர்ந்து சிவபிரானை வழிபடப் பெறுவா ராயின், அவர் மலந்தானாகிய வவ் வலமரலை நீங்கி வீடுபேறெய்து வரெனபதாம்.

வாழ்வாவன ? குலம் இளமை கல்வி செல்வம் அதிகார மென்னு மிவை.

மையல் செருக்கு.

வாழ்வெனு மையலெனவும், வறுமையாஞ் சிறுமையெனவு ம், காரியத்தைக் காரணமாக வுபசரித்தார்.

இவை மூன்று செய்யுளாலும் அம்மலபந்தத்தைப் போக் குதற்குரிய வாயில் இவையெனபது கூறப்பட்டது.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

—o—

முற் சனனங்களிலே சிவபுண்ணியங்களைப் பண்ணிவந்து சைவசமயங்களிலே வருகைக்கு அறிகுன் றருளிச்செய்கிறார்

வாழ்வெனு மையல்விட்டு - ஐஸ்வரியமென்கிற மயக்கத் தைவிட்டு,—வறுமையாஞ் சிறுமைதப்பி - ஒன்றுமற் றிருக்கிற தாரித்திரமென்கிற வியாதிக்குப் பிழைத்து,—தாழ்வெனுந் த ன்மையோடு-பத்தியென்றசொல்லப்பட்ட வுண்மையுடனே,— சைவமாஞ் சமயஞ்சாருமூழ்பெறலரிது - சைவசமயமென்று சொல்லப்பட்ட சமயத்திலே வந்து பொருந்தத்தக்க சிவபுண்

ணியத்தின் முறைமை யாவர்க்கும் பெறுதற் கரிது ஆனாலந்த வுண்மையைப் பெறுவ தெப்படி யெனனில்?—சால வுயர்சிவ ஞானத்தாலே போழிளமதியினானைப் போற்றுவா ரருள் பெற்றோர் - அதிலே மிகவு மேலான சிவஞானத்தாலே திரு விளம்பிறையைச்சாத்தி எழுந்தருளியிருக்கிற பரமேசுவரனை வழிபடுகிறவர்கள் அவனருளைப் பெற்றவர்கள்.

இதனாற் சொல்லியது வாழ்வெனகிற மயக்கத்தையும் வறுமையென்னுஞ் சிறுமையையும் விட்டுப் பதியுடனே கூடிச் சைவசமயத்திலே வந்து பொருந்ததக்க சிவபுண்ணியத்தைப பண்ணுகைக்கு அரிதெனறும், மேலான சிவஞானத்தாலே பரமேசுவரனை வழிபடுகிறவர்களே அவனுடைய திருவருளைப் பெற்றவர்களெனனு முறைமையையு மறிவித்தது.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

—o—

வாழ்வெனு மையல்விட்டு - குலமினமை கல்வி செல்வ மதிகாரமெனனு மிவைகளினு லுண்டாகிய செருககொழிந்து,—வறுமையாஞ் சிறுமைதப்பி - இவைகட் கெதிர்மறையாலுளவாகிய சிறுமைகளினின்று நீங்கி யுயர்ந்தஜாதியினு முயர்ந்த குடிப்பிறப்பெய்தற்கு வாயிலா மவ்வுயர்ந்த குடியிற்பிறந்து,—தாழ்வெனுந் தனமைபோடும் - மெய்யனபோடும், — சைவமாஞ்சமயஞ் சாரும் ஊழ்பெறல் - சைவசமயத்தி னெய்தும் புண்ணியப் பேறு,—சாலவரிது - மிகவுமரிதாம்—உயர்சிவ ஞானத்தாலே - அதினுமுயர்ந்த சித்தாந்த நெறியுணர்ந்து,—போழிள மதியினானை - பிளவுபட்ட விளம்பிறையணிந்த சிவபிரானை,—போற்றுவார் - வழிப்படப்பெறுவா ருளராயின,—அருள்பெற்றோரே-அ

வர் மலத்தாலாகிய அவ் வலமரலை நீங்கி வீடுபேறு எய்துவரெ
னபது.

இவை மூன்று செய்யுளாலும் அம் மலபந்தத்தைப் போக்
கற்குரியவாயி விலையென்பது கூறப்பட்டது.

---

## மறைஞானதேசிகர் உரை.

மேற் றன்மத்தாற சரீரமெடுக்குஞ்சிறப்பும், இதற்
றோன்றியும் பயன கொள்ளாதார் சிறப்
பினமையு முணர்த்துகின்றா.

மாறுடப் பிறவிதாறும் வருத்தது மனவாக்காய
மானிடத்தைத்தமாடு மரணபணிக் காகவன்றே, வானி
டத் தவருமணமேல் வந்தரன் றனையர்ச்சிபப, றுனெ
டுத் துழலுமம ரொன்றைய முணராரந்தோ. (௬௨)

(இ-ள) மாறுடப் பிறவிதாறும் வருத்தது மனவாக்காய மானிடத்தைத்தமாடு மரணபணிக் காகவன்றே — சிவஞானமாக்கட்குப் பெறுதற்கரிய மானுடவாக்கையைக் கன்மமலத்தால் எடுப்பித்த தேதுகாரணத்தாலென்னில்? திரிவித கரணங்களாற் பசுவினது ஈண்டாகாநின்ற பஞ்சகவ்வியாதிகளை யாட்டிக்கொள்ளுஞ் சிவன றனைவழிபடற் பொருட்டன்றே! அஃதேதுக்காரணத்தாலென்னில்?

வானிடத்தவருமண்மேல்வந்தரன் றனையர்ச்சிப்பர் — சுவர்க்கபோகம் பூமியாதலால் விண்ணின்றிக் கன்ம பூமியின்கணிழிந்துவந்து பிரம்மா பிரமபுரத்தினும், மால் திருமாற்பேற்றினும், இந்திரன் கண்ணார்கோயிலினும், இப்படி மற்றுமுள்ள சுரர்களாதிகளெல்லாங் கன்மகாண்டத்தின் வழிநின்று சிவனைப் பூசியாநிற்பர்கள்.

உளனெடுத்தழு ரைமைறான ரையுமுணராரர் தோ. வயலிற் பயிரிட்டவன் போகத்தை யாண்டு புசியாமல் வேறொரு தலத்திற்புசிக்கு மாறுபோலத் தேவர்களு மிங்ஙனம பூமியில் வந்து வழிபட்டுத் தங்களுக்குவேண்டும் பலன்களைப் பெறக்கண்டிருந்தும் ஐயோ! இத் தவானமாக்க ணல்லசரீரத்தை யெடுத்து விருதாவிலே திரிந்து காலங்கழிக்குமறிவில்லாதவர்கள், ஒன்றையு மறிகிறாக ளில்லை.

அந்தோ வென்ப திரக்கக் குறிப்பு.

இதற்குக் காலோதகரதமறிக (கஉ)

## சிவாக்ரயோகியருளா வருமாறு.

—o—

மேல் மனுஷ்யதேகத்தில் வந்தும் சிவனைப் பூசைபண்ணு தவன சனமமாநிஷபலமெனப உணர்த்துதல்.

மனுஷ்ய ஜனமத்தைக யுண்டாக்கினது, பசுவினிடத்தில் பால் தயிர் நெய் * கோசல † கோமய மென்னுமைஞ்சையுமுவந்தாடியருளி யவ்வாருட்டினபெயாக் சஞ்சு மலத்தையு நீக்குமானை மனசினாலே நினைக்கவும் வாசகினாலே தோத்திரம்பண்ணவு மகைகளிலே பூசைபண்ணவும் கால்களினாலே பிரதட்சணம் பண்ணவும சிரசினாலே வணங்கவும் செவியினாலே சிவனுடைய புகழைக் கேட்கவும் கண்ணினாலே யவருடையதிருமேனியைச் சேவிக்கவும் என்பது மறியார்கள்.—தேவலோகத்திலுள்ளான பிரமாதிகளும் பூமியினகண்ணே வந்து சிவனைப்பூசிப்பார்களாகையால் இந்தமனுஷ்ய தேகங் கிடைத்தற் கரிது. இந்தத்தேகத்திலே யிருக்கையிலே சிவபூசையைப்பண்ணி மோட்சத்தைப் பெறுகிறுக்கில் பின்னைமோட்சங் கிடைப்ப தரிதென்பதை விசாரிக்கிறார்களில்லையென் றிதனபொருள்.

*கோசலம்-பசுமூத்ரம், +கோமயம்-பசுமலம், சாணி.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

———o———

மானுடசன்ம மெடுத்தும் சிவனைப் பூசைபண்ணுதிருந்தால் நிஷ்பலமெனறு நிகழ்த்துகினறூர்.

வெளிப்பொருள்.

———

## சிவஞானயோகியருரை வருமாறு.

———o———

அவ வலாரலே நீக்குதற்பொருட்டுச் செய்யப்படுமரன் பணி ஏனைப்பிறவிகளிற் கூடாமையாற் பிறவிவிசேடம வேணடப்படும்; அவ வரனபணி பயனபடுதல் ஏனையுலகங்களிற் கூடாமையால் தேயவிசேடம் வேண்டப்படும், இவவுணமை ஏனையோரறியமாட்டாமையிற் சாதிவிசேடம் குடிப்பிறப்பு விசேடம வேணடப்படுமென்பதாம்.

இதனுனே அவை வாயிலாதற்கு உரிமை கூறப்பட்டது. வாககாயமெனனுந் தொகைசசொல் வடநூனமுடிபு.

———

## நிரம்பவழகியருரை வருமாறு.

———o———

மேல் மானுடசனனத்தைஎடுத்தது மனவாக்குக்காயங்களினுலே சிவனை வழிபடுதற்கென றருளிச்செய்கிறூர்.

மானுடப்பிறவிதானும் வகுத்தது - மானுடமான சனனத்தைக் கற்பித்தது,—மனவாக்காய மானிடத் தஞ்சமாமரன் பணிக்காகவன்றே - பசுவினிடத்தி லுண்டாகப்பட்ட பஞ்ச

கௌவ்வியங்களையு மாடியருளுகிற பரமேசுரனுக்குத் திருப்
பணிசெய்ய வென்றல்லவோ மனவாக்குக் காயங்க ளுண்டான
து,—வானிடத்தவரு மண்ணில்வந் தரன்றனை யர்ச்சிப்பர்-தெ
ய்வலோகத்திலுள்ள பிரமாவிஷ்ணுஇந்திரன் முதலாயுள்ள தே
வர்களும் பூமியிலேவந்து பரமேசுரனைப் பூசியா நிற்பர்கள்,—
ஊனெடுத் துழலுமூம ரொன்றையு முணராரதோ- தோலிரத்
த மிறைச்சிமுதலான தேகத்தை யெடுத்துக் கன்மத்துக்கீடாக
சனன மரணங்களிலே சுழன்று திரிகிற மூகராயுள்ளவர்க ளி
வை யொன்றையு மறிகிறார்களில்லையே! அய்யோ !

இதனாற் சொல்லியது, தெய்வலோகத்திலே யுள்ளதேவர்களும்
பூமியிலேவந்து சிவனையர்ச்சியா நிற்க, இந்தப் பூமியிலே வந்து
மானுட சன்மத்தை எடுத்து மனவாக்குக் காயங்களினாலே
சிவனை வழிபட்டுப் பிழைத்துப் போகமாட்டாமல், இவையிற
றையறியாமல் பிழைபட்டுப் போகிறார்களே மூகரா யுள்ள
வர்க ளென்னு முறைமையறிவித்தது.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

—o—

மனவாக்காயம் - சிவனைமனத்தானினைத்தும், வாக்கால்வ
ழுத்தியும், மந்திரஞ் சொல்லியும், காயத்தாற்பணிந்துஞ் செ
ய்யப்படும்,—ஆனிடத் தைந்துமாடுமரன்பணிக்காகவன்றோ- ப
ஞ்ச கௌவ்வியத்தினை யாடியருள்கின்ற வரன்பணி யேனைப் பி
றவிகளிற் கூடாமையால்,—மானுடப் பிறவிதானும் வகுத்தது-
பிறவிவிசேடமாகிய மானுடப்பிறவி வேண்டப்பட்டது.— வா
னிடத்தவரும - மேலுலகத்துள்ள மாயோன் முதலிய தேவர்க
ளும்,—மண்மேல்வந்தரன் றனையர்ச்சிப்பர் - அவ்வரன்பணிபய

ன்படுதல் ஏனையுகைத்திற் கைகூடாமையால் தேசவிசேடமாகி ய விமமண்ணுலகத்தில் வந்து அரன்றனை யர்ச்சிப்பர்—ஊனெடு த்துழலுமமர் அகதோ ஒனைரையுமுணரார் - இவ்வுலகத் திச் சரீரம் பெற்றும் இவவுண்மை யேனையோரறிய மாட்டாமையா ற் சாதிவிசேடம் குடிப்பிறப்புவிசேடம் வேண்டப்படும்.
இதனானே யவை வாயிலாதற குரிமைகூறப்பட்டது

## மறைஞானதேசிகர் உரை.



இப்படி யருமைப்பட் டாக்கை யெடுத்
தாலு மதற்கு நிலையில்லையென்
றுணாத்துகிறுர்.

கருவினு ளழிவதாயுங் கழிந்திடா வழிவதாயும், பரிணமித் தழிவதாயும் பாலனு யழிவதாயுந், தருண னு யழிவதாயுந் தானரைத் தழிவதாயு, முருவமே யழி வெய்தாறு முள்ளபோ தேயாருய்ய. (கூசு)

(இ-ள்.) கருவினு ளழிவதாயும் — கருப்பாசயத்தி லழிவதாயும், அதுமூவிதமாம்:சிராவசம்,பாதம்,அவப்பிரசவம்என்பது' நாலுமாதத்திலழிவது சிராவம்,ஐந்திலுமாறிலுமழிவது பாதம், அதற்கு மேற்பட்ட மாதத்திலழிவதுஅவப்பிரசவம்.

கழிந்திடாவழிவதாயும். — பத்தாமாதத்திற் பிறந்தவுடனே மரிப்பதாயும்.

பரிணமித்தழிவதாயும் — மூன்று வயதிருந் தவத்தாததாந்தை யடைந்தழிவதாயும்,

பாலனுயழிவதாயும் — அதற்குமேல் பதினாறு வயதி[illegible]யும்,

| | |
|---|---|
| தருணனாயழி வதாயும | அதற்குமேலே நாற்பதினளவுந் தருணாவ த்தையின் மரிப்பதாயும், |
| காணனாத் த ழிவதாயும் | அதற்கு மேற்பட்ட விருத்தாவத்தையின மரிப்பதாயும், |
| உருவவேயழி வேயாரூ துள ளபோதே பாரு யய | இப்படிக கருப்பாசயக் கொடுகதுச் சரீ ர நிலையின்றி முடிய வழியக் காண்கையாற் றேகமுள்ள போதே நிலையாமையை யறிந்து சிவ தன்மங்களைச் செய்து மோட்சத்தை ய டை. எ-று. |

ஏகாரந் தேற்றம்.

இதற்குச் சிவதருமோத்தரத்து மறிக. (கங)

## சிவாக்ரயோகியருரை வருமாறு.



மே லாக்கை நிலையல்ல வாதலாற் சடிதியிற் சிவனை வழி பட வேண்டுமென்ப துணர்த்துதல்.

மாதாவினுடைய கர்ப்பத்திலே யிருக்கையிலே கருவழிந்து போவதாயும் உதரத்திலும் பூமியிலே விழுந்தவுடனே சாவதுமுண்டு, சிறிதுகாலிருந்து வளர்ந்து சாவதுமுண்டு, வித்யாப்யாச வயசாய் சாவதுமுண்டு, * உன்மத்த பஞ்சவிம்சதி வயசிற் சாவதுமுண்டு, நரை திரைவந்து சாவதுமுண்டு, ஆதலால் மனுஷ்யர்க்கு நூறுவயசுண்டென்று சொன்னதற் குள்ளே இன்னகாலம் சாவென்பதைத் தெரியாதென்றறிந்து; காசரணு திருடமா யிருந்துள்ளபொழுதே சிவனைப் பூஜித்தும் வைகலைச் செய்யென்றிதன்பொருள்.

* உன்மத்த - யௌவனத்தில் மனோவிகாரமுள்ள.

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—o—

சரீரம் நிலையன்றென்று சாற்றுகின்றார்.

கழிந்திடா தழிவதாயும - ஜனனிக்கு மவதரத்தில் செத்துப் பிறக்கின்றதாயும்,—உ[illegible]வமேயழிவையானால் - சரீரமப்படிச் சாவதானால் —உள்ளபோதேபாருய்ய - சரீரமிருக்குங் காலத்திலே பிழைக்கும் வகை தேடு.

மற்றவை வெளிப்பொருள்.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

—o—

மானுடயாக்கை அத்துணைப் பெறுணாதகாயினும் இத்துணைப்பொழுது நிற்குமென அறியவாராது நீர்க்குமிழிபோல் எப்பொழுது மழிதன் மாலைத்தாகலின், இவ்வாக்கை நிலையாமை யிளமை நிலையாமைகளை உணரவல்லார்க்கே அவற்றாகிய மையலை விடுதல் கூடுமென்பதாம்.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

—o—

மீளவு மிகக மானுட சனனந்தானும் நிலைநிற்பதொன்றல்ல, சரீரம்விட்டுப் போவதற்கு முன்னே சடுதியிலே பரமேஸ்வரனை வழிபடவேணுமென்று அருளிச்செய்கின்றார்.

கருவினுளழிவதாயும் - மாதாவினுடைய கர்ப்பத்துக்குள்ளேதா னழிவதாயும்,—கழிந்திடா வழிவதாயும் - ஜனித்தமாத்திரத்திலே மரிப்பதாயும்,—பரிணமித்தழிவதாயும் - சிறிது வள

ரந்த மரிப்பதாயும்,—பாலனுயழிவதாயும்-வாலாவத்தையிலே மரிப்பதாயும்,—தருணனுயழிவதாயும் - தருணவதசையிலே மரிப்பதாயும்,—தானரைத்தழிவதாயும் - விருத்தருய் மரிப்பதாயும்,—உருவமே யழிவேயாகுல் - இப்படி முடிய மரணமேயாகுல்,—உள்ளபோதே பாருய்ய-ஆகையாலிந்தச சரீரமவிட்டு போகாமலிருக்கிறபொழுதே பிழைக்கத்தக்க உபாயங்களை விசாரியார்.

இதனுற் சொல்லியது மாதாவினுடைய வுதரத்திலேயிருக்கிற வவதாரத்திலும் பிறந்தவவதாரத்திலும் பால தருண விருத்தாவதசையிலும் எப்பொழுதும் இந்தச சரீரம் பொய்யாயழிந்தபோம் ஆகையினுல் இந்தசசரீரமிருக்கையிலே பரமேஸ்வரனை வழிபட்டுப் பிழைக்கவேணுமெனனு முறைமை யறிவித்தது.

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

(மானுடயாக்கை யதனைப்பெருமைத்தாயினும்,) கருவினுளழிவதாயும்-மாதாவினுடைய கருப்பத்திற்குனே யழிவதாயும்,—கழிந்திடாதழிவதாயும்-பிறக்குடனே யழிவதாயும்,—பரிணமித்தழிவதாயும் - பிறந்து சிறிது கால மிருந்து அழிவதாயும்,—பாலனுயழிவதாயும் - பாலனு யழிவதாயும்,— தருணனுயழிவதாயும்-தருணனுயழிவதாயும்,—நரைத்தழிவதாயும் - நரையுண்டாகி விருத்தத்தசையி லழிவதாயும்,—உருவமேயழிவேயாகுல் - இதனைப்போது நிற்குமெனறு அறிபவாராது நிற்குமிழிபோ லெப்பொழுதும் அழிதன் மாலைத்தாகலின,— உள்ளபோதே பாருய்ய - இவ்யாக்கை நிலைபாமை இளமை நிலையாமைகளை யுணரவல்லார்க்கே யவற்குனுகிய மையலை விடுதல் கூடுமென்பதாம்.

## மறைஞானதேசிகர் உரை.

மேற் கருவி காரணமின்றாநிலையல்லவென்பதற் குதாரணமிட்டுணர்த்துகிறார்.

ஒருபுல னுகரும்போதங் கொன்றிலை யொன்றி
ன்பாலும், வருபயன் மாறிமாறி வந்திடு மெல்லாமா
று, மொருபொழு துணரினுண்டா மல்லதிவ் வல்லல்
வாழ்க்கை, மருளகன வதுவும்போல மாயும்பின் மாயு
மன்றே. (கஎ)

(இ - ள்) ஒருபுல னுகருமபோ தங் கொன திலை யொனறின பாலும் — ஆன்மா வோரிந்திரியத்திலேநின றதற் கேற்ற விடயங்களைப் பொருந்திப் புசிக் கும்—தற நின்ற விந்திரியங்க ளொன்றினு மிவனுக் கொருபிரயோசனமு மில்லை. ஆ கி லிதனாற் பிரயோசன மில்லையோ வெ னனில் ?

வருபயன் மா றிமாறி வந்திடும் — இப்படி வருகிற பிரயோசனங்க டானுஞ் சதசஞ் சோதிரமிடமாக நின்று விடயத் தைக் கிரகித் ததனைவிட் டேனையவு மிவ்வா று பொருந்திச் சீவியாநிற்கும்.

எல்லா மாறு மொரு பொழுது — நித்திரை யவத்தைத்தி லிவைக ளெல்லாஞ் சேரச் சீவியாதொழிந்து நிற்கும்.

உணரினுண் டாம் — விழித்த வவத்தைத்தி லிவைபெல்லா முண் டாய் மீளவுங் காரியப்படா நிற்கும்.

அல்லதிவ் வல் லல் வாழ்க்கை — (அல்லது மிவ்வாழ்க்கை யல்லலெனப் பத மாறியும்மை கொடுத்துக்கொள்க.) அஃதாவ து, அதீதமன்றியிலே தானவாழ்க்காணுகிறு

மிருதவாழ்க்கை துக்கவாழ்க்கையேயாம். அப்படித் தான்வா ழும் வாழ்வுதானு நிலைகருகின்றதோ! அல்ல

மருளகன் வரு மயக்கத்தைப் பொருந்திய கனவுபோல வும்போல மாயும் தன்னுடைய அனுபவிசாரித்துப்பார்க்கில் அந்தக பின் மாயுமன்றே கனவு மழிந்து பொய்யாய்ப் போகிறதா யிருக்குமென்று கருதி யாதொருவன் சிவ னை வழிபடுகிறு னவனே பரமான பதத்தையடைவன். எ-று.

இதற்குச் சிந்தியாகமம் (கஉ)

---

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

—o—

மேலிதுவுமது.

பஞ்சேந்திரியங்களிலே ஒன்றிலே ஆன்மாபொருந்திப் புசி க்குமிடத்து நின்ற காலுமில்லை. இப்படி எல்லா விந்திரியங் களிலு மாறிப் புசிக்கும் சமுதாயத்திலே ஐந்து இந்திரியங்களு ம் சீவிப்பதில்லையாம். இவ்வாறு அல்லலையுடைய விந்த தேகே ந்திரியமெல்லா மயக்கத்தைப் பொருந்தின கனவுபோலக் கெ டுகிறது பொய்யல்லவே! உள்ளபொழுதே மோக்ஷத்தைப் பெற முபாயம் விசாரிக்கி லுண்டாமல்லது பயனில்லையென் றிதன்பொருள்.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—o—

மேலிதுவுமது.

ஒருபுலனுகரும்போதங் கொன்றில - சத்த ஸ்பரிச ரூப ரச கந்தங்களுக்குள் ஒரிந்திரியத்தால் ஒரு விஷயத்தை புசிப

ம்,—மாயமன்றே - நானசொல்லுகிறவிது பொய்யல்ல, உண்மையேயாம்.

இங்ஙன சொல்லியது ஆனமா வோரிந்திரியத்தாலே ஒரு விஷயத்தைப் புசிக்கும்பொழுது நின்ற விசந்திரியங்களால் இவனுக் கொரு பிரயோசனங்களு மில்லையென்றும், இப்படி வருகிற பிரயோசனங்கட்காறு மாறி மாறி வருமென்றும, இவனைத்தைப்பட்ட பொழுது எல்லாப பிரயோசனங்களுஞ் சேர மாறி மாறிப்போமென்றும, இவனுணைதகவி—த்து எல்லா விஷயங்களு மீளவு மடாமென்றும், துகையா விகாங்ஞ் சொல்லப்பட்ட துகதத்தைப் பொருந்தின வாட்சைமின் முறைமை கனவிற் காரியதலை நனவிலே பார்த்தவிடத்துப் பொயயான தன்மைபோலப் பொய்யேயாமென்னுமுறைமையு மறிவித்தது

---

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு·

ஒருபுலன் - அவவாக்கையின கண்ணதாகிய அறிவும்,—றுகரும்போ தங்கொன்றிலே - அநுபவிக்குங்கால் விடயங்களை யொவ்வொன்று மறிவதன்றி யொருங்கே யறியமாட்டாது.—ஒன்றினபாலும் - ஒருவிடயத்தின கண்ணு‍்,—வருபயன் மாறி மாறிவந்திடும் - வரப்பட்டதை விட்டுவிட்டு அறிவதன்றி யின்டயீடின்றி யறியமாட்டாது.—ஒருபொழு தெல்லாமாறும - அது முறக்கம் மூர்ச்சை முதலியவற்றிற் சிறிது மில்லையாய்விடும்.—அல்லதிவ வல்லல்வாழ்க்கை - அசேதனமின்றி யிவ்வியாக்கையின பொருட் டுளதாகிய செல்லத்துனியும்,— மருள்கனவதுவுப்போல - முறையே மயக்கப்பொருளும் கனாப்பொருளும்போ

ல,—மாயுமினமாயுமனறே - தோனறியபொழுதே மாய்வது மினடயே மாய்வதுமா மாகலான,—உணரிலுணடாம் - இவவறிவு நிலையாமை செல்வ நிலையாமைகளை யுணரவல்லார்க் கவற்றூருசிய வையலை விடுதல் கூடுமெனபதாம்.

## மறைஞானதேசிகர் உரை.

போகதுடனை முணாதநதினறது

அரிசனம் பூசிமாலை யணிந்துபொன் றுடைசாத்திப், பரிசன முனபுசெல்லப பாரகா பரிககககொட்ட, வருசினனமூததவொாஙகல் வந்திட வுணர்வுமானடு, பெரியவர் பேச்சுமினறிக் கிடததலாற பிணததோ டொபபா. (சுறு)

(இ-ள) (அரிசனம் பூசி மாலையணிகதபொனறுடை . பிணத்தோடொபபா)

தொங்கல் - சேறுடி.

"வெளிபபடை யெல்லாங் கிளத்தல் வெண்டா - வெளிப்படாச் சொல்லே கிளத்தல் வேண்டும்." எனபதனு லிதுவெளிப்படை.

இதற்குச் சுபாஷிதத்தில் முகரிதாகில், வாககிய பாரம்பரமென்னுஞ் சுலோகத்திற் காணக. (சுரு)

## சிவாக்ரயோகியருரை வருமாறு.

மேல் ராஜபோகம் அஞ்ஞானவேதுவென்பதை யுணர்த்துகிறது.

மகுடபூஷிதமுடையமர்ந்லயமுகியதாய வத்திராபரணங்களை யுந்தரித்துத் தனக்குச் சாதியிலேபெரியவர்களும் வயசிலேபெ ரியவர்களும் சேவித்துப் பின்செல்லத் தான சிவிகையாதிக ளிலேயிருந்து வாத்திய கோஷங்களுடனே சத்திரசாமரங் கொ டி சூழவர வறிவற்றுப் பேசுமின்றிய பெரியோர்களுடை ய வசனமுமின்றிக் கிடக்கையாற் பிணமுமறிவற்ற ராசாவும் சமானமென்றிதன்பொருள்.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—o—

இராசபோக மஞ்ஞான காரணமென் றுரைக்கின்றார்.
வெளிப்பொருள.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

—o—

அதிகாரஞ்செய்து செருக்குறுவார்க்குச் செத்தாரின் வேறல்ல வென்பது முண்மை நீக்குமுகிலமுச்சிபற்றி யறிவில்லார்க்கு அகனு ளுகிய மையலை விடுதல் கூடுமெனபதாம்.

உணர்வுண்டாமென்றதனை நம்பிக் தந்துரைக்க.

பெரியவரெனறது இழித்தற்கண் வந்த குறிப்புமொழி.

பெருமை அதிகாரித்தானுயது.

இவைமூன்றுசெய்யுளானும் வாழ்வெனுமையல்விடுதற்கு உ பாயங் கூறினவாறு.

---

## நிரம்பவழகியருரை வருமாறு

---o---

முன் சொல்லப்பட்ட பொய்யை மெய்யென்று மயங்குகிற பேதைகளானமாக்கள உயிர்போனவுடலுக்கொப்பானவர்களென்று அருளிச்செய்கிறார்.

அரிசனம்பூசி மாலையணிந்து பொன்னாடைசாத்தி - மஞ்சள்பூசிப் பூமாலைசூடி ஆபரணம்பூண்டு புடவையுடுத்து,—பரிசனம்பின்புசெல்ல - பரிஜனங்கள் பின்னே சேவித்துச் செல்ல,—பாரகர்பரிக்கவென்றது- சிவிகையார் சுமந்துகொண்டு,—கொட்ட - பலவாத்தியங்களுங் கொட்ட,—வருசின்னமூத-வங்கிச பரம்பரைவருகிற விருதுகளைச் சொல்லி சின்னமுதலானவைகளை யூத,— தொகைகல்வந்திட-சேருடிமுதலானவை நிறுற்ற,—உணர்வுமாண்டு - ஒரு பிறஞானமுமற்று,—பெரியவர் பேச்சுமானடு கிடத்தலாற் பிணங்களொப்பா - இவையிற்றாலே பெரியோரானவர்கள் நினைத்தபடியே வார்த்தை சொல்லாமற் கிடக்கையாலே பிணங்களை யொப்பர்.

இக்கூற்றுச் சொல்லியது,பிரபஞ்ச வியாபாரமொழிந்த ஒரு கர்த்தாவுண்டு புண்ணியபாவ முண்டென்று பகுத்தறிதற்றக்க பிரஞ்ஞையில்லாதவர்களைப் பிணங்களோக் கொப்பார்களென்று முறைமை யறிவித்தது.

---

## சுப்பிரமண்யதேசிகருரை வருமாறு.

---o---

அரிசனம்பூசி - சந்தனமுதலிய வாசனைத் திரவியங்களைப்பூசியும்,—மாலையணிந்து - வாசத்தோடுகூடிய பூமாலையணிந்தும்,— பொன்னாடைசாத்தி - பீதாம்பரம் போர்த்தும்,—பரி

சனம் பின்பு செல்ல-தன்பரிவாரங்கள் பின்னேவரவும்,—பா
ரகர் டரிக்க-சிவிகையார சுமக்கவும்,—கொட்ட-வாத்தியங்க
ள முழக்கவும்,—வரிசின்னமூத-வரிபொருந்திய சின்னங்களூ
தவும்,—தொங்கல்வக்திட-சத்திரசாமரங்கள் சூழவரவும்,—
அறிவுமாண்டு பெரியவர் பேச்சுமின்றிக் கிடந்தலால்-அறிவற்ற
திகாரஞ்செய்து செருக்குறுவ ராதலால்,—பிணத்தோ டொ
ப்பார்-செத்தாரின வேறல்லரென்பது.—உணர்வுடைமை-இ
க்கிழச்சிபற்றி யறியவல்லார்க்கு அதனுளாகிய மையலை விடு
தல் கூடாதென்பதாம்.

இவை மூன்றுபாட்டானும் வாழ்வெனு மையல் விடுதற்
குபாயம் கூறியவாறு.

---

## மறைஞானதேசிகர் உரை

ஆசையா லிரணுற டவனில்லை, நீங்கள் சிவனையே
வழிபட்டுப் பிழைப்புங்களென் றுபதேச
முணர்த்துகின்றார்.

பிணத்தினை யொத்துவாழ்வோர் பின்னடைப் பிண
ங்கள்போல, வுணக்கியேயுழல்வீ ருங்க ளுடலுயி ருணர்
வுமெல்லாம், கணத்திடைத் தோன்றிமாயுங் காயமென்
றறிந்தொருககால், வணக்குறீ ரரனேயென்றும் வான
வர் வணங்கவைப்பன். (௬௬)

(இ-ள்) (பிணத்தினை...வைப்பன்.) இப்படிப் பிணத்துக்
கொத்துவாழ்கிறவர்கள் பின்னே நடையாடுபிணம்போலவுயிரு
டனே சரீரத்தைப் போற்றிக்கொண்டு திரிகிறவர்களே வாருங்
கள், உங்கட் கொன்று சொல்லுவாம். உங்களுடைய சரீரமு

மதற் காதாரமாகிய வானமாவு மிவைக ளெல்லாங் கனமாறு
ருணமாக "நீரகுமிழி பூணகட்டி யற்றே நிலையிலா - வா
னைசகருச செய்த வரன". எனபதனுல் இப்படியாயிருக்குமெ
ன்று, நீஙகள் சிவதீக்ஷையு மந்திரமு மின்றி பொருககாலாறு
ஆறு சிவனை யாராதனை செய்வீராகில், அப்பொழு தவ னுங்
களைத் தனனுடைய புரமாகிய சிவலோகத்திலே வைத்துத் தே
வர்களெல்லாரும் வணங்கும்படி சுற்பிப்பனகாண்; ஆதலா லவ
னையே வழிபடுக.

இதற்குச் சுவச்சக்க வைரவத்துங் காலோத்தரத்தும
திக. (௧௧)

இரண்டாஞ் சூத்திரமுற்றிற்று.

பதியிலக்கண முற்றிற்று.

---

## சிவாக்ரயோகியருளா வருமாறு.

—o—

மேல் ராஜசேவை பண்ணுவதிற் பயனில்லை, சிவனையே வ
ழிபடவேண்டு மெனப துணர்த்துதல்.

பிணத்துக்குச் சரியாக வாழுகிற விராசாக்களை சேவித்
துத்தேகத்தையும் மனதையும் சோஷிப்பித் தழுங்கிற சுடைப்பி
ணங்களாகிய வறிவினரே! உங்கள் தேகமும் பிராணவாயுவும்
கரணமும் க்ஷணமாத்திரத்திலே நசித்துப் போமெனபதைத்
தறிந்து சிவனை யொருககால் வணங்கவே, தேவாகளுங்களை வ
ணங்கும்படி பதத்திலே சிவன வைப்பன்; ஆகையால் சிவனை
யே வழிபடுங்கோளென்று இதனபொருள்

ஸ்ரீமத் தசிவர்ஞுஸ்ரமா சாரியுூவரிய சைவபரிபாலக்
சிவாகரயோகி செய்தருளின

சிவஞானசித்தியார் இரண்டாம்சூத்திர
வியாக்கியானம் சமாப்தம்.

---

## ஞானப்பிரகாசருரை வருமாறு.

—o—

இராசசேவகரு மிம்மரியாதியென நிசைக்கின்றார்

பிணத்தினை யொத்தவாழ்வோர் பின - முன் சொன்னபி
ணத்தைக்கொத்த பிரபுக்கள் பிறகே,—கடைப்பிணங்கள் போ
ல - செல்லும் பிரேதங்களொப்ப,— உடல் - தூலசரீரம்,— உ
ணர்வுயிர் எல்லாம - கருவிக்கிருப்பாகிய கண் செவி நாக்கு
மூக்கு முதலியனான யிவைகளெல்லாம்,— உணக்கியே யுழற்றி
ர் - வாட்டியே திரிவீர், இதுகொண்டொருபய னுமில்லை.—கண
த்திடைத் தோற்றிமாயுவ காயமென் றறிகசொருககால் - நிமி
டத்திலுண்டாய் மடியுஞ் சரீரமென்று சிந்தித்தொருபோதாகி
லும்,— வைச்சுரத்திறநினை - சிவனை வந்திக்கக்கடவீர். சிவலோக
க்கொரித்து,— என்றும் வானவர் வணங்கவைப்பன - எக்கா
லத்தும தேவர்கள வந்திக்கத்தாபிப்பன.

இந்த விருத்தத்திற்குக் கணத்திடைத்தோன்றிநின்று க
ழியுமென்றறிந்து என்றும பாடபேதமுண்டு.

---

## சிவஞானயோகியருரை வருமாறு.

—o—

சிவபிரானை வழிப்பட்டுப்பெறும் இரவாச்செல்வத்தை
நோக்கக் கணத்தி லழிதன்மாலைத்தாகிய உடம்பின்பொருட்
டு வருத்தியீட்டப்படுஞ் சிறுசெல்வஞ் செல்வமன்றெனப் துணர
வல்லார்க்கு, இச்சிறுசெல்வத்தை வேண்டி அவ்வதிகாரச் செ
ருக்குடையார் பின்சென்று தின்றேக்கறுஞ் சிறுமையி னீங்குத
ல் கூடுமென்பதாம்.

உடலுயிருணர்வுமெல்லா முணக்கியென வியையும்.

இதனுளே வறுமையாஞ்சிறுமை தப்புதற்கு உபாயங் கூறியவாறு.

ஒன்றதாய் என்பது முதல் இதனையு மொழிபு கூறியதெனக்கொள்க.

---

## நிரம்பவழகியருரை வருமாறு.

---

இப்படி பிரஞ்ஞையு மற்று அசத்தியத்தைப் பொருளென றிருக்கிறவர்களை வழிப்பட்டவர்களுக்கு ஒருபயனு மில்லையாகையால பரமேஸ்வரனை வழிபடுகிறதே பயனென்றறிந்து வழிபடுங்கோளென்று அருளிச்செய்கிறார்.

பிணத்தினை யொத்து வாழ்வோர்பின் - இப்படிப் பிணத்தைப்போல வொன்றுமறியாமலவாழ்கிறது தானே பொருளாகத் திரிகிறவர்களைப்பிறகே.—நடைப்பிணங்கள்போல வுணக்கிப் புழல்கீர - நடந்து திரிகிற சவங்கள் போலச் சரீரத்தை வாட்டிக் கொண்டு திரிகிறவர்களே,—உங்களுட லுயிருணர்வுமெல்லாங் கணத்திடைத் தோன்றிமாயுங் காயமென்றறிந்து - உங்கள சரீரங்களும் பிராணவாயுவு முங்களுடைய வறிவுகளுஞ் சர்வமுங் க்ஷணமாத்திரையிலே யாவது மழிவது மாகாநிற்கும், சரீரத்தினுடைய தன்மை யிப்படியாயிருக்குமென்று ஆராய்ந்தறிந்து?—ஒருக்கால் வணக்குறீரனே யென்றும் வானவர் வணங்கவைப்பன - ஆகையாலே ஒருகணப்பொழுதாகிலும் பரமேஸ்வரனை வழிபாடு செய்கிறீராமாகில் லகவரகமு முங்களை யரிபிரமர் இந்திரன்முதலாயுள்ளவர்கள் வழிபடும்படி கற்பிப்பன் பரமேஸ்வரன

அண்டசமென்ற திருவிருத்தமுதல் பினைத்தினை என்றதி
ருவிருத்தமீறாக எடுக்குமப்பிரமாணம் சிவஞானபோதம் உ-ம
சூ, ௧௦-செ. "எங்குமுளனென்றாளவை பொன்றனற்றானிட
னவி, லெங்குமுளன வெற்றவனு- மங்க, னவையாவனற்றி
லதைப் பொன்னொளிபோலீச, னவையுடமை யாளாநா மா
வகு,, எனுமதனு கண்டுகொள்க.

இவ்வாற்றாற் சொல்லியது, ஒன்றுமறியாமல் வாழுகிறவர்களை
வழிப்பட்டால் ஒருபிரயோசனமுமில்லை யென்றறிந்து பரமே
ஸ்வரனை வழிப்பட்டால் மிருகபாசங்களிலே வைப்பன,
ஆகையால் பரமேஸ்வரனை யறிந்து வழிபடுவகோனென்னு மு
றைமை யறிவித்தது.

## சுப்ரமண்யதேசிகருரை வருமாறு.

—o—

ரனையொருக்கால் வணங்குறீர் - சிவனையொருக்கால் வ
ழிபடசெய்கின்றிலீர்! செய்யப்பெறின்,—வானவர் வணங்க
வென்றும வைப்பன - தேவர்களும வணங்கும்படியான் மிறவா
ச்செல்வத்தினை யளிப்பனாதலின்,—கணைத்திடைத் தோன்றிமா
யுங் காரடனென்றும,—அதனை நோக்கக் கணத்தன்கட்டோன்றி
யழிதன்மாலைத்தாகிய உடம்பின்பொருட்டு,—உங்களுடலுயி
ருணர்வுமெல்லாம-உங்களின் உடலுயிர் வுணர்வுமுதலிய வெல்
லாவற்றையும்,—உலக்கவேயுழல்கின்றீர்-வருத்தமுறும்படி
யுழல்வீட்டப்படும சிறுசெல்வம் செல்வமன்றெனப் பூணாவ
லோரிக்கு,— பிணத்தினை யொத்துவாழ்வோர் பின்னடைப்பி
ணங்களபோலாம்-இச்சிறுசெல்வத்தினை வேண்டிப் பிணத்தினை

